கணபதிதுணை.

# பிரபுலிங்கலீலை.



வேதாந்தசித்தாந்தவீரசைவசமயாசாரியராகிய

துறைமங்கலம்

## சிவப்பிரகாசசுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளியது.



இஃது

பாரிப்பாக்கம்

முனியப்பமுதலியாரவர்களால்

பார்வையிடப்பட்டு

புரசபாக்கம்

ஏழுமலைப்பிள்ளையவர்களது

விவேகவிளக்க அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.



யுவ ௵





சிவமயம்.

# பிரபுலிங்கலீலை - மூலம்.

காப்பு-விருத்தம்.

சுரர் குலாதியன் றூய்மலர் நந்தனம்
வெருக வார்கடற் பெய்த வயிற்றினோன்
கரக நீரைக் கவிழ்த்த மதகரி
சரண நாளுந் தலைக்கணி யாக்குவாம்.

முதலாவது

## துதிகதி.

பூவாய்நெடுங்கோட்டுறாசுந்தேன் கைக்கீன்முடங்குபொறியிலிதன்
ஞவாயொழுகிற்றெனவுலக மளந்தமாலுநான்முகனுங்
காவாயெனநின்றேத்தெடுப்பத் தானேபுவந்தெங்காதலைத்தின்
மேவாவமர்ந்தமாமணியைத் தொழுதுவினைக்குவிடைகொடுப்பாம். (க

ஆதிபகவன்றன்றுடை மணிப்பாண்பணியவவ்விறைவன்
பாதமிறைஞ்சுமதற்குநெற்றிப் பகையுமல்குற்பகையுமாந்
தீமதியுமாவும்விழுஞ் செயற்குழலைகைசெயாமலலை
மாதுபணியுமதற்குமன மகிழுமுமையைவணங்குவாம். (உ)

மாறனெடுத்துவளைக்குமொரு கரும்பையொடித்துமலர்சிதறி
காரியடுத்தவளிமாலை குலையத்தூக்குயர்ந்தோடி
வீரமடுத்துவினைப்பாகர் குழிப்பிலொழுகிவிளையாடு
மீரமதிச்செஞ்சடைக்கனிகல் யானையினைத்தாளேத்துவாம். (ங)

பாகமொருபெண்குடியிருக்கும் மாமணியிற்பரித்தமணி
[illegible]ழுவுற்றுடல்கருண்டு கிடக்குங்குவெண்டலைப்புழையிற்
போகமெல்லத்தலைநீட்டிப் பார்த்துவாங்கப்போகுமொரு
தோகைமயில்வாகனப்பெருமா னிணைத்தாட்கமலந்தொழுதிடுவாம்()

கலைமதிக்கும்புலவர்தமைச் சித்தர்குழாத்தைக்கடவுளரை
நிலையைமதிக்குமுனிவரரைத் திசைமாமுகனைநிரைவளையாச்
சிலையைமதிக்குநெடியோனை விழுங்கியுமிழாத்திறன்மாயைத்
தலையைமதிக்குமல்லமன்செங் கமலமலர்த்தாடலைக்கணிவாம். (௫)

வெள்ளவேணிப்பெருந்தகைக்கு யானுஞ்செய்யடிமைமெய்யா[illegible]
கள்ளவேடங்கொண்டிருந்த கள்வரெல்லாங்களங்கமறு
முள்ளமோடுமெய்யடியா ராகவுள்ளத்துள்ளுமருள்
வள்ளலாகும்பசவேசன் மலர்த்தாடலையால்வணங்குவாம். (௬)

மங்கலமாற்றுவழிமாற்றி யொருநல்வழியைப்பகர்வார்போற்
றங்கண்மதியிற்பலபிதற்றுஞ் சமையருளாகடமைநீக்கி
யங்கநிலையிற்றிலிங்கநிலை யிற்றென்றருளும்வீரசைவ
சிங்கநிலைத்தவருட்சென்ன பசவன்றிருத்தாள்சிரத்தணிவாம். (௭)

பார்க்குங்குமமென்முலைபாக னடியாரறுவைமாசடித்துத்
தீர்க்குஞ்செயல்போல்விச்சலமன் னவன்றன்சேனைசெய்பிழையைத்
தாக்குங்கரவாள்கொடுசின்ன பின்னமாகத்தடிந்திட்டுப்
போக்குங்கருணைமடிவால மாச்சன்பொன்னங்கழல்போற்றி. (௮)

பெண்ணிற்கரசுதானாக வென்புபெருநீற்றறைபிரசு
வண்ணக்கமலமலர்ப்பொய்கை யாகச்செங்கன்மாமழையா
நண்ணச்சிறியகரிக்கன்றுடன் குளையபரியாக்கர்பூகுதப்
பண்ணற்குரியவமுதுறழ்மூத் தமிழ்நால்வரையும்பணிகுவாம். (௯)

பரவைகேள்வன்றிருத்தொண்டத் தொகையுளடியார்பத்தியெலா
முருவமாகுஞ்சேரம னாதன்றுதியுஞ்சரண
ரரவணியானடியாரை மற்றையவர்களனைவருந்தாம்
பிரவினாளுமிருப்பவிடங் கொடுக்குமுள்ளம்விரிந்தன்றே. (௰)

வேறு.

தண்ணிலவுபுனைசடிலத் திறைபுகழல்லமதேவன் சரிதத்தின்பால், புண்ணியர்தஞ்செவிவாயிற் றமிழ்ச்சங்கத்தான்முகந்துபுகட்டினுறு, லெண்ணரியபுகழ்மலயத்திருந்தவனோவடிவெடுத்தானென்றுகூறப், பண்ணின்றமிழ்க்கவிதைச் சிவப்பிரகாசப்பெரும்பேர் படைத்துளானே.

வேறு.

[illegible]
[illegible]

னத்தன்னவத்த வடிக்கமலங்களின்
முத்தரிச்செஞ் சிலம்புமுயுந்துற. (உ௫)
இருந்தவாரரு ளெம்பெருமாட்டியாற்
குரும்மைகாணுமென் கொங்கைப்பொறையினல்
வருந்துநாற்முக வன்னமருங்குலா
ராம்பைமாத ரளப்பிலரெய்தினர். (உ௬)

வேறு.

முல்லையந்தொடை யருந்ததிமுதலெழுமுனிவ
ரில்லறம்புரி துணைவியராமெழுவருமபோய்
வல்லரும்பெனுங் குவிமுலைப்பனிமலைமகளைச்
சொல்லருந்துதி செய்துவாழ்த்தெடுத்தனர்தொழுது. (உ௭)
அன்னமொன்றறி யாமுடிக்கங்கையையறிந்து
துன்னவந்தலமருமெகி னங்களின்றெருகுதி
யென்னவம்புயத் தொருசதகோடியிந்திரைகண்
முன்னடைந்துவெண் கவரிகளிரட்டினர்முறையால். (உ௮)
அரவுசெளவிய கதிரெனப்பட்டசாந்தாற்றி
யரவையல்குல்வெண் முத்தவாணகைகொலைபயில்விற்
புருவமென்மலர்க் குழற்சசிகோடிகள்புகன்று
மருவியம்பிகை மருங்குநின்றசைத்தனர்மன்னோ. (உ௯)
எடுத்துவீணைக ளுளர்நரம்பிதுமிடறிதுவென்
றடுத்தகேள்வராம் பிரமரு[illegible]ரிதாகப்
படத்தயாம்பணி பரன்புடைமதுசீர்யாட்டிற்
றொடுத்துவாலிய கலைமடங்கைதயர்பலர்துதித்தார். (௩௰)
செப்பமைந்ததண் ணுமையிசைதாளமென்சிறுதாட்
டுப்பமைந்தவொண் சுதிசதிச்சுவையலகாயு
முப்பமைந்தவின் கதியெனநடித்தனருமையோ
டொப்பமைந்தக ளுருத்திரகணிகையருவந்து. (௩௧)
எந்தைமாலுமை புக்குணங்களுமுருவெடுத்து
வந்தமாதர்க ளருகுநின்றனர்பணிமகிழ
வந்தமாதருட் டமகுணமாதுமையருளாற்
சந்தமாயையென் பெயர்கொடுதருக்கினின்றனளால். (௩௨)
தெள்ளுவார்திரைக் கங்கையுங்கங்கையுஞ்சிறிய
பிள்ளையாகிய மதியமுமதியமும்பெரிது
துள்ளுமோரிள கவ்வியுகவ்வியுக்தொடர்பு
கொள்ளுமாறவ ணெருங்கினவுருத்திரகுமாரர்கள். (௩௩)
சங்கமொன்றுட னொன்றுதாக்குறவொளிதழைக்குங்
கங்கவேயியு மன்னவாறுறவலைசுருட்டும்

பொங்குவேலையுந் தெனவரிக்கணைக்களற்புறத்த
வெங்கணுயகன் பேரவையிடத்துவந்திறுத்த. (௩௪)

முகங்களைந்திலு நான்மறைவிதிமுறைமுழங்க
வுகந்துகையிரு நான்குநான்குச்சியிற்குவியச்
சகங்களுஞ்செயற் பிரமர்களளப்பிலர்தையல்
பகுந்தமேனிய னவையிடைபுகுந்தனர்பரவி. (௩௫)

அயனுமாயனு மெனிலுயார்க்கவொன்பதன்றிக்
கயிலைநாயக னமர்திருவோலக்கங்காண்டா
னயனமாயிர மிலானையினதிகநானென்று
வயிரவாட்படை யிந்திரனெண்ணிலர்வந்தார். (௩௬)

உரகர்சித்தர்கள் விஞ்சையாதரர்சுரருயர்கிம்
புருடர்மெய்க்கதிர் முதலியகோடிசைபுரப்போர்
கிருதர்மற்றுளர் விழிபிதிர்ந்திடவுடனெருங்கி
வரதனத்திரு வோலக்கங்காணியவந்தார். (௩௭)

அழிவுமாக்கமு முனையிறைற்செயும்வலி யடைந்தார்
மொழியுமாக்கையு மனமுநல்லறங்களின் முயன்று
கழியுமாறுமுக் காலமுமுணர்தலை கழன்றார்
பழியிலாவசிட் டாதிமாமுனிவரர் பரந்தார். (௩௮)

குழவிபால்குடிப் பதுகடல்குடிப்பது குழவி
யழுதுமாறுணன் மணனொடித்துண்பதுபடைப்பு
முழுதுமோர்தளர் நடைமகச்செயலெனு முரண்கொள்
வழுவிலாவருட் சணங்களெண்ணிகந்தன வந்த. (௩௯)

செருக்கொடுஞ்சிவ நிந்தைசெய்வார்க்கிலைதீர்வு
விரிக்கிலென்றுமுன் சிறுவிதிதலையறவெட்டி
யெரிக்குநல்கிக் கலைசெயாமறிமுசமியைத்துத்
தருக்கின்றவவ் வீரன்வந்தொருபுடைசார்ந்தான். (௪௰)

காதியாயிர மால்களைப்பிழிந்துமாங்கனியோம்
கோதுவீசினுங் கடலகவிழ்ந்தனையசெங்குருதி
யாதியாயினு நிரம்புறுக்கபாலமாணியனாய்
மாதுபாதிய னவையிடைப்புகுந்தனன்வடுகன். (௪௧)

வீரமாதருக் கில்லையென்றுரைப்பதென் விளங்க
வீரமாதென வறிகிலரோவென விளம்பி
வீரயோகினி வெள்ளமோடமர்பொர விரும்பும்
வீரகாளியும் புகுந்தனளவையிடை விரைந்து. (௪௨)

ஒன்றுமூன்றுமோ பேர்வுயிராகல் லொழுக்க
நன்றுகாலெனக் கொண்டரன்முகத்தினை முறுவ

றென்றுமாறுமின் றுடினன்கதிரு டொலைத்தல்
போன்றுமாயையைத் தொலைத்திடுபிருங்கியென் புனிதன்.

படிகொளிண்மாமுடிக் கங்கணத்திறைபதம் படுமொண்
முடிகளியாவையும் படுகழனந்தியெம் முதல்வ
னடிகளேந்துகை புறவடித்தொதுக்கியவ் வவையைக்
கடிகொண்மாலையம் பிரம்பொடுதிரிந்தனன் களித்து. (௬௪)

பெய்யுமாமழை முகிலெனப்பெரியவாய் முழவந்
துய்யமாமதி யனையவெண்சுரிமுகச் சங்க
மெய்வாணனும் பானுகம்பப்பெயரவனுங்
கையும்வாயுமொத் ததிர்த்தனர்செவிகரங் கவிழ்ப்ப. (௬௫)

துதிப்பரோர்சிலர் பாடுவரோர்சிலர் துள்ளிக்
குதிப்பரோர்சிலர் கைகளாற்றேளினைக் கொட்டி
யதிர்ப்பரோர்சிலர் நெக்குநெக்குருகிநெஞ் சகமெய்
விதிர்ப்பரோர்சில ராயினரவையிடை மிடைந்தோர். (௬௬)

படைக்கலங்களி னொளியிமையவரொளி பரித்த
தொடைக்கலங்களி னொளியரம்பையர்பணைத் தோளி
னிடைக்கலங்களி னொளியெலாமிருளிறை யிட்டி
னடைக்கலம்புக நிறைந்தனபாந்தயே ரவையில். (௬௭)

வேறு.

இன்னணமவையிடை யிருந்தவெம்பிரா
றன்னொடுவினவுமோர் தகைமையுன்னுபு
கனனுமமிர்தமுங் கைப்பவெம்முடை
யன்னைதன்வாய்திறந் தறைதன்மேயினுள். (௬௮)

தலைவநின்னவையிடை சார்ந்தவிப்பெரு
கலனுடையவரெலா நனுகிவெம்பவத்
தலைகிலராகியின் படைவரோவலா
னிலையிலரோவிது நிகழ்த்துவாயென்றாள். (௬௯)

விளங்கிழைநன்றுநின் வினுவென்றெந்தைமண்
ணளந்தவனயன்முத லாயினேருமின்
புளங்கொளுமொருமத்தொடொன்றுறத்
தளைந்துளகிரியையாற் சார்கில்ரொன்றான். (௫௰)

அனையதேனுமொரு கிரியைகளனைத்தும்வெல்ல
வினைவுறுசூட்சியொன்று நீயெனக்குரைத்தியென்னப்
பனிமலைதவஞ்செய்தீன்ற பவளவாய்மடந்தைகூற
நனையவிழ்கொன்றைவேணி நம்பன்மற்றிதனைச்சொன்னான். ( )

போகபூமியினிற்போக தனுவினாற்பொருந்தலாகா
தேகமாமின்யசித்தி யியம்புறிற்கருமபூமி
யாகமானதுகொண்டன்றி யாதலான்ஞாலத்தெய்தி,
யோகமாநெறியினின்றே ருண்மைசார்ந்திதுகொள்வர். (ருஉ)

என்றிதுகொழுநன்கூற விளங்கொடியனையதாயி
னொன்றோருமக்கண்ஞாலத் துவமையின்ஞானசித்தி
நன்றுறவுணர்த்தவல்ல குரவன்யார்நவிறியென்னக்
குன்றணிமதியமொப்பக் குனித்தவன்கூறலுற்றான், (ருங)

தொல்லையிலுயர்சுஞ்ஞானி துரிராங்காரனென்போ
னெல்லையிறவங்கள்செய்ய வெமதுமெய்வடிவந்தானே
யல்லமனுமனுமந்த னுயினனையன்றன்னை
யில்லுறழ்நுதலாய்காண்டன் மிகவுனக்கரியதென்றான். (ருச)

என்றலுமிமயவல்லி யெனக்கரிதென்பதென்கொ
லுனறனியல்லமன்ற னுண்மையையறியவேண்டி
னின்றவர்தமக்கெலாமு மெளிதெனநெகிழ்ந்துரைப்ப
வன்றினர்புரமெரித்த வறிவையாளன்சொல்வான். (ருரு)

முனிவுறேல்றியவுன்றன் மொழியளவல்லன்மாதே
வினைதபுமன்பரன்றால் வேண்டியவடிவனாகி
பனையவர்விழியிற்றோன்றி யருளுவனலமதேவன்
றனதியல்பியாவரானுஞ் சாற்றிடற்கரியதென்றான். (ருசு)

மெய்ம்மையிம்மாற்றமாகும் வேறுளர்க்கியான்செய்மாயை
யொய்ம்மலிசெயலிற்றப்பிப் போமெனிற்காண்பலென்னு
மம்மலைமகடருக்கி யறைதலுநின்றனற்றன்
மைம்மலிகுழலாய்காண்கு மென்றிதுவள்ளல்கூறும். (ருஎ)

இன்னணஞ்சூளியம்பி யினிவறிதிருத்தியாயிற்
பொன்னவிர்சுணங்குபூத்த புணர்முலைமடவாய்தோல்வி
நின்னிடைவருமென்றண்ண னிகழ்த்தலுமிமயவல்லி
யென்னுரைதவறாதென்ன நெடுமொழியிசைத்துப்பின்னர். ()

ஆயிடையருகுநின்ற தமகுணவடிவமாகு
மாலையைவிளித்துநீபோய் மண்ணிடையல்லமப்பேர்
நாயகன்றனையறிந்து நணுகுதியென்றுகூறி
யேயினளவள்வணங்கி யினையதொன்றியம்பலுற்றாள். (ருகூ)

அல்லமனியல்பறிந்திங் கணைதுவனாழுவுமாயின்
வல்லிதின்வலிந்துபற்றி யீர்த்திவண்வருவலென்று
சொல்லினளொருஞூன்வேலை சுவறவுண்டிடுவலென்று
நல்லியவெறும்பொன்றாற்றல் புகல்வதுபோலவன்றே. (சு௰)

தன்னையறியாண்மாழ்கித் தன்மதிதவழும்வேணி
முன்னவன்வையுணின்று மொழிந்தவச்சூண்முடிப்பான்
பன்னகமுடிபரித்த பார்மிசைச்செல்லநெஞ்சத்
துன்னினனெய்தினான் வொளியிழைமாயைமாதோ. (௬௧)

இரண்டாவது-கைலாசகதி-முற்றிற்று.

ஆக - கதி - உ - க்கு - திருவிருத்தம்- அஉ.

---

மூன்றாவது

# மாயையுற்பத்திகதி.

வேறு.

பூதலத்திற்பொருந்துபுமாயையென்
றோதலுற்றவொருபிடிநுண்ணிடை
மாதவத்தர்மனங்கள்கலங்குறச்
சாதமுற்றுவளர்ந்தமைசாற்றுவாம். (௧)

களங்கவெண்மதிநெஞ்சங்கவற்றுமோர்
துளங்குசங்குடைத்தோன்றன்மணத்தணி
வளங்கொண்மண்மகள்மார்பின்மதாணிபோல்
விளங்குமென்பவிளவலதேயமே. (உ)

வாவியாவுமதன்பெருந்தூணிசெய்
யாவுமாரனெடுக்குஞ்சிலையிடங்
காவெலாமவன்காகளச்சாலைகள்
பூவைமார்மனைபோர்க்களமென்பவே. (௩)

மொறைக்கயிற்றிற்புகழையின்சொல்லெனும்
விறற்கயிற்றின்விருந்தைக்குரவாசொன்
மறைக்கயிற்றின்மனத்தைத்திருவைவல்
லறக்கயிற்றினசைப்பவொங்குமே. (௪)

வறியனவன்வடதிசைமன்னவ
னறிவிலாளனனந்தனுமாவனோர்
சிறியனவன்சிலைமதன்பூம்பொழில்
வெறியுலாவும்விளவலத்தெய்தினே. (௫)

இணையிலாதவிளையவளம்பல
வணுகிவாழும்விளவலநாட்டிடை
யணியிணைப்பணமுத்தும்விலையிலா
மணியின்மேவும்வளவசைமாநகர். (௬)

வடிக்குளிரப்பலசப்பழுத்தொண்புவி
வெடித்தவாயிலனந்தன்மணிவெயி
லடுத்துவானத்தவிர்மதியைத்தொடாக்
கடுத்தவேள்குடைக்காம்பெனத்தோன்றுமால். (எ)

நறவிழுந்தநறுமலர்தோறும்வண்
டுறவருந்தியிருளுற்றொடுங்குமா
லறவர்தங்களகத்தொறுமையமுண்
டுறவர்தங்குகைதுன்னுதல்போலவே. (அ)

வாவிச்செங்கமலங்களின்வல்லிருண்
மேவித்துஞ்சிவிடிதருகாலையிற்
காவிற்சென்றுகளிவண்டினங்குயில்
கூவத்தண்மதுக்கொள்ளைகொண்டுண்ணுமால். (௯)

பெடையொடுற்றுப்பிரிவில்லைங்கிள்ளைகள்
குடியிருக்குங்குளிர்பொழில்வாய்மலர்ப்
பொடியுதிர்க்கிலவேலவெளிபோய்வயன்
மடையுடைக்குமதுப்பெருவெள்ளமே. (௰)

சேலுலாவித்திரியுநதிப்புனன்
மாலியானைமறையக்கதிர்த்தலைச்
சாலிநீடித்தழைத்துவிளைவயற்
காலிறேடிக்கடிதுவிழுமரோ. (௰௧)

வரிக்கயற்செங் கமலம்வரிவளை
யிருக்கையான்மல ரம்பினையேந்தலால்
விரிக்குமஞ்சிறை மென்னடைப்புள்வயல்
செருகருவின்மதன் செங்கைநிகர்க்குமால். (௰௨)

களிகடற்றுயி லாரணன்றன்றுருக்
கொளவளித்தவர் கையிற்கொடுத்திடும்
வளைபிறக்கு மிடமெனவண்புனற்
குளமனைத்துங் குடவளைமொய்க்குமால். (௰௩)

வேறு,

தாழ்க்தோருபர்வமொன்றுமிக வுயர்க்தோர்தாழ்வொன் றுமறஞ்
சூழ்க்தோருளைக்குழுமைகண்டா மதில்சூழ்கிடந்ததொல்லகழி
தாழ்க்தோரனக்தன்மணிமுடிமே னின்றன் றுயர்ந்துதடவரையைச்
சூழ்க்தோர்வரையினுதிப்பவன்றாட் கிழ்நின்றதுபோய்ச்சூழுமெயிலே. ()

சேர்ம்போர்புரிவார்களன்மறையா றங்கமுணர்ந்ததொழுகுலத்தோர்
நேர்ந்தோர்புரிவார்கெடியசிலை யிராமனையவிறல்வேந்தர்

பொற்போர்புரிவர்பிறர்பொருளுந் தமுபோற்பேணிப்புரிவணிகர்
நெற்போர்புரிவரங்கரில வேளாண்குலத்தினெறியினரோ. (௰௫)

உடுப்போர்க்குடுக்குந்துகில்களா லுண்போர்க்குண்ணும்பொருள்களா
லுடுப்போர்க்கெடுக்குமலர்களா லணிவோரகணியுஞ்சூட்டிழையாற்
லடுப்போர்க்கடுக்குமலைகளாற் குறைபாடுடையதன்றதுதான்
கொடுப்போர்க்கிரப்போரில்லாத குறையொன்றுளதுகூறுங்கால். (௰௬)

ஈசனளித்தவொருகோட்டி யானைக்கியாங்களிணையாயின்
வாசவனைத்தாங்கிருகோட் டியானையெம்மைமானுமெனு
மாசவுரற்காலியானையொடு பாண்டிலிழுக்கும்பகடியரிற்
றேசினிரதப்பரிசிறந்த வென்னும்பரிசுடெருவகலா. (௰௭)

மறையுங்கலைகள்பற்பலவு மூழங்குமொலியுமங்கலஞ்செய்
பறையுங்குழலும்யாழுமியம் பொலியுங்கரியும்பரிமாவு
நிறையுந்தெருவினூடுமணித் தேரினொலியுநிறைகடலி
னறையுந்திரையிற்சென்றுவிசும் பமராசெவியினடைகதியமால். (௰௮)

வேயைநகுமென்சுடர்த்தொடிய தோண்மாதுமையையிடைகொண்டு
பேயுமகன்றுவாற்கரிய கைலைமலையைப்பிரிந்தெய்தித்
தூயமனமுங்கலங்கவருந் தவர்வேள்குலவுகதோள்வீங்க
மாயைபிறந்தவனவுசைமுர நாரின்வளநகையாசொல்வார். (௰௯)

வேறு.

இம்மாநகரிற்கரசாகியிருந்துவாழ்வோ
னம்மால்புணருஞ்செயன்மாத்திரையாகம்வைத்தல்
சும்மாபுகழன்றெனவிந்தையைத்தோளிலவைத்தோன்
கைம்மாறுவேண்டாமழைபோன்மமகாரனென்பான். (௨௰)

திறைதானளக்குந்திறல்வேந்தர்க்கரியசீரான்
குறைதானிரக்குமவர்க்கீரடிக்குறுகிற்பா
னிறைதானவெற்புமணிநாகமுநின்றுதாங்கும்
பொறைதானெடுக்குமிகுமாற்றல்பொருந்துதோளான். (௨௧)

இரப்பார்வரிலோரடிஞாலமெளியதன்றிக்
காப்பார்காக்கும்பொருளன்றெனவீகைகற்றே
யுரைப்பாருரைக்குமளையாவும்புகழில்வைத்தான்
றரைப்பாலுவமையிலையாகத்தருக்கிவாழ்வோன். (௨௨)

அன்னான்மனைவிவணர்வார்குழல்வேற்கண்
மின்னார்மருங்குறளர்ந்தொலகிமெலியகிம்மிப்
பொன்னார்சுணங்குவிரிபூண்முலைப்பூங்கொம்பன்னா
ளின்னாமிர்தமொழியோகினியென்னும்பேராள். (௨௩)

தண்ணியபுன்மிற்றீயிற் சார்ந்துழன்றுபிறந்தும்
நண்ணியதவத்தோர்நெஞ்சம் பதைத்தனமயலின்மூழ்கி. (௰௨)

ஐம்பெரும்பூதமெல்லா மடுக்கழிந்தொழியும்போதுங்
கம்பமின்மதுநெஞ்சங் கலங்கியதெனைகொல்லோ
வம்புறுசெயலீதிங்கு வந்தவாறெவ்வாறென்று
செம்பொருளுணர்ந்தசீர்சால் செய்தவரிருந்தகாலை
தளர்ந்துழியுதவுங்கல்வி தானெனத்துருவாசப்பேர்
கொளுங்கனி முனிவர்கோமான் குறுகலு முனிவரெல்லா
முளங்கனிவாய்நின்றேத்தி யுயர்தவிசிடையிருத்தி
வளங்கெழுமலர்கடூய வர்ச்சனைசெய்துசொல்வார். (௰௪)

என்றுமெம்முள்ளமெல்லா மெழுதியவிளக்குப்போல
நின்றிடுமின்றென்கொல்லோ நிலைதடுமாறுநிறை
தென்றன்முன்னிருந்தசெய்ய சிறுசுடர்போலவைய
நன்றிதையுணருமாறு நவின்றருள்செய்கென்றார். (௰௫)

சங்கரியொருகூறாற்றன் றமகுணவடிவமாகு
மங்கையைவிடுப்பவன்னாள் வனவகைசநகரிற்பிள்ளைத்
திங்களினுதித்தாளின்று செய்தவக்கிழமைபூண்டீ
ருங்கணெஞ்சதனாலாற்ற லுடைந்ததென்றவனுரைத்தான். (௰௬)

அருந்தவமுனிகேட்டீற் றுண்மைபயன்றியெங்கள்
பெருந்தவமுயலுநெஞ்சம் பிறழ்தற்கேதுவில்லை
யிருந்துளம்வருந்தியாய்ந்த வெம்முடையையமெல்லாம்
பரிந்தனவருளானீயெம் பால்வருகையினாலென்று. (௰௭)

முனிவரர்துருவாசப்பேர் முனிவர்கோன்றனைவழுத்திப்
பனிமலைவலவியேவப் பட்டெழின்மாயையென்னும்
வனிதையிவ்வுலகில்வந்த வாறுநீவிரித்துயாங்க
ளினிதுணர்வுறுமாறோது கென்றலுமவனுரைப்பான். (௰௮)

கயிலையோலக்கத்துற்ற கண்ணுதலல்லமன்றன்
னியல்பினையறிதறேற்று மென்றுமையுடனுரைப்ப
மயிலியலறிவலென்று மாயையைவிளக்கைக்காண்பான்
யயிலிருளினைவிடுக்க பரிசெனவிடுத்தாளன்றே. (௰௯)

காரணமிதுவேயெங்கோன் கைலையைவிடுத்துமாயை
தாரணிதனில்வாற்குத் தக்கவம்மாயையென்னு
மாரணவிடங்கலந்த மயக்கமல்லமனென்றிட்ட
பேரணிக்கலுழன்றன்னை நினைத்திடப்பெயருமன்றே. (௨௰)

பிணிதவவேண்டில்வாழ்நாட் பெரிதுறவேண்டிற்செல்வ
மணிதரவேண்டிற்கல்வி யறிதரவேண்டில்வானம்

ள்ளமாயைதன்னெழிற்போற் கண்டதில்லையென்னமிக
புள்ளம்வியந்து கலையசைத்த லொப்பவசையுஞ்சுடர்பார்த்து
மெள்ளவிரலொன்றினைச்சுவைத்து மிளிர்பூஞ்சதங்கைத் தாளுதைந்து
வின்னுமலர்வாய்குவித்தழுது மீளநகைத்துக்கிடக்குமால. (௫௰)

மாயைகவிழமுகங்கவிழ்ந்த மதனனிருந்தானவணிருப்பப்
நோயசிலையொன்றெடுத்தெழுந்தா னொருஞானியன்றயானையெழு
மெய்வணங்கவேண்டநான் மேவதன்பயநமசணைடப்பாத்
தூயதவஞ்செய்தைத்தவித்த துறவினோர்பாலோடினன். (௫௧)

குழலும்யாழுமினியவெனக் கூறுவண்ணமென்கனிவாய்
மழலைமொழிந்துமுடங்கின்ப மருவமேவாடிமேலவிழுந்தும்
விழையுமழகின்மிகவினிமை விளையாநாதஞ்சுவையடியில்
செழியசிறுகையாலலைந்துஞ் செய்தான்மோகமினமேறனை. (௫௨)

பரவுபெருஞ்சீரல்லமனைப் பற்றவந்தயதிபாற்றன்
னுருவமிழலைப்பற்றனினைக் தோடியோடக்குழந்திவான்
மொருவின்மதியமேன்றனிந்து மொங்குமழலைவீசாமன்
மருவியுறவுகொள்வாள்போல வாவாவெனவழைத்திடுவாள். (௫௩).

மாகிப்பரிசுகந்தைதாய் மகிழவளர்வுற்றாகிருந்த
நீதிக்கிழவனிடப்பலவ னெறிசெயிளஞ்சேயவன்றவிசின்
மீதுற்றதுபோன்முன்முளைத்த வெண்பல்விழவேறெயிறுதிப்பப்
பேதைப்பருவங்கடந்துமெல்லப் பெதும்பைப்பருவநண்ணினாள்(௫௪)

செய்யவல்லசும்மியன்செய் சிங்கஞ்சமந்தமணியணையிற்
றையவந்துமணிமவுலிப் பார்வேந்திருக்குமபரிசுபோல
வெய்யகுதம்பைவளர்த்தகல விழுநீளவள்ளைககாதினிடைத்
துய்யபசும்பொன்மணிகுயின்ற துணைத்தோடமையதோன்றினள். ()

மட்டுக்கணைவேளரசுக வளர்த்தகுழற்காடலர்விரவிக்
கட்டுற்றதுகம்பான்களத்துக் கடுவுமவிழிகள்சிறிதுற்ற
முட்டித்துறவாம்பறவைமயன் முடியிற்படுதன்மெல்லமறைச்
தெட்டிப்பார்ப்பதெனமுகங்கொண் டெழுநதமாபிணிளமுலைகள். ()

அன்னநடையுமன்னமிலா வையர்நடையுந்தளர்வெய்தக்
கன்னிரடக்குநடைகற்றாள் கரும்புகசக்குமொழிபெற்றாண்
மன்னுமலர்விழ்சுரும்பனைய மைந்தர்யார்வைக்குறிப்பறிந்தா
டன்னையரியவனவயிர்த்து தானேமனத்திற்றருக்குற்றாள். (௫௭)

இந்தக்கன்னிமதிமுழுநோக் கெய்திச்செவ்வாய்வலியடைந்து
சந்தச்சிங்கந்தனையடுத்த தக்கவாவின்வலிசேர்ந்து

முக்கைக்கொடிமீனத்தலைவன் முனிவாரதும்பகைவெல்லக்
கந்தப்பகழிபலவேழக் கருப்புச்சிலையிற்றொடுத்தனனால். (௫௮)

மாகமாகப்பொங்கியெழும் பதுமேபோலப்பொங்குமெழின்
மோகமாயைதன்பருவ முன்னிருடுவேந்தயனுமா
லாகுமாடமொன்றுபுரிந் ததன்கட்கல்வியற்பலவும்
யோகுமாதர்பலர்சூழப் போற்றியிருப்பச்செய்தனனால். (௫௯)

வேறு.

வாய்த்துளவம்மணி மாடநண்ணுபு
யாத்தொடைபற்பல பயின்றுந்தந்திரி
நாத்தனியாழுமா னுக்கனென்றுகான்
யோர்த்துள்விரல்களாற் பேசுவிதருமே. (௬௰)

அங்கொருமடவர லதிர்ப்பத்தண்ணுமை
மங்கையர்பலரிசை மரபிற்பாடுறக்
கொங்கவிழ்மலரளி குழுறத்தென்றலாற்
பைங்கொடியசைதல்போற் பாடியாடியும். (௬௧)

வருபுலையிறைக்கிணை யாகவந்திடக்
காமெனுமேவலன் புடைக்குங்காட்சிபோல்
விரைமலரோதிமேன் முயிறிரைந்திடப்
பருமணிகுயின்றமென் பந்தடித்துமே. (௬௨)

பூந்தொடைவார்குழல் புனைந்துநல்விரைச்
சாந்தமுநானமுந் தயங்கப்பூசியு
மேந்திழைபலவுறப் பிசையத்தாங்கியு
மாந்துறுசுவையல வகையுமாந்தியும். (௬௩)

தீங்கனிபாலொடு செம்பொற்பஞ்சரக்
தாங்குறுபைங்கிளி யூட்டித்தன்மொழி
யாங்கதுபயில்வுற வளித்துங்கற்பகப்
பூங்கொடியனையவள் பொழுதுபோக்குநாள். (௬௪)

தென்னவன்செம்பியன் சேரன்கொங்கண
மன்னவன்மாளுவன் மகதநாட்டிறை
யென்னுமிங்கிவர்தமு ளியாவாகண்ணதோ
கன்னிதன்மணவினைக் கடனென்றுன்னியே. (௬௫)

ஆய்ந்திருந்தனன்மம காரனையிடைப்
போந்தனனவன்குரு வாகப்போற்றுறுஞ்
சாந்தவாங்காரனுந் தகுதிப்பேரினோன்
வேந்தனங்கெதிர்கொளீஇ விதியிற்சூழ்ந்தனன். (௬௬)

மன்னவன்வந்தனை மாபிற்கொண்டவன்
கன்னிதன்னெழினலங் காணப்போயினு
னன்னவளொடிராடன் றாரியன்றனைச்
சென்னியின்வகைக்குபு சிறப்புச்செய்தனன். (௬௭)

மாந்தளிராமிலை வயங்குகோங்கரும்
பேந்தெழினமைமல ரொய்தியற்புதப்
பூந்தனைவல்லிசேர் பொன்னைக்கண்டவ
னோர்ந்தனன்காரண மாதென் றுன்னியே. (௬௮)

மாதுருவுறுகுழி மதிக்கயிந்தவ
ளாதரவொடுமுடி யரசைநோக்கிநின்
கோதையையார்கொலோ தோளிறகொள்பவ
ரோதுகவென்றலு முணர்த்தனமேயினுன். (௬௯)

உணர்ந்திலனடியனே னொருநங்கோதைதன்
மணந்தனக்குரியவர் மனிதர்வானவர்
கணங்களுளொருவரைக் கருத்திற்றேர்ந்துநீ
யிணங்குறவெனக்கிவ ணியம்புகென்றனன். (௭௰)

கொங்கவிழ்தொடையினுய் கூன்கொக்கன்றுவான்
கங்கையையடைவது கடவுளாணைமே
மங்கையையணைபவர் மனிதரல்லநு
சங்கரனேயிவ டலைவனென்றனன. (௭௧)

மாலுநான்முகனுநா டரியவள்ளலிவ்
வேலவார்குழலினுட் கெளியனேவென
வாலமார்மிடற்றின னன்பர்வேண்டிய
கோலமாய்நணுகுமீ துண்மைக்கூற்றென்றுன். (௭௨)

இன்னணமரசனே டியம்பிமாயையாங்
கன்னியைவிளித்தவள் கருத்திணங்குறச்
செங்கிலைதனையுப தேசித்தேகினுன்
றன்னிகர்குருபரன் றனதிடத்தரோ. (௭௩)

குருவருண்மொழிநெறி கொண்டுமாயைதான்
வரவனவசைநகர் மதுரைநாதனைப்
பரவினளருச்சனை பயின்றுபூசனைக்
கருவிகண்முழுவதுங் கடைப்பிடித்தரோ. (௭௪)

மூன்றாவது-மாயையுற்பத்திகதி-முற்றிற்று.

ஆக-கதி-௩-க்கு-விருத்தம்-௭௪.

போதுமோர்சிறுயாம்பெனமயிர்வகிர்பொருந்தச்
சோதிமாமணிச்சுட்டியொன்றொருத்திதூக்கினளால். (அ)

வேனிலம்பதிகொலைவிடமூட்டியவெவ்வேள்
மானவஞ்சனமெழுதியவிழிபொரவராலாற்
றூனதன்பகைதனைத்துணைக்கொண்டிருந்ததைபோற்
றானலஞ்செவிமிசையணிந்தனளொருபாவை. (௯)

அடுதறுமாதவமழிமினென்றனங்கவேடமக்கு
விடுதவோலையைக்கண்கடமீமற்பழிவிளம்பிற்
கொடுத்தவேண்மிசைநிந்தைகூறுதம்முருவத்திநக்கற்
கடுத்துவாழ்தரவொருத்திபொனோலைகாதணிந்தாள். (௰)

தன்னைநிந்தைசெய்வெண்ணகைமேற்பழிசார
மன்னியங்கதுநிகரறவாழ்மனைவாய்தன்
முன்னிறத்திடுவேனெனநான்றுகொண்முறைமை
யென்னவெண்மணிமூக்கணியொருத்தியின்னிட்டாள். (௰க)

கற்றையங்குழனறுமலர்த்தொடையொடுகனமா
யுற்றணங்குமென்மிலகுபூண்பிடித்ததையொப்ப
விற்றயங்குவாணுதலெழின்மாயைதன்மிடற்றிற்
பொற்றடந்தகட்டணியொருமடவரல்புனைந்தாள். (௰உ)

கன்னியத்தம்வந்தினமணிக்கற்கடகத்தின்
மன்னியுற்றதற்புதமெனவளையலகாக்க
வின்னுதற்கருங்கண்மடமாதுகைவிளங்கப்
பொன்னினற்கடகம்புனைந்தனளொருபூவை. (௰௩)

ஆயுமின்சுவைதாசசெலுங்கையுடனடுத்து
வாயிலெண்கலின்காணியமருவுறுமாபோன்
மாயைதன்கையிற்பொற்கடகத்தின்முன்வளைந்தா
பேசெம்பவளங்களைக்கோத்தொருதோகை. (௰௪)

மங்கலத்தொழிலாடவர்மனங்கடக்கிற்குக்
குங்குமப்பெருஞ்சேற்றினைகுறித்திடுகற்போன்
மங்கையர்க்கொருதிலகமாகியவெழின்மாயை
கொங்கையிற்புனைந்தனளொருபெண்மணிக்கோவை. (௰௫)

பாயும்வெண்டிரைக்கருங்கடனிலச்சுமைப்பாம்பி
னாயிரம்படங்களுந்திறையிட்டனவனைய
மீயிலங்கொளிவிரிமணிமேகலைவேய்ந்தாள்
மாயைமங்கைதனல்குலிலொருதிருமடந்தை. (௰௬)

குறையடிக்களியானையின்வரவினைக்கண்டு
மறுகினுற்றவரிரிதாமணிமருங்கிடல்போ

காளமொத்தசண்மடந்தையர்பலரிளங்கமுகின்
பாளையொத்தவெண்கவரிவீசினரிருபாலும். (௨௬)

காமவெந்தழல்மூட்டல்போற்கடிமலர்ச்சிவிறி
தாமசைத்தனபொய்க்கணைசொரிந்தவிற்றடக்கைக்
கோமகன்றிருந்திழையுள்மறிதல்போற்குறுகிப்
பூமடந்தையைவென்றவர்பூமழைபொழிந்தார். (௨௭)

பாகுவெள்ளிலைசந்தனங்குங்குமம்பளித
மோகைமான்மதம்வண்டிமிர்நறுமலரொலியல்
போகெழும்பணிப்பெட்டிமென்றுகிலுடைப்பேழை
தோகைமார்பலர்மருங்கினிற்சுமந்துமேயினரால். (௨௮)

கொங்கையங்குவிமுகிழ்விழிக்கயல்செழுங்குமுத
மங்கையம்புயமாக்கிப்பஞ்சுழியிலைவைத்துப்
பொங்குறுங்கலிநீர்ப்பெருக்காற்றினைப்புரையு
மங்கலந்திகழ்வுறுமணிமாளிகைமருது. (௨௯)

திங்கள்வாணுதன்மடந்தையர்செழுஞ்சிலம்பொலியுஞ்
சங்கினோடணிகலன்களின்சிறப்பொலிச்சாறுங்
கொங்குலாமலர்த்தொடையளியிசைச்சுருங்கூடிப்
பொங்குமாழியிற்பஃறுளிபெருகுகலையொன்று. (௩௰)

துன்றுவெண்படைசூழ்வரமாயையந்தோகை
வென்றியங்கனன்மழுவினோன்விழியினால்வேளைக்
கொன்றதென்னெனக்கேட்பமென்றுளவிகொண்டு
சென்றுறுஞ்செயலென்னவத்தெருவிடைச்சென்றான். (௩௧)

வேறு.

அரிமதர்மழைக்கணல்லரிவைதன்புடை
வருமடவரசியர் வனப்புக்காண்டலு
மெரிபுரைவிழியரி யேறுபோல்பவர்
கரிதுகர்வெள்ளிலங் கனியையொத்தனர். (௩௨)

இனத்தியல்பாமறி வெஃகலுண்மையே
மனத்துயர்செயுமயன் மாற்றுநீறுதா
னணிச்சமெல்லடியினார் றுதலடுத்தலும்
பணித்துடல்வெதும்புமால படுத்தலாலென்பார். (௩௩)

தொல்லைநஞ்சடர் துயர்சொல்லக்காத்தவன
வல்லியங்குடையருண் மதுரைநாயகன
செல்லுமங்கையர்விழி நஞ்சுசெய்வதுந்
சொல்லுதுமவனொடு தொழுதுநாமென்பார். (௩௪)

திக்களெனுமொருசிறுகூன்முதுகிப்பியின்றவெனச்சினவெள்ளேற்றா ன், கங்கைமுடி மீதினில்வெண் ணிலவெறிக்கு நித்திலவக்கைதையுமி ட்டாள். (௪௭)

பிறைதவழுநெடுஞ்சடையெம்பெருமானைச்சார்ந்துசர்ப்பப்பிராந்திமே வ, நறைமலர்மென்றொடைமாலைபலவணைந்துகூர்ங்கோட்டுகொல்வாய்ச் சீற்றக், கறையடியீருரிசுமந்ததிருமேனியழகுறதுண்கலைபுனைந்திட்[ டன். டிறைவனெனும்பணிநாண வயிரமணிப்பூண்பற்பலவு மெடுத்தணிந்தா

கற்றாமங்கமழ்நித்தியகலியாணிமணாளற்குநானஞ்சாத்திப்
பெற்றானங்கடிதவிலாக்கலிமருவுபோனகங்கள்பிச்சையல்லான்
மற்றொன்றுமில்லாதபெருந்தகைக்குநிவேதித்துவண்டுகிண்டி
யுற்றாதுங்கடிமலர்மென்குழன்மடவாள்வெள்ளிலையுமுவந்தளித்தாள்.

நறியபுகைசெழுஞ்சுடர்மென்சிவிறியொடுவெண்கவரிநாடுமொடி
நெறிமுறையினெடுங்கடல்போலியமுழங்கநின்றுதவிநிமலன்றன்னைப்,
பிறைநுதலிவ்வகைபூசைபுரிந்துதுதிபலசெய்துபெருகுமன்பான்
மறைபுகலுமஞ்செழுத்துமறைந்துவலம்வந்துமுனம்வணங்கிப்பின்னர்

அன்பினுளமுருகிவிழிசொரிநீரொழுகியமையழிந்திருப்பப்
பொன்புரையும்வடிவமயிர்பொடிப்பவியர்வாணுதலின்பொட்டழிந்து
மின்புரையுநெடுஞ்சடிலப்பொன்மலையினணைந்தவெள்ளமூழ்கி
பின்பினங்கொடிப்பவளென்னவந்துநடவிலரங்கத்தெய்தினாளால். (௪௮)

அரங்கினிடைநடநவிலுஞ்செயற்கேற்பவுடையணிந்திட்டரும்பைவெ ன்ற, குரும்பைமுலையினைவம்புதொண்டணிந்துதவங்களெலலாங்கொ ள்ளைகொள்ளுங், கருந்தடங்கண்மலர்க்கோதை சிற்றடியிற்கைபுனையக் கற்றமாதர், சுரும்புமுரன்மல்லிகைமென்போதனையுசிறுசதங்கைதுள ங்கவார்த்தார். (௪௯)

மாணையமுலைக்கிணையெனவென்முன்றுனும்வந்ததெனவலக்கைத்தாளம் மோயிடக்கைத்தாளமகைப் பொருமையினற்றுக்குதல்யோற் புடைத் தொலிப்ப, வாயுரைக்குமொழிபோலத்தண்ணுமைசெங்கைகளால்வார் க்கைசொல்ல,மேயகலைப்யெண்விளர்ப்பவெழின்மாதரிசைபாடவீணை கொண்டு. (௫௦)

என்றொருகையோடுமற்றோர் புரிகவெனநிற்பவள்போ லிடையிற்றோர் கை, மன்னியுறவைத்தொருகைநீட்டியானெதிர்நின்றுமாயைவல்லி கன்னன்மதன்றனைவருகவெனவிளித்தல்போற்றழங்கக்காற்சதங்கை மொன்னினியலொருயாவைநடிக்கின்றதென்னநடம்புரியலுற்றாள். (௫

வேறு.

தண்ணுமைவிளக்குறு தாளமிசையெல்லாம்
வண்ணமலர்மெல்லடி வழிச்சதியினிற்பக்

கண்ணிணைகள்பல்வளைய கைவழிநடப்பப்
பெண்ணமுதமன்னவள் பெயர்ந்தனணடித்தாள். (௫௨)

வாயுறைசெய்சொற்பொருண் மலர்க்கரமுரைப்ப
மீயுயர்விசும்பினெழு மென்புனொலியெல்லாம்
பாயொளியபஞ்சுறு பதத்துறமிதித்துப்
பேயொடுநடித்தவிறை பித்துறநடித்தாள். (௫௩)

அந்தணனிருங்கலை யணங்கினையுமிழ்ந்தான்
செந்திருவைநேமியிறை சீயெனவெறுத்தா
னிந்திரனருஞ்சசியை யெண்ணிலன்மறந்தான்
பைந்தொடிநடிப்பமரர் பட்டதெனுரைப்பாம். (௫௪)

பொன்னெயிலினின்றிய புழைக்குண்முகம்வைத்துந்
துன்னிமுனர்நின்றவர்க டோளிடையிவர்ந்து
மின்னெனநடம்புரியு மெல்லியன்மருங்கு
லென்னும்வெளிகாணிய விடர்ப்படுவர்மைந்தர். (௫௫)

மற்றுமனமோடியிரு பார்வையினுமெய்தி
மற்றையபுலன்களை மறந்துநடமாடும்
பொற்றொடியைநண்ணவுயர் பொன்மதிலுறப்பி
னுற்றபொறிபோலசை வொழிந்திளைஞர்நின்றார். (௫௬)

இளங்கொடிமருங்குலவ ளின்னணநடிப்பக்
களங்கனியைவென்றமணி கண்டனையருச்சித்
துளங்குளிரருந்தவனு வந்திறையணிந்த
வளங்கெழுமுசந்தமலர் மாலையொடளித்தான். (௫௭)

வணங்கிமதுகேசனிரு மாலியமதேற்றங்
கணங்குமடவாருட னரங்கிடையிருந்தா
னுணங்கிடைமருங்குன்மிக நோமெனவிரைந்து
பிணங்குறுசதங்கையமு பிள்ளையினடக்க. (௫௮)

மைத்தடநெடுங்கணிள வல்லிநிகர்மாயை
பத்தியொடருச்சனை பயின்றதையறிந்தா
னித்தனுலகெங்கணு நிறைந்தவனநாதி
முத்தனருளல்லமமு தற்பெயரினனே. (௫௯)

நான்காவது-மாயைபூசனைகதி-முற்றிற்று.

ஆக - கதி - ௪ - க்கு - திருவிருத்தம் - ௨௱௰௫.





உ

ஐந்தாவது

# பிரபுதேவர்வந்தகதி.



நிரந்தரமடியர்வேண்டு நினைவெலாநிரப்பாநின்ற
பெருந்தகையல்லமையன் பெயர்க்கொருமணிதனாகி
வருந்துறுமயன்மனத்தால் வந்தனைபுரிந்தாடன்பாற்
பொருந்துறுமவன்போற்செய்த புணர்ப்பினைப்புகன்றுணாய்பாம் (க)

தாமுறுநுகர்வும்வீடுந் தந்திடவல்லன்றானே
யாமெனவியம்பலாலெம் மல்லமதேவனுண்மை
நாமமுமறையவேறோர் நாமமுற்றம்மாயைக்குக்
காமிபவினைப்பயன்றான் கடைப்பிடித்தருளவெண்ணி. (உ)

கதந்தருதிருநுதற்றீக் கண்ணினானீறுபட்ட
மதன்செயல்செய்யவன்னோன் வடிவுதான்கொண்டதென்ன
முதிர்ந்தழகொழுகுமாறு முகங்களுட்சிறந்தவொன்றோ
டெதிர்ந்துளமுருகனென்ன விளமையோடழகுவாய்ப்ப (௩)

அவிர்சடைமுனிவர்மாத ரழுங்குறக்கொண்டகோலங்
கவினுமிவ்வடிவங்கொள்ளக் கற்றுமுன்விட்டதென்னக்
குவிமுலைமகளிராவி கூட்டுணுங்கோலமென்னப்
புவியுறுமிரவியென்னப் பொங்கொளியுருவொன்றுற்றான். (௪)

விளிம்புறநடுக்களங்கம் வீழ்ந்துசூழ்மதியொன்றுண்டேல்
வளங்கெழுமயிரொழுக்கும் வள்ளல்வாண்முகநிகர்க்குந்
துளங்குறுமுந்திமேற்போய் மார்பிடைத்தோன்றுரோம
மிளங்கருநிரனுமுண்டே லேய்க்குமென்றியம்பநின்றான். (௫)

விலைவரம்பறியாவாடை விரித்துடுத்தனாயிலங்க
மலைவரும்புதியசந்த மான்மதங்காதநாறக்
கலைவரம்பிறந்துளோர்தங் கருத்தினுக்கரிதாயென்புன்
றலைவருங்கமலப்பொற்றாட் டம்பிரான்மலியச்சாத்தி. (௬)

தளிர்த்ததண்பொழிலிற்றேமாந் தடஞ்சினைக்குயின்முகம்போற்
றுளித்தலைமுகில்கவற்றுஞ் சுரிகுழற்சிகழியார்தநிட்
டளித்தொடர்மாலைவேய்ந்தல் வலங்கனோக்குறுவோர்க்கெல்லாம்
வெளிற்றுணைப்பொருள்போற்றோன்ற மென்றலைச்சாத்தணிந்து. ()

களத்திடையிருப்பினுண்மை காண்குநரொன்னவாலங்
குளத்திடைவாங்கிவைத்த கொள்கைபோற்றிலகந்தோட்டி

யொளித்தனிமதிநன்மார்க்க ருரோணியோடொருபெண்கூட்டி
யளித்துநிலைவத்ததென்ன வணிமணிசெவிக்கணிந்து. (௮)

விலையில்வெண்டரளக்கோவை விரசங்கிலிகேயூர
மிலகுசெம்மணிப்பொன்னாழி யிவைமுதலாயவெல்லாக்
கலனுமொண்கவினெனுஞ்செங் கனலிற்பெய்நறுநெய்யென்ன
மலைவிளங்குருகுகேசன் வயங்குறப்பெலாமணிந்து. (௯)

இந்திரதிருவிற்கேற்ற விலக்கணமுழுதும்வாய்த்த
சுந்தரகுமாரற்கிவ்வா விதனைத்தான்சுமப்பதாக
வந்துளதெதுகொலோவென் றெண்ணிமாளிடர்மயங்க
நிந்தையின்முதுகின்பாற்றண் ணுமையொன்றுங்கழுத்தாங்கி. (௰)

சென்றருண்மதுகைகரதன் றிருமுன்வான்சுடர்வலஞ்சூழ்
குன்றுறழ்கொடிநெடும்பொற் கோபுரத்தெதிர்போய்நின்று
மன்றிடைநவில்கூத்தாடி மத்தளத்தொழிலகைக்கொண்டா
னென்றுளமருளவெங்கோ னெறிந்துதண்ணுமையதிர்த்தான். (௰௧)

உரலசைந்திடாதடுக்கி யுரியினையெடுத்தயின்றோன்
குரலசைந்தாதுமோர்வேய்ங் குழன்மொழிமாதர்மாழ்கச்
சிரலசைநதாடாநின்ற சிறகர்போன்மத்தளத்தை
விரலசைந்தறைதலன்றி மெய்யசையாமனின்றான். (௰௨)

சுத்தமெய்ஞ்ஞானனந்த சூரியன்கரத்தாலார்க்கு
மத்தளமுகின்முழக்க நடித்திடுமயில்கேட்டம்மா
வித்தைமனிதர்கையா லெஞ்செவிப்படாதிருந்த
புத்தொலியிதுவென்றுள்ளம வியந்திதுபுகலுமன்றே. (௰௩)

மோட்டிளமுலையீரின்ன தண்ணுமைமுழக்கங்காதாற்
கேட்டிலமிவ்வாறுண்டென் றுரைப்பவுங்கேட்டிலேமால்
வேட்டுலகனைத்துநின்று வியக்குமிவ்விஞ்சைகற்றுக்
காட்டியவவன்யார்கொல்லோ காண்கவென்றணங்குரைத்தாள். ()

மாதர்வல்விரைந்துசென்று மத்தளமுழக்காநின்ற
சோதியைவிழியாற்றுஞ்செய் தொலலைமாதவத்தாற்கண்டு
காதொடுபொருதுமீளுங் கயனெடுங்கருங்கட்செவ்வாய்க்
கோதைதன்மருங்கின்மீண்டு வந்திதுகூறலுற்றார். (௰௫)

கற்றதன்விஞ்சைபோலக் கவினுமாங்கண்டதிலலை
விற்றொழிலநங்கவேளே மேனிகொண்டடைந்தானென்ன
வுற்றனனொருவனன்ன வொண்டொடிவிளிமினென்றாண்
மற்றவர்விளித்துவந்து மாயைமாதெதிர்விடுத்தார். (௰௬)

அங்கிலையலமனுமத் தண்ணலைக்கண்டபோதே
செங்கலமகளிர்போலச் செல்விமான்மயமேயாகிப்

பொன்னலிசொருபூம்பாவை போன்றசைவறவிருந்தாள்
கன்னல்வின்மதவேளெய்து கையிளைத்தருகுகின்முன் (௰௭)

மயக்குமென்பதுபோய்மாயை மயங்குமென்றிடவிருப்ப
வியக்குகின்றேயம்யாது வீரவேளனையாயின்பம்
பயக்குகின்பெயர்யாதெங்குப் பயின்றுறைகுவைசொல்லென்று
நயக்குமென்மொழியார்கேட்ப ஞானவாரிதியுரைக்கும். (௰அ)

செல்லுறழ்குழலீதேய மோபரதேயஞ்சூளால்
வலலவொன்னவந்தோர் வலிகிலையலலவென்று
மலலமனென்பேரொன்று மன்புசெய்பவரிடத்திற்
புலனுவன்றொடர்பிலாம லென்றனனபொய்ம்மையில்லான். (௰௯)

உலகுளவிஞ்சையெல்லா முணாந்தவெம்பிராட்டிதன்பால்
மலைவறவிஞ்சைகற்றோர் தமமொடுபருவியப்பாற்
செலவினையொழிந்திருந்தி செல்வமோடையவென்று
விலவிதழமுதமன்று ரியமபினரிணங்குமவண்ணம். (௨0)

தன்கனிவாய்திறந்து சாற்றவேண்டியசொல்லெல்லர
மின்குழலனையமாதர் விளம்பலுமகிழ்வுற்றீது
புன்சடைமதுகைநாதன் பூசனைப்பயனெனறெண்ணி
யின்குழன்மொழிமடந்தை யிருந்தனளுரையாடாமல. (௨௧)

மோகினிதவஞ்செய்தீன்ற முகிழ்முலைமாயைதன்கைப்
பாகுவெள்ளிலையளித்துப் பயிந்தருகுறுமடப்பைப்
போகியெுன்பவள்சிறந்த போகிபோனடிக்குநின்ற
யோகிதன்கரத்தளிப்பித் தரியனபலவுஞ்செய்தாள். (௨௨)

அடிக்கமலங்கள்போற்று மடியவாவேண்டிற்றெல்லாங்
கொடுத்தருள்கருணைவள்ளல கொண்டகோலத்திற்கேற்ப
கடிப்பவனுதலாலே நாமவேற்றடங்கண்மாயை
யெடுத்ததவுறுவதங்கை யேற்றன்னிழிந்தோர்போல. (௨௩)

விடைக்கொடியமுன்றன்னை விடைகொடுபுரம்போந்தங்கண்
மடக்கொடிமதவேள்வாளி மருமம்பாய்ந்தருவனைந்து
நடக்கரிதாகியம்பொ னகைமணிச்சிவிகையூர்ந்து
தொடிக்கைநுண்ணிழைமருங்குற் றோழியாசூழச்சென்றாள். (௨௪)

நஞ்ணிவெண்குடைவேந்தன்மா னடம்புரிதொழிற்கிசைந்த
தண்ணுமையல்லமன்றன் சதிருணாத்துடனிருப்பக்
கண்ணகன்ஞாலங்காக்கும் காவலனிசைவுகொண்டு
பெண்ணமுதனையமாயை பிறங்குதன்மாடம்புக்காள். (௨௫)

வலம்புரிவளையனந்த மருங்குசூழ்ந்துறச்சிறந்த
சலஞ்சலமிருப்பதென்னத் தமனியமணிமாடத்திற்

பொலங்கொடிமகளிர்சூழப் பூந்தவிசிருந்துவிஞ்சை
கலந்தெழுபவள்போலெங்க ணம்பனோடிணைவிழைந்தாள். (௨௬)

இணைவலன் புணர்ச்சிமேற்று நெடுங்கணோக்கமின்னு
னனிமிகுமழகினமேற்று காவெறுங்கூறறினமேற்றுப்
புனைமலர்வணாவார்கூந்தற் பொற்றொடிசுகிதனலன்றே
மனமொழிமெய்யொருங்கு மங்கையரரியவென்பார். (௨௭)

இதழுசுவைமுக்கரும்பிற் றீஞ்சுவையிரதநீத்துக்
கோதினைவிரும்பிக்கொள்ளுங் கொள்கைபோலுவியின்கட்
போதுறுமதமவிடுத்துப் புன்மலங்கொள்ளுமாபோற்
பேதையெம்பிரானுனைமுதந்தி பெறுதுபுன்போகம்வேட்டாள். (௨௮)

ஒன்றிரண்டொழியவாளி யுளவெலாமாரன்றூர்த்தான்
குன்றிரண்டனையகொங்கைக் கோமகளாற்றளாகி
மின்றிரண்டனையமேனி விமலனமேற்சாய்ந்துவிழ்வாள்
பொன்றிரண்டனையமாதர் பொருந்தலாணிறினாறுள். (௨௯)

தனிரியல்காமத்தீயிற் சருகுபட்டாற்றளாகி
புவங்கர்மகளிர்சிலலோ ருடன்வரவெழுந்துட்போகி
யவிமலராளகஞ்சோர வணிமுலைத்துகில்விலங்க
வளமலியணையின்மீது வாயுயிர்ப்பெறிந்துவீழ்ந்தாள். (௩௰)

வேறு.

அள்ளிக்கொளும்பேரழகனரு ளுமம்புகலுமவாவாலு
முள்ளக்கருத்தையுயிர்போலு மகளிர்க்குணர்த்துமுளத்தாலு
மெள்ளப்பவளவாய்திறந்து விடேதலமன்மேவுதற்குப்
பிள்ளைப்பிறைவாணுதன்மடவீ ரென்றாள்பிறைாவெனறே. (௩௧)

இறங்குதுறையினீத்தாயிற் றென்னமாயையிடத்துமயல்
பிறக்கபொழுதேயுயிராளவாய் நின்றஓதன்னும்பெற்றிமையை
யறிந்துமகளிர்நிலைகருத்தை யறியவுணர்த்திலல்லமற்குச்
சிறந்தமனையொன்றளிக்குதுமென் றுரைத்துப்பின்னுஞ்செப்புவார்

காமமுளைதோன்றிற்றனக்கென் றெங்கள்கருத்திற்றோன்றிற்று
வாமமணிமேகலைமருங்குல் வடிவேன்மருட்டுமதர்விழியா
யழகினதுநெஞ்சகமும் வேறலேசின்னிதயத்திற்
சேமமதனொணுமற் செப்புகென்றார்திருந்திழையார். (௩௩)

கன்னித்தன்மையழிபுமெனு நாணுமுலகங்காக்குமொரு
மன்னற்குரியமகளென்னும் பெருமைதானுமத்தவிசன்
றன்னைப்புணர்ந்தாளென்றுலருந் தகாதமொழியுந்தன்னுளத்தி
லுன்னிக்கருங்கண்மடமாயை யொன்றுமுரையாதிருந்தனளால். ()

இறைவியொன் றுமுறையாமல வாளாவிருப்பவேவல்புரிந்
துறவினின்றசகளைபெனு மாதுபிராட்டி புறையொடுதான்
பிறவுமின்றுவேறுபட்டா ளென்னோபெண்ணேயறியேயென்
றறிவுகலங்கியொருகிலாவி லாசியணங்கைவினவினள். (௧௬)

இனிபான்மறைப்பதென்கொலுமக் கின்றுவந்தவல்லமனுந்
தனிநாயகன்பேரழகென்னு நறவையுண்டுதரியாமற்
கனிவாய்மடந்தையுளமழிந்தா ளென்றுவிலாசிகட்டுரைப்ப
முனியாளியைந்துபுன்னகைகொண் டிருந்தாண்மாயைமுகங்கவிழ்ந்து.

மாயையிடையையுளண்முலையான் மற்றைமாதாபோலென்று
தூயமதிநூதுமதிசதுச் சொலலுமருங்குற்றுறைதான்
வாயினிளவெண்ணகைதோன்ற வாளாவிருப்பக்கண்டுமய
லாயினுடையளெனமாத ரறிந்தாருத்தாபத்தியால். (௧௭)

வல்லியுள்ளமறிந்தனமிம் மாயைதன்னைமயக்கவல்ல
வல்லமன்றன்கருத்தையினி யறியவேண்டுமென்றவர்தாந்
சொல்லவொல்லைமதமானி யென்பாள்யானத்தோன்றறனை
மெலலவுள்ளமறிவலெனச் சென்றுள்விநோதவிமலன்பால். (௧௮)

மங்கைவருமவ்வரவையறிந் தவனோர்மாற்றம்வகுத்திடுமுன்
றங்குமனையிற்சென்றிருப்ப னுங்கடலைவியெனைத்தேடிற்
றிங்களுதல்வெண்ணகைக்கருங்கட்செவ்வாய்ததிருவேசெப்புகவென்
றெங்கடலைவனியம்பமத மானியியம்பன்மேயினள். (௧௯)

விடுபுறநீவேண்டற்க வையவெமதுவிளங்குமணி
மாடநிலவேயிவணுறைக வரசாகோமான்மகளிதய
பீடமதனிலுனைவிடா திருத்தியிருந்தாள்பிரிவறநீ
கூடவுறையும்விருப்புடைய ளென்றுள்குறிப்புவெளிப்படவே. ()

ஒன்றுமில்லேனுனிவிர் மிகவுமுடையீரும்மிறைவி
வென்றியரசர்குலமடந்தை சாதிப்பறியாவிநிர்தன்யா
னன்றிமகளிர்நீவிர்நான் மைந்தனென்றுலட்டாதம்மா
வென்றுமுங்களுடனுறைவன்றென்தைநகைகொண்டியம்பினன். ()

கள்ளாதொழியினன்றியவ னட்டாளாயிற்பினைப்பேதங்
கொள்ளாளொருவர்மாட்டுமெனி லுயிர்போற்சிறப்பிற்கொண்டவுனை
யெள்ளாளென்னவேண்டுமோ வெண்சொலெல்லாமிருந்தறிதி
வள்ளாலெனவின்மொழிபுகன்றுண் மாற்றமறிந்தமதமானி. (௨௨)

காரிற்சிறந்தமலர்க்குழலாய் நின்சொலெல்லாங்கவர்பொருளைப்
பாரித்திருந்தகேறுகிலேன் பணியென்றொருவர்பாற்புரிவோர்
தூரத்திருந்துவருங்காலந் துணிந்துவருதறுணிவென்று
ரிக்கிணங்குமவன்போல நடித்துவிடுத்துநழுவுவோன். (௨௩)

புனலின்விளையாடிருமைந்தர் தம்முளெழுந்துயோயோடிப்
புனலின்விழுவான்போல்விழுந்த தொளிர்ஞாயிறுபோய்ப்புணரியிடை
புனலின்விழுந்தமூழ்குபுவந் தெழுவான்போலக்குணதுகடற்
புனலின்மிசைவந்தெழுந்ததிருள் பருகிப்புதுவெண்டிங்களே (௫௪)

தொக்ககமலம்வாய்மூடக் கள்ளுண்டிடறுஞ்சுரும்பினங்கண்
மொய்க்குநறுமெனகுவளைவாய் திறந்துமூசிறுஞ்சிளம்பொழிலிற்
புக்கமணிநீர்க்கயத்திரைதேர் குருகுவின்மீனபூத்தனவாற்
செக்கரொனுஞ்செந்தீயினிடைப் பொரிந்துதெறித்தவெரிரியோல. ()

தூயசோதிப்பகலவன்போய் மேலைப்புணரிதோய்ந்திடலு
மாயைநாமங்கொண்டிருந்த மணிமென்கலாமயிலைவா
ளையகோம்பிகண்டுசினந் துடலஞ்சிவப்புற்றடங்கலபோன்
மேயமாலைப்பொழுதிலிருஞ் செக்கர்தோன்றிவீந்ததால். (௫௫)

காலைபரும்பிப்பகலெல்லாம் போதாயிருந்தகாமமலர்
மாலைமலர்ந்துபொருமலொரு மாயைநாமமணிவல்லி
மேலையிருந்தபுறமபோந்து விரிவெண்ணிலாமென்மூற்றத்திற்
பிலிமஞ்ஞையெனவீழ்ந்து மதனேய்மிகவாய்பிதற்றுமால். (௫௬)

தாய்வாயடைந்துமிகுந்தலையை மோதிமோதிச்சலித்தலறக்
காய்வாய்நிலவேயுடன்பிறந்தா ளிருந்துவாழுங்கடிமனையை
நீவாவெனழுந்துவந்தழிப்பா யென்றுலந்தோநிலையின்றித்
தேய்வாய்நின்னேடியையில்லா வென்னையென்னசெய்யாயே. (௫௭)

தக்கன்மகத்திலொருஞான்று தாளிற்படுந்தலையேறி
மிக்கமுனிவர்மந்திரநீ ரிறைப்பவின்னுமீண்டிலாய்
நக்கன்பளவாய்ப்படுக் களத்தேயிறங்குநஞ்சுநினை
யொக்குமென்பதறியாமை யன்றேவொளிர்வெண்மதியமே. (௫௮)

அங்கமதினஞ்சிறுத்தினே னங்கமல்லாவவிர்சடைமேற்
றங்கநினைவைத்திட்டதுநின் கொடுமைகருதித்தானன்றே
பொங்குமமுதகலையென்ன நின்னைப்புகறலவெண்டிங்கா
ளிங்குமனிதர்காராட்டை வெள்ளரடென்பதேய்க்குமால். (௫௯)

உருப்பமிதுவன்றழல்சிவப்புற் றுலகர்காணவொளிகரவு
நெருப்புவெண்மையென்பதுநன் னியாயநின்னைக்கருதித்தன்றே
பொருப்புகறுஞ்சந்தனச்சேறு புலர்ந்துபொரியப்பூவணையும்
விருப்பமலருங்கொளுந்தவழல வீசியெழுந்தவெண்டிங்காள். (௬0)

இன்றேருலகிலெனக்கொன்ற பிறர்க்கொன்றாகியிருக்கின்றாய்
நன்றேவுனக்குமதிய மேஞாயிறேபோல்வாழாமன்
றூன்றேகையர்களியாவரையு மொய்யக்காணுமுயற்சியிலை
லன்றேதேய்ந்துபோகின்று யக்தோவதனையறியாயோ. (௬௧)

இனையவாழையங்காடுகண் டெங்கண்மாதேவி
முனிவர்வானவரியாவரு முறைமுறைபோற்றத்
தனியனாயொருபுறம்பசுந் துளசுவைதருசெந்
தனியவாவியவுள்ளமோ டிருந்தனன்களித்து. (௨௰)

ஐந்தாவது - கதலிவனகதி - முற்றிற்று.

ஆக-கதி-டுள-க்கு-விருத்தம்-டு-அரு.



பதினெட்டாவது

## சாதகாங்க்கதி.

வினையடுத்த விழுமந்துடைத்தெமக்
கனையடுத்த வருளுடையல்லமன்
மனனடக்கம் வசவற்குணர்த்துத
லினையெடுத்தினிச் சாற்றுதுமமரோர். (௧)

காவினீடு கதலிவனத்துமா
தேவிபோதத் திருவருள்செய்தவன்
மேவிஞான விளக்குறவெம்முடை
யாவிபோலும் வசவனறைகுவான். (௨)

மத்தவாத மயக்கமிலாதுயர்
முத்திசாதன மொன்றுமொரீஇந்தரு
ளத்தனீயென் றடிகடொழுதெழப்
பத்திவேண்டும் பரமன்பகருமால். (௩)

பரமமுத்தி பதம்பெறுமேதுவுட்
கரணசுத்தி யதனதுகாரண
மரணெறித்த வமலற்குறித்தநற்
கிரியையித்திறம் வேதங்கிளக்குமால். (௪)

மனமிலிங்க மருவிலையேலுட
றனிலிலிங்கந் தரித்துமிலையிலை
யெனவியம்பு மினையிலியாகம
நினைவர்ச்சூழ னிற்கநிறுத்திநேய், (௫)

தாவிலாத மனமொடுசார்தரா
தோவுமாயி னுலகிற்புனலுமென்
பூவுமொடொறும் போக்குறுபூசனை
யேவிபோகிய வாகநீர்க்குமால். (௬)

புறம்புகாண்குவன் புல்லியனீசனை
யறிந்தருளி யகம்புறக்காண்பனு
லெறும்பிகாணறி வின்கரும்பேகொளுஞ்
செறிந்தவாடிலை தின்னவனென்பவே. (௭)

காங்கணல்ல கருமஞ்செயாதிற்பத்
திரிந்துசெல்லுந் செலாதவிடத்துநெஞ்
சொருங்குறுத வொருமனந்தன்னினும்
பாங்கவல்லற் படுக்கும்பகையிலை. (௮)

துயிலையின்பெனச் சொல்லுதலிந்தியத்
தியலுநெஞ்ச மிலாமையினாலன்றே
பயிலுநெஞ்சம் பாங்குதிரிகருந்
செயலிலில்லை சிறிதுஞ்சுகமரோ. (௯)

மனமொருத்தன் வசப்படுமேலவன்
பிணிவருத்தும் பிறப்பையடைகிடான்
மனமொருத்தன் வசப்படாதோடுமே
லனிபிறப்பிடை நாளுஞ்சுழலுமே. (௰)

அறவினைக்கு மரும்பொருளின்பொடு
பெறுவதற்கும் பெருங்கல்விகற்றுயர்
விறலினுக்குநல் வீரந்தருக்குமொண்
டிறலினுக்குந் துணைமனமென்பவே. (௰௧)

நல்லசெய்து நரையுயர்க்கவு
மல்லசெய்தங்க ளற்றிடைத்தாழ்ப்பவும்
வல்லதிந்த மனமலதையனே
யில்லையென்ன வியம்புமறையெலாம். (௰௨)

நெஞ்சமாதூய நேசனைநண்ணுமேல்
விஞ்சுமாதகங் கோடிவினைப்பினு
மஞ்சுறானவ னவ்வினையாவையும்
பஞ்சுதீயிடைப் பட்டெனமாயுமே. (௰௩)

மக்கண்மானிட ரொன்றுமனத்தினன்
மிக்கமேன்மை விளங்கினதிலலெனிற்
பொக்கமேவும் பொறிகளோராங்கிரு
லொக்குமாவினை யொத்துயர்வுற்றிடார். (௰௪)

கெடுக்கவல்லதுங் கெட்டவர்தங்களை
யெடுக்கவல்லது மிம்மனமென்றதை
யடக்கவல்லவ னையமவக்கடல்
கடக்கவல்லவ னுவன்கடிதரோ. (௰௫)

ஆயுளைமிககோரியசெயலெலா
நேயமிக்க மனத்தைத்திருத்தல்காண்
வாயுநிற்க மனமுமுடனிற்குந்
தோயநிற்குறி னிற்குந்துரும்புமே, (௧௬)

ஓடுமாவை நிறுத்துதி னுள்ளுறக்
கோடும்வாய்க்கீக வினைத்தினைகொள்ளுவார்
நீடுமாமனை நிற்கநிறுத்துறி
லோடும்வாயுவை யுள்ளுறவீர்ப்பரால், (௧௭)

அடுத்தநாடிகளங்கொருமூன்றிலும்
விடுத்தும்வாங்கியு மேவநிறுத்தியுந்
தடுத்துவாயுவைத் தன்வசமாக்கில்வாய்
மடுத்திடாது மனமும்வசப்படும். (௧௮)

ஓடும்பொன்னு முறவும்மனைகயுமோர்
கேடுஞ்செல்வமுங் கீர்த்தியுநிந்தையும்
வீடுங்கானமும் வேறறநோக்குதல்
கூடுந்தன்மை கொளுமனநன்மனம். (௧௯)

மன்னுகாம வெகுளிமயக்கமென்
றின்னகூடியெறிவளிமுற்சுட
வொன்னவாடு மியன்மனந்தீமனந்
தன்னையாருந் தடுக்கத்தகாதரோ. (௨௰)

மறிந்திடாது மனப்பவனங்கடாஞ்
செறிந்தவாயிற் சிவமயமாகுமா
லறிந்துவாயுவை யஃகுனமெய்தினோ
னிறந்திடாதவி லிங்கப்பிராணியாம். (௨௧)

இன்னவாறு பலவுமியம்பினு
னன்னைபோலுகம் மல்லமதேசிகன்
றன்னைநேர்தரு சைவம்வளர்க்குமோர்
மன்னருக்கும் வசவனைநோக்கியே. (௨௨)

நின்னைநோக்கவு நின்னையிறைஞ்சவு
நின்னைவாழ்த்தவு நின்மொழிகேட்கவு
மென்னமாதவு மெய்தினவோவெனப்
பன்னிகாதற் யணிந்தனனத்தியே. (௨௩)

சித்தராமனுஞ் சென்னவசவனு
முத்தனுமருண் மாத்தன்முதலிய
பத்தராகும் பலருமென்புன்றலை
வைத்தநாதன் மலரடிவாழ்த்தினர். (௨௪)

ஆனகாலேயி லல்லமனுகிய
ஞானவாரி கடந்துலகெங்கணு
மேனைமாதவர்க் கின்மையளிக்குவ
யானெனுவுளத் தெண்ணினனென்பவே. (உ௫)

சாதகாங்ககதி - முற்றும்.

ஆக-கதி-௰அ-க்கு-விருத்தம்-அஅக.



பத்தொன்பதாவது

## கோரக்கர்கதி.

வசவனை முதலாயுள்ள மாதவர்தமையகன்று
பசுமதிதவழ்ந்துவட்டுப் பருப்பதமலையைநண்ணிக்
குசைசூடுமறையோர்போற்றுங் கோரக்கனெனும்பேர்ச்சித்த
னிசைவுறவுண்மையெந்தை யியம்பியவாறுசொல்வாம் (க)

பொறிவழிசெலாதுநெஞ்சம் புனிதமாம்வகைப்புகன்ற
நெறிமுறைவழாதியற்றி நீவிர்நின்மின்கண்மிக்க
வறவரையுலகிற்கண்டிங் கடைதுமென்றுண்டையோர்கட்
கிறையவனினிதியம்பி யெழுந்துமின்னெனமறைந்தான். (உ)

கன்றின்வாய்முலைநெகிழ்த்துக் கறவைவிட்டகன்றதென்னச்
சென்றனனையனென்று திசைதொறுநோக்கிமாழ்கி
வன்றழலிழுதுபோல மனமுகக்கண்ணீர்மல்கி
நின்றனர்வசவனாதி நிகரில்சற்பத்தரெல்லாம். (௩)

காணுதலெழுதிகல்லார்க் காணினங்கவர்பானட்புப்
பேணுதலொழிகபேணிற் பிரிவுறலொழிகவுற்றான்
மாணுயிருடம்பில்வாழும் வாழ்க்கைபோயொழிகவென்று
ணிடுமொருதாய்நீத்த பார்ப்பெனவுளக்குலைந்தார். (௪)

தண்டநாயகன்கரத்திற் றம்பிரான்றன்னைக்கண்டு
பண்டுபோலுவகைபூத்துப் பத்திசெய்தாங்கிருந்தான்
றெண்டனுகியவிராமன் சொன்னலாபுரத்துநெஞ்சிற்
கொண்டவாரியனேடேகிக் கொடுவழிதப்பிநின்றான். (௫)

அல்லமனறைந்தமாற்ற மகந்தொடுபிறநுந்தாஞ்செய்
கல்லனபுரிந்துதந்த மிடந்தொறுநணுகிவாழ்ந்தார்
தொல்லைவல்வினையாற்றன்னைத் தொழப்பெறுமடியார்தம்பாற்
செல்லுவலென்றுசென்றேன் செயலினித்தெரிக்கலுற்றும். (

ளரிபுரைதளிர்தளிர்ப்ப விளமரக்காவிற்றென்றன்
மருவுதல்போலவன்பர் மனமொடுகண்களிப்பத்
திருவுருவொன்றடைந்து சென்றவக்கருணைவள்ளல்
கருமுகிறவழ்பாரைப் பருப்பதங்கண்டுசென்றான். (எ)

துல்லமன்கண்டுசெல்லு மப்பருப்பதத்தின்மேன்மை
சொல்லுதலரியாராகிச் சுரர்முனிவரர்கடம்முள்
வல்லவனெனவிருக்கு மறிஞருமயங்கிற்றை
புல்லறிவாண்மைகொண்டு புகலுவன்சிறிதஞ்சாமல். (அ)

காடொறுமுதித்தொடுங்கு ஞாயிறுதனைச்சுமக்குங்
கோடுறுவரைகுணக்குங் குடக்குமாய்த்திசைத்துநிற்பக்
கூடுதல்பிரிதலின்றிக் குறைமதிதலைசேர்ந்தின்றுந்
தாடருகதிரைச்சென்னி தரிப்பதக்குன்றமாதோ. (௯)

பொன்னிற்குன்றெழுவாயாகப் பொருப்புளவிறந்துநிற்பச்
சென்னிக்கட்டவழ்வெண்டிங்கட் சிலாதரன்குழவிவெற்பு
தன்னைக்கண்டவரையென்றோர் தலைமிசையேற்றுமென்றேன்
றின்னற்கட்டடித்தன்றோவள் விறைமலைவிளர்த்ததம்மா. (௰)

மாசிவலிங்கமொன்று பருப்பதம்போற்றரிப்பத்
துரிசறவடைந்தேனில்லை யென்னுமச்சோகத்தீயா
லுருகுறுமமையத்தோடி யொருமலைகுழைத்தானன்றிக்
குருகமர்தளிரியற்குக் குழைந்தவன்குழைக்குமோதான். (௰க)

பொருப்பிறைமகனுனெற்குப் பொருந்துறுதீசனும
நெருப்பனையான்சார்ந்தாங்கு நிகழ்தொடர்மொழியினன்றிப்
பருப்பதமெனவேகூறப் படுமிதுவென்றுநாணுற்
றிரைப்பொலிகடலிற்சென்று வீழ்ந்ததுசிலம்பொன்றம்மா. ()

தன்னையோர்கையால்வீழப் பிலத்திடைத்தள்ளிவந்தோன்
சென்னியால்வணங்கியேத்துஞ் சிலம்பினைவிந்தமொக்கு
மென்னலாமென்னலாமோ விணையிறுபருப்பதத்தைப்
பின்னுவார்திரையிலிட்டுப் பெயர்த்தபுன்மத்தோவொக்கும்.()

நகைமதிப்பிள்ளைபோல நரைத்தகூன்கிழவன்சென்றோர்
முகைமலர்ச்சுனையின்மூழ்கி முருகுகொப்புளிக்குந்தோட்டுப்
பகைமலர்க்குழன்மடந்தை யகர்ந்தவோராணைகாத்து
நெகிழ்மனத்தன்மனைபோல் வந்துமேலெழுவனன்றே.' (௰௪)

சினைமலர்புதன்மென்போது செழும்புனற்பசுந்தாட்செந்தே
னனைமலர்தமதுதண்பூ நண்ணியீர்ங்கொடிகள்குண்டுச்
சுனைமலர்விழிகள்போலத் தோன்றுமம்பாரைக்குன்றிற்
புனைமலர்பலவுங்காட்டும் புரிகுழன்மகளிர்போலும். (௰௫)

தூங்கிசையருவிபாயத் துளக்கைவெண்கோட்டிறங்கா
லோங்கவுநெடுநல்யானை யேற்பவெந்தழலலாமற்
றேங்குதண்புனன்மேனோக்கா தென்பதுதிரச்சென்று
பூங்கதிர்பனிவெண்டிங்கள் போன்மெனத்திவலைசெய்யும்.

விஞ்சையருளர்நரம்பின் வீணையாழ்மின்னோசை
குஞ்சரமனையவென்றிக் குன்றவாபுரத்திலென்றுந்
தஞ்செவிமடுத்துக்கேட்யா தனிநிலையோகமுற்று
ரஞ்செவிநிறையவுள்ளே யரியயாழோசைகேட்பர். (௧௭)

பீடுறுகருவினோடு பெயரியவில்லினும்ப
ரோடுறுபசும்பொன்னாற்செய் தோங்குறுசிகரமொன்று
நீடுறுசிலாதநன்றனெடுந்தவப்பிள்ளைக்குன்றின்
மோடுறுமுடியின்மீது கவித்தபொன்முடியையொக்கும். (௧அ)

செங்கதிரவனெழுந்த திவாவிடைக்குடம்மைதெற்றிப்
பொங்கொளிமரத்திற்சீர்சால் புள்ளினம்பொறையுயிர்த்துக்
கங்குலினடைகிடப்பக் கருதிவந்ததனைக்கண்டு
வெங்கனல்கொளுந்திற்றென்று மீமிசைச்சுழன்றிரங்கும்.

நறுமலர்க்குழல்வெண்முத்த நகைமலைமடந்தைமிக்க
வறம்வளர்ப்பதற்குநெற்சிற் றளவி[..]நாழியென்று
கறைமிடற்றிறையளப்ப வொருபெருங்கருவிதானிவ்
வெறிமலர்க்குன்றின்மிக்க வேய்களுளொன்றிற்பெற்றாள்.

நெடியவன்குறுகியப்பா னின்றுகைதொழுமவ்வெற்பின்
மிடியுடையொருவன்விற்கும் விறகினைக்குறித்துச்சென்று
வடிவுடைநவியங்கொண்டோர் மரத்தினைத்துணித்தலோடும்
படியுறுபசும்பொன்னாகும் பரிசுகண்டுவந்துசெல்வான். (௨௧)

கொண்டல்வண்முழவினார்க்குங் கோதைவெள்ளருவிவெற்பில்
வண்டுபாண்முரன்றுமூசி மலர்திளைத்துறுசெந்தே
னுண்டுகண்டுயில்பூங்கொம்ப ருயர்மரத்திவர்ந்திராசி
னண்டுகண்டஞ்சிமந்தி னேரோவெனவிழியுமன்றே. (௨௨)

தளிர்க்குளகினைத்தேன்றோய்த்துத் தனதுவாய்க்கொடுக்குஞ்செ
பளிக்கறைபதனுட்கண்டு பரிந்துவேறொன்றினுக்கிங் [ய்கை
களித்ததென்றுளமயங்கி யரும்பிடியொருகூர்ங்கோட்டுக்
களிற்றினைமுனிந்துசெல்லுங் கம்பலையுடைத்தக்குன்றம் (௨௩)

நண்ணுறுமதியின்மானைப் பிடித்துநீதருகென்று
வொண்ணுதன்மடந்தைவேண்ட வொருகுறமகன்கேட்டன்று
மெண்ணுவாகொண்டிராமன் பிடிப்பதற்கெண்ணுமாபோ
லெண்ணிலனிதற்கென்செய்வே னென்றுளமைந்துநிற்பான்(

மேருமந்தரமேயாதி வெற்பெலாமெனைவெறுப்பச்
சாருமென்மாட்டேமுக்கட் டம்பிரானெனநினைந்து
சேருமொன்னலரையஞ்சிச் சிலம்பழுமாறுபோல
வீரவெள்ளருவிபாயு மழகினையுடைத்தனுமாதோ. (உ௫)

இனையனவளமிகுந்த வெந்திருச்சயிலந்தன்னை
யனையினிமிழ்ப்பினைங்கோ னல்லமன்சென்றுநண்ணித்
தனியுடல்சித்திபெற்றுத் தருக்குமக்கோரக்கன்கு
ன்னியுளமகிழ்ந்திருக்கு நல்லிடந்தனையடைந்தான். (உ௬)

அத்தனோர்வருதல்கண்ணுற் றப்பெருஞ்சித்தன்றன்னோ
டொத்தவோர்சித்தனாக வுன்னுபுதனைவியந்து
நித்தநாண்மலர்த்தாடாழா நின்றுகைகுவித்துஞான
சித்தநீவருகவென்றோர் தவிசிடைச்சேர்த்துச்சொல்வான. ()

வேறு.

இரவிவானவனெழுந்ததுமின்றெனத்தோன்று
தெரிவிலாயினகண்களுமின்றெனச்சிறந்த
வரவுநானெதிரின்றுபெற்றமையினின்வரவு
பொருவின்மாதவம் புரிந்திடாக்கெளியதோபுகலில். (உ௮)

மதலையாகியநற்குணஞ்சார்ந்துநல்வாய்மை
சிதைவிலாவடியாரினஞ்சேர்ந்திடாதவன்கண்
ணுதலினுனையுஞ்சேர்ந்திடானென்பவெந்நூலு
முதலிலான்பெறுமுதியம்யாதுகொன்மொழியில். (உ௯)

ஒருவிருந்தினர்க்குரைசெயுமுகமனேடொப்பக்
குருபரன்றனக்கினையனவின்மொழிகூறி
வருபெருந்தகையார்கொனீயுரையெனவாழ்த்தி
யருளினைகடறனைவிளுய்மினறனனென்றே. (௩௰)

செறிந்தமூலவாங்காரத்தின்வேறெனத்தீர்ந்திட்
டிறந்திடாத்தற்கண்டவனென்னையுங்காண்பான்
மறிந்துபோமுடன்மானியையுனைப்பதென்மதித்தென்
றறிந்தஞானிகள்வேறறவுயிபவனறைந்தான். (௩௧)

ஆதிநாதனதருளினற்குளிகையாதிகளான்
மேதையாமுடலசித்திபெற்றவனென்றும்விளியா
னுத்லாலதுபெறுதலனழியுமென்றறைந்தான
பூதமேனியேதானெனப்பொருந்துபுந்தியினான். (௩௨)

உடம்புவாழ்தருள்வாழ்தலுமூன்போதிந்தியற்று
மூடம்புசாதருன்சாதலுமாகவேயுரைத்தா
யுடம்புகாணுயிரென்னநீயுன்னினைபோலு
முடம்புவேறறியாவுலகாயுதனைத்து. (௩௩)

யாக்கைதானெனிலெனதுடலென்பதிங்கென்னை
போகருமாடைபொன் முதலியபொருளுமொவ்வறெனதென்
றுக்குவார்தமிலதனையானெனப்படுமையலாப்
பார்க்கிலயாருளாபதாதியெனுமலலமனபகர. (௯௪)

யானினைத்தனனேடினனென்றியம்புகலாற்
றுனெனப்படுகின்றதேதெனக்கூறுதன்னை
நீநிகழ்த்துகவென்றுகோரக்கனிழியமய
ஞானகற்குருபரனிதுநவின்றனனயந்து. (௯௫)

நானினைத்தனனெனக்காணதினினனறு
மானதன்மையானுடல்பொறிகரணங்களெத்துந்
தானெனும்படிவரும்வர்த்தான்பலவதரு
னீகவின்றதத்தியாசமென்றறிகெனவிழ்த்த. (௯௬)

ஒழியுமென்னுயிரொனுமிடத்தவ்வுயிரொழிய
மொழியவேறுமோருயிருளதாவதைமொழிதி
பழியிலலருட்குன்றமேயெனமுலவனபகாச
செழியமென்மலாப்பததெதையாளயவனசெப்பும். (௯௭)

உயிரொனும்பெயரியங்குமாறகியற்பெயருணாப்பி
னயலுழுந்தனக்கபபெயராகுமேபோராயென
றியலுணர்ந்தவரியமபுவரொவொற கஙிறைவன்
மயலறும்படியுணாததிறநுனாதனனமனனே. (௯௮)

தன்னைச்சச்சிதானந்தமென்றருமறைசாற்ற
மின்னிற்கெட்டிடுந்தசைநிணமென்புதோனமேய்ந்த
வின்னற்பொய்க்குடிலாகிபவுடம்பினையானென
றுணனிகெட்டனையெனகோனியெனவிறுமாக்கும. (௯௯)

வெருவுறப்பிடும்பிறவியையொழித்துமெய்வீடு
மருவுதற்குளம்வைத்தவனிமலவடிவைத
தெருவினிற்புனிதம்பட்டவொன்றினைதீண்டி
ருவருப்பவன்போலருவருத்தவையகற்றும (௱)

மருந்துகொண்டுநோய்தீரப்பவர்போறசிவமருவி
யிருந்தவிவ்வுடம்பினைப்பெரியவாவிடவெண்ணா
மருந்துகொண்டுநோயோடுறமதிபபவனபோல
யிருந்தவிவ்வுடம்போடுறவெண்ணினையென்னே. (௱௧)

பிறந்தவாகமொன்றிறந்திடாப்பெருமையுமுடைத்தோ
வெறிந்தவானசிலைவீழ்ந்திடாதிருப்பதிங்கிலலை
செறிந்தகாரியமென்பதுன்றுமிலுஞ்சிதையு
மிறந்திடாதுகாரணமெனப்படுமதேயென்றும். (௱௨)

மருந்தினுலுடலினித்தமாமென்றுநீவகுத்த
திருந்துவாழ்நாட்பயன்மைகொண்டன்றிவேறில்லை
பொருந்துநீயுடலழிந்திடாதென்பதுபொருந்தா
தருந்தவாவினிவிடுவேண்டென்றனனையன். (௬௩)

ஏதுசொல்லினுமென்னுடலழிவுறாதென்றும்
வாதுசெய்வதென்காட்சியாலுணர்த்துவன்வலியின்
றுதிநாதனதருளினாலென்றுகோரக்கன்
றீதிலாவருள்வாரியோடுரைத்திதுசெய்யும். (௬௪)

இன்னியங்களின்முழங்குவெள்ளருவிவெற்பெறிந்த
மன்னவன்படையன்னதோரொளிரயில்வாய்வாட்
டன்னையெம்பிரான்கைக்கொடுத்தனையவனென்றன்னை
நின்னிரும்புயவலியினாலெறிகெனவிகழ்ந்தி. (௬௫)

அந்தவீச்சிறகன்னதோர்தோலறுமெனினுஞ்
சித்தனானவேலென்றுமுன்னின்றனன்செருக்கி
வித்தன்யானிவன்கருதியதேசெய்துகொடுசின
மைத்தமாதருக்கொழிப்பலென்றருளுளம்வலித்தான். (௬௬)

வாங்கும்வாளினைமின்னெனவிதிர்த்தருண்மாரி
யோங்கிவாழுருமேறெனவதிர்த்தவனுடம்பிற்
றுங்கமால்வரைமீதெறிந்தானெனத்தாக்க
வாங்கொரோசைகிண்ணென்றுமேலெழுந்ததையன்றே. (௬௭)

திருப்பருப்பதநடுங்கியதவ்விறற்சீற்றத்
தலக்கணுற்றிதுதனையுமின்றெடுத்தனனுமென்
றுரைப்பதற்கரிதாகியவச்சமுற்றோடிப்
பொருப்பிறைக்கொருமகளாள்புயங்கள்புல்லினளால். (௬௮)

விஞ்சைமாதர்தம்யாழொலிகேட்டமாவேட
ரஞ்சிலோதியர்பதலைகேட்டயரசுணம்போ
லெஞ்சுமாழ்கினபுள்ளினமெழுந்தசானிமிர்த்துத்
துஞ்சுமாவெழுந்தோடினவான்றுளிதுளித்த. (௬௯)

இன்னவாறொலியெழவுடலூறின்றியிருப்ப
முன்னமேவியசெருக்கினுமும்மடங்கெய்தி
யென்னைநேர்பவரிலையெனவவனுளத்தெண்ணித்
தன்னையேகனிவியந்தனமயறிந்தனன்றலைவன். (௭௰)

ஒலியெழுந்திடவின்னணைந்தனதுபேருடம்பு
வலியடைந்ததின்றெனப்பவரிலைவளிவழங்கு
முலகிலென்றுகைக்குலைத்திவனைகையுரிக்கொருகைம்
மலர்ப்பொருந்துவாளவன்கையிற்கொடுத்திதுவுரைத்தான். (௭௧)

வாங்குவாளினுனின்வலியொடுமார்வமியுந்
தாங்கியென்னைநீயெறிந்துகாணென்றுநந்தலைவ
னுங்குநின்றனன்சித்தனுமஞ்சிலனாகி
யோங்கிவாளினலெறிந்தனனொப்பிலானுருவை. (௫௨)

அனுமயங்குமின்னுழைகதிரெறிந்தவாளாக
வினைமயங்குமெய்ப்படாதுவாள்வறிதுபோயிற்றுப்
பணைமயங்குதோண்மாயைதன்படாமுலைபடாத
மணமயங்குதண்சோதியேல்வாள்படவற்றோ. (௫௩)

வேறு.

வாளெறிந்துகைவிளைத்த கோரக்கநாதன்மிகமனம்வியந்து, நாவிறைஞ்சும்பரனுசுடரேயிவனென்றுமெய்விதிர்ப்பநடுநடுங்கித், தானடைந்தசெருக்கொழிந்து தலையன்பினெறிநடப்பத் தலைப்பட்டெங்கோன், றேனடைந்தசெழுங்கமலத்திருவடியில்வீழ்ந்தெழுந்துசெப்புகின்றான்.

நின்னையறியாதுமது வுண்டவன்போன் மனஞ்செருக்கி நினைந்த பாவம், பின்னரெதிர்நின்றுநின துரைமறுத்துப்பிதற்றெனப் பிதற்று தீமை, யின்னுயிர்கொன்றுடல்கவரு மறவன்போற்செய்தபிழைநீ யெலலாமெந்தாய், மன்னியநின்பேரருளாற் றீர்த்தெனையாட்கோடியென மறுத்துந்தாழ்ந்தான. (௫௫)

செய்தபிழைபோகவினிப்பிழைசெய்யாதுடம்புநசைதீர்ந்துநின்றன், மெய்தெரியினெமக்குநீ யினியமனனப்பெருங்கருணை வெள்ளங்கூற, வுய்தவிலென்பினழப்பொறுத்திட் டடிதரியவான்முதமூட்டுகின்றாய், கைதருசெம்மணியனையாய்யான்செய்வதேதுரைநுகைம்மாறென்று.()

முற்றுமருள்செய்துநீ யானறியவேண்டுபொருண் மொழிதியென்று, பற்றுடலத்தசைதுறந்கோரக்கனிப்பவவன் பருவங்கண்டு, கற்றறிபுமறிவினு லறிவரியபரஞ்சோதி கருணைகொள்ளவ், பெற்றதிருவுளமகிழ்வும் றன்பொடுகேண்மதியென்னப் பேசலுற்றான். (௫௭)

இருந்தபடிகுகேசனைநீ யறிவையெனினின்பிறவி யெனுநோய்தீர்ந்து, பொருந்துறுவைபேரின்ப மெனவமலனகூறவலன் போற்றியெந்தாய், பரிந்கருள்செய்குகேசனெனு மொழிப்பொருளேதுகூறப் படுவன்யாவன், றெரிந்துணரவருள்செய்வா யென்றுதொழவெமபெருமான் செப்புகின்றான். (௫௮)

குகையிதயமதன்கணம ரிறையீசனென்றபொருள் குறித்துக்கேண்மோ, நிகழனையகுகேசமொழி யுடையனியான்றானெனவே நிமலன்கூற, வகமகிழமுகமலர்ந்து சித்தனறைகுவனீயே யாகினுநின், முகையவிழ்மென்மலர்க்கரத்திற் சிவலிங்கங்கொண்டதென்கொன் மொழிதியென்றான். (௫௯)

பிறந்தவியன் பெறவுலக னெனக்கண்டு கொண்டுமனம் பிறழ்கலின்றிச், சிறந்தசிவலிங்கமலர்க் கரங்கொண்டு பூசனைதாஞ் செய்யவேண்டி, நிறைந்தவினை துருவாரு மிக்குறிகைக்கொண்டனன்யா னிங்காதென்று, மகிழ்ந்துதெளிகுதிமனமென் றருள்செய்தெங்குருதேவ னறையலுற்றான். (௯௰)

போககனாகியகுரவ னெஞ்ஞான்று நற்கருமம் புரிகவென்று, வேதிமுதலாகியநூன் முழுதுமொருமகொருவக்கம் விதித்ததாலே, சாதகனாகியசிருவ மாணாக்கனபாசவலி தணிக்கவல்லான், மேதினிமேலுடலோடுநற் செயல்விடுவதன்றியிடை விடலாகாதால். (௯௧)

என்றுதனதியலுணர்த்தி யுட்புநானென்றிருங்க வியல்புபோல, நின்றவெல்லையுணர்ந்துநீ சோகமபாவனைகொண்டு நிற்பையாயிற், பொன்றலுறவிடங்களுழன் றனினைப்பப்போதல்போற் போமவ்விச்சை, கன்றறிதியெனவறிவித் தனனெங்கோன்கோரக்க நாதன்றன்னை. (௯௨)

ஞானகுருபரனருளாற் றனக்குரைத்தமொழிப்பொருளை நன்றறிந்திட், டூனவடிவென்பதுவிட் டுண்மையலாவனைத்தையுநீத் துண்மைகண்டு, தானதனையடைந்துதா னதுவென்னுமருளகன்று தானேயாகி. வானவருமறிவரிய பெரும்புகழ்கோ ரக்கனவண் மன்னினானால். (௯௩

கோரக்கர்கதி - முற்றிற்று.

ஆக-கதி-௧௯-க்கு-திருவிருத்தம்-௯௪௬.



இருபதாவது

# முனிவர்கதி.

மணிவரைமகளொடு பவளவார்சடைத்
தனிவரையமர்திருச் சயிலநீங்கியே
துனிவரையல்லமன் சுருதிமெய்ப்பொருண்
முனிவரையுணர்த்திய முறைமைகூறுவாம். (௧)

அருந்தவமுயன்றகோ ரக்கற்கம்முறை
விரித்தறிவுறுவமா மெய்ம்மைத்தன்மையைப்
பரிந்தருளமலனப் பாலுமுத்தரம்
பொருந்துநர்தமக்கருள் புரியப்போயினான். (௨)

நல்லனதிபல நாடுறுதுகொள்
வல்லமுதெனவருண் மழையெனப்படு
மல்லமனெதிர்க்கவ ரமருளாற
மில்லவரொருதறி வியற்றினனரோ. (௩)

ரர்வருந்தனதருட் கேற்றுளானெனப்
பாவவென்றிறப் யரிந்தநன்னெறி
மேவுவந்தருள்புரி விமலனுமிடை
மாவழுங்குறுமொரு வனத்திற்போயினான். (௪

அக்கொடுவனத்தெதி ரன்பென்கின்றதுட்
புக்கறிகிலாவொரு புளினன்கூன்புறக்
கொக்கெனநாடொறுங் கொலைகுறித்தவன்
கைக்கொடுமரமொடு கடிதுதோன்றினான். (௫)

அன்பனுய்க்கண்ணிடங் தப்பும்வேடனுக்
கின்பமீகுதல்புகழ்க் கேற்றதன்றுநான்
வன்பனுய்த்திரிபுமிவ் மறவற்காப்பலென்
றெனபொலாமணிமன மிரங்கிற்றென்பவே. (௬)

நல்லறிவனுள நடுதற்கொப்பிலா
வல்லமன்வினையற வருட்கண்வைத்தனன்
கொலலையின்விதையிடக் கொழுப்புகாழுளி
புல்லெரிவுறவழும் யோகட்டென்னவே. (௭)

மேவுதீவினையெலாம் விளிந்துதூயனாய்ப்
பாவியேனுய்வகை பகாதியென்றனன்
மாவலால்வழுங்குறு வனத்தில்வேட்டுவன்
யாவர்தாமிறையரு ளெய்தினுய்ந்திடார். (௮)

அறிவெனும்வேலினு லைம்புலன்களா
மறியினமருளெனும் வலையைத்தப்புறு
தெறிதுவையெனினுனக் கில்லைத்துன்பெனு
நெறியினைவழுவற நிமலன்கூறினான். (௯)

அறிவெனும்மனஞ்சிலை யம்பதாகநான்
குறியெனவெய்வையேற் குமாரின்றனைப்
பொறிமதிவிலங்கைமுன் புரந்துளான்றலை
யறிபடவெய்தவன் பணியுமென்றுமே. (௰)

இப்பரிசெறழ்வலி பெயினனுய்வகை
செப்பினன்னிலையருள் செய்திருத்தியே
யப்புறமருளுடை யமலன்போம்பொழு
தொப்பறுதவவன மொன்றுதோன்றிற்றே. (௰௧)

கோட்டமைகரிகளுங் கொடுமடங்கலும்
பாட்டமைநகைதவிர் நரிசினாதற்
காட்டுவொடுமதி யமர்பிரான்சடைக்
காட்டதுவமையாங் கண்டதில்லையே. (௰௨

பெயர்க்குறுகாலகன்கை யாசப்பெற்றவு
முயிர்க்குறுநாசிகை யாகவுள்ளவு
மயிக்கறுதீயினை வளர்த்துவான்புனல்
பயக்குறுமுனிவார் பணிகள்செய்யுமால். (யரு)

மறைபல்வோதுநர் மகம்வளர்க்குநர்
கறைமிடற்றுடையாங் கடவுட்பூசனை
முறைவழிபுரிகுநர் முச்சவித்தொரு
தறியெனவசைவற விருக்குந்தன்மையார். (யசு)

வேறு.

ஆயிருக்கும ருந்தவர்தங்கள்பாற்
போயிவர்க்குறு போதனையாற்பயே
நோயகற்றுவ லென்றுநவன்றனன்
ருயெனக்கொரு தாளெனுமல்லமன். (யடு)

கோற்றுநோன்புட னொருந்துவருந்துவி
ராற்றினீர்மக மாதிவினையினுன்
மாற்றுமாயை மலஞ்செறுவிற்படு
சேற்றினுற்கழுஞ் சேறுமிகர்க்குமால். (யசு)

ஞானங்கொண்டு நணுகுஞ்சிவபத
மூனங்கொண்ட கருமத்துறுவது
வானங்கொண்டு வளர்த்தல்புகைமது (?)
மானங்கொண்டு வளர்த்தலையொக்குமால் (யஎ)

குடுமியங்கிரி யொப்பக்குவித்தபுற்
சுடுதல்கொண்டு பிறவிசுடப்படா
தடுபுலன்க ளறிவெல்லுமங்கியிற்
சுடுதல்கொண்டு பிறவிசுடப்படும். (யஅ)

போதமாகும் புனிதத்தழலினுட்
பேதகாவனை யேரவிபெய்வனே
லாதிசோவுடை மாசியவனென
வேதம்யாவும் விளங்கவிளம்புமே. (யகூ)

மறையினுள்ள கருமமனவினை
யறியர்கொள்ளுதல் போலமதியறுஞ்
சிறியர்கொள்வர் தெளிதத்துவமசி
யறிஞர்கொள்வ ரணிகொளுஞ்செல்வர்போல். (உய)

என்றுகூற விருந்தவரன்பொடு
நின்றுஞான நெடுந்தகைதாண்மிசை
யின்றுநீவா வெத்தவஞ்செய்தன
மன்றயாமென வாழ்த்திவணங்கினர். (உக)

மாயைதோன்றிய ஞான்றுமனத்தெழு
மூயமோக முடிந்திடச்செம்மலர்
வாயினூற்றுரு வாசன்சொலப்படுந்
தூயனுமிவ னென்றுதுதித்தனர். (௨௨)

இன்னவாறிங் கிருந்தவரின்புற
மன்னுஞான மறைமொழிகூறியே
தன்னைமேவுந் தலைமைபுரிந்தன
னென்னைபோலுநம் மல்லமதேவனே. (௨௩)

முனிவர்கதி- முற்றிற்று.

ஆக-கதி-௨௰-க்கு-திருவிருத்தம் - ௯௯௯.



இருபத்தோராவது

# சூனியசிங்காதனகதி.

அல்லமனையறிதற்கோரறிகருவியாகவுன்னிச்
சொல்லரியவெழுநிலைப்பொற்சூனியசிங்காதனமொன்
றில்லையெனவில்லையெனுமெங்கள்குருவசவேசன்
மல்லனுறவினிதாற்றிவைகுமுறைவகுத்துரைப்பாம். (௧)

ஒடுக்குமனம்வீட்டினெறிக்கொருதுணையாகும்புறத்து
நடக்குமனநிரயவழிநடப்பதற்குத்துணையாமென்
றிடக்கர்மனமடக்கும்வகையெம்பிரானியம்பியவா
றடக்கமனமுறுநெறியினருணந்திதலைப்பட்டான். (௨)

நில்லாதுயோகனத்தைக்கால்பிடித்துநிறுத்தியே
வில்லாருமதியமுதம்விருந்திட்டுநட்புறீஇப்
பொல்லாதபுலனுகரப்புறத்துநிலைதடுமாறிச்
செல்லாமலுடன்கொண்டுசித்திரமொத்திருந்தனனால். (௩)

நின்றமனங்கொண்டுதானித்தமாந்தனைப்புணர்ந்த
வென்றுவருஞானகுருவெனவெழுந்துவளர்காத
லொன்றுமொழிவுறநிற்பவுவப்பதுலகிற்பொருள்வே
றின்றியருணந்திபிரானைந்தைவாவினைநோக்கி. (௪)

எவ்வுருவினெடுவருமோவெம்பிரான்றெளியகிலேன்
செவ்வியவோர்தவிசமைத்துச்சேர்ந்ததன்மேலிருப்பவனை
யவ்வியமிலல்லமனென்றறிவன்யானென்றுன்னிப்
இவ்வுலகமுளம்வியப்பவிதுசெய்தானருளாநதி. (௫)

## வேறு.

ஆதியாதாரமாதி யடுக்கெனப்பன்னிறத்த
சோதியேழ்நிலைகளோங்கச் சூனியபீடமொன்று
மோதினே னுளம்வியப்பப் பொன்மணிபளிங்குகொண்டு
சாதிரான்மறைகள்போற்றுஞ்சைவநாயகன்செய்வித்தான் (௬)

காரணவுமாதியேழ்மேற் கண்டிடுஞானிபோலச்
சீரணிநுதலின்மீது சென்றுகாண்யோகிபோலப்
பூரணஞானந்தப் போதகனிருப்புக்காண்யா
னேரணிநிலைகளேழ்மே னிகழ்வெளித்தவிசமைத்தான். (௭)

களங்கமின்மதியம்போலக் கண்டவூர்மனமலர்த்தும்
பளிங்குசெய்நிலையுள்வந்து பார்ப்பவர்மெய்ந்நிழற்போய்
விளங்குதறன்மேற்றோன்ற வெந்தெரிபசும்பொனாற்செய்
துளங்கொளிநிலையைச்சென்னி சுமத்தல்போற்செய்தவொக்கு

திருந்தியபளிங்குகொண்டு செய்தவந்நிலையின்வாய்தல்
பொருந்துதறெரிகிலாராய்ப் புகுந்துகாண்மனிதரெல்லாங்
கரங்கொடுதடவிக்கண்டு கண்டெரியார்கள்போல
வருந்தியமனமகிழ்ந்து வசவனைவியப்பரன்றே. (௮)

நினைவினொருவன்செய்த நெஞ்சுளாலயமேயன்றி
வினையினாலுலகர்செய்து விளங்கியபணிகடம்மு
ளினையதோடுவமையாத வில்லையென்றும்பரெல்லாந்
தனையலானிகரிலாத தவிசினைவியந்துநின்றார். (௯)

அம்பராசனமியன்ற வதிசயஞ்சேளாமுக்கட்
டம்பிரானடியாராகத் தரையுளாரெல்லாஞ்சென்று
செம்பொனாலியன்றவந்தச் சீர்கெழுபீடநோக்கி
யெம்பிரான்வசவதேவ னிணையடிதொழுதிருந்தார். (௰)

கலையிதுகல்விக்கென்னக் கற்றவர்பலருமேத்தத்
தலைமிசையமைத்திருந்த சாரதாபீடமேபோ
லுலைமனமிறந்ததாமிவ் வொருதனிஞானபீட
மருடருகுருகுகேச னன்றியேறிடுதற்காமோ. (௰௧)

இப்பெரும்பீடமேறி யிருந்திடவல்லோனென்றும்
வைப்பெனும்படிமறைக்கெம் மனத்திருப்பதற்குவல்ல
வப்பெருங்கருணைக்குன்ற மாகுமல்லமனேயென்று
செப்புறுபரிசிலானைச் சிந்தைசெய்திருந்தானந்தி. (௰௨)

கலையொன்றுகங்கையாற்றிற் கண்ணிவைத்தரசவன்னம்
வொருதலைநோக்கிநிற்கும் யாறுபோலிருள்விழுங்கிப்

மெருகொளிவிரிக்குஞான பீடமொன்றனுமய்வாக்கிக்
குருபான்வாவுநோக்கிக் கொண்டிருந்தனனெங்கோமான். ( )
ஏட்டிலைப்புதுநோற்றி லெதிர்கிழித்தேறவிட்டோன்
பாட்டிடைத்தலைவனன்பர் பலருநம்வசனன்றன்னை
காட்டமுற்றடையுமாசா னமக்குமாமென்றிருந்தார்
வீட்டினுக்கேற்றசோதி விருந்திற்குமுதவுறுதோ. (௰௩)

சூனியசிங்காதனகதி- முற்றிற்று.

ஆக-கதி-உக-க்கு-திருவிருத்தம- ௬௮௬.



இருபத்திரண்டாவது

## சூனியசிங்காதனத்திலிருந்தகதி.

துள்ளம்புகுபுனல்போனெறியடருஞசிவனடியா
ருள்ளம்புகுமருணந்தியிவ்வுலகோரறியாமற்
கள்ளங்கொளுமனமோடுசெய்யனைமேலொருகருனை
வெள்ளந்கடிதேறுஞ்செயல்விருப்பாலெடுத்துரைப்பாம். (௧)
சிரனுடுறுகயலாடல்செய்செய்ந்நாடுடையுழவ
ாரனுடுறுமொருகாவிரியறனுடுறுமுறைபோம்
பாரனுடுறுமடியார்வினைபரிபதகிரிதாவன்
வானுடுறுமுருகும்பா வசவன்புறவசவன். (௨)
பொன்னனமைகதிர்வீசனைபுரிந்திறுபருவம்
பின்றுயினயான்செய்தொழிலபிளளைதகொழிலாயிற்
றெந்நாள்வருமெனையாளுடையெம்மானறிபென்ன
றுன்னுவருதுயரோடுளமுளைந்தான்வினைகளைந்தான். (௩)
இவ்வாறமர்நாளோர்பகலெம்மையாளுடைவசவன்
செவ்வாறுசென்மனத்தல்லமதேவனவாறுன்றிற்
றவ்வாறதுநிகழ்வுற்றவனோர்வந்தனையொருநா
னெவ்வாறுரைசெய்வன்பணியிறையுஞ்சொலவரிதால். (௪)
வலமாடினவிழிதோளருள்வசவற்கதிநாரந்
செலுமாடவன்வருநாள்விழியிடமாடியசெயல்வாய்
குலமாதுளமெனவேமகிழ்கொண்டன்புநிறைந்து
மலமாயைகடுரக்குஞ்செனவசவற்கிதுபுகல்வான். (௫)

வேறு.

நற்குறிபலவுமிற்றை நாணிகழ்கின்றவென்பால்
வுறகலேமுனிவர்போற்றும் வசவலக்கிழச்சியானும்

மொல்லைமிக்கிலத்திழிந்த வும்பர்வாழ்மகளிர்போல
வில்லெனுமருங்குன்மாத ரிருந்தனர்நிலைத்தேமேழி. (௰௫)

திருநகரிதனையின்று திருந்தவேறலங்கரிப்ப
நெருநனலுள்ளனகழித்து நீத்தவையமார்கோமா
னொருநகாலங்கரித்தற் குரியனவெண்ணினந்தி
பெருநகாணியின்மிக்க பெருமையார்கூறவல்லார். (௰௬)

இன்னணமலங்கரித்த வெழின்மணிமறுகினூடு
மன்னவர்மன்னனுய்ய மந்திரிக்கிழமைபூண்டோன்
றன்னொருதூரவன்றன்னைத் தானெதிர்கொள்ளவேண்டிப்
பொன்னவிர்கோயினின்றும் புறப்படாப்போதலுற்றான். (௰௭)

பதியுமப்பதியோர்களும் பசுவுமப்பசுவின்ஞானம்
பொதியுமைம்பாசந்தானும் பொருளெனவழக்கிற்கூறும்
விதியுமப்பாசம்பொய்யாய் வேறறவீடுமோதி
மதிமயக்கறுத்தசென்ன வசவனுமாருகுசென்றான். (௰௮)

எம்மடிமாசுழுக்க ணிறைபவனடிமைபூண்டோர்
தம்மடிமாசுநீக்குந் தன்மொழிநெறிவழாத
செம்மடிவாலமாச்சி தேவனுமன்புதாயின்
மும்மடியாகுநந்தி முதல்வனோடருகுசென்றான். (௰௯)

சங்கரன்சடையிற்பாம்புந் தவிழ்ந்தெதிர்கிடந்தபிள்ளைத்
திங்களுஞ்செய்தவொப்பச் செகமைமானவசமாகக்
கங்கையுந்திரையடங்கக் கானமுன்பாடியீச
னிங்கான்றனதுவாங்காக் கின்னரப்பிரமன்சென்றான். (௨௰)

தண்டினர்காரகக்கையர் சடையருத்தூளணத்தார்
புண்டரநுதலர்கற்றோய் பூந்துகிலுடையர்நீல
கண்டனையகம்புறத்துங் கண்டவர்வினையினீங்கித்
தொண்டுறுநெறியினின்றோர் சூழ்ந்தனரெண்ணிலாரே. (௨௧)

தோள்வலத்துடித்தநின்று சுடரிலைவேற்புனைன்று
கோள்வலங்கொள்ளுஞ்செம்பொற் குன்றெனுமார்பிற்காண்பவ
வேள்வலங்கொண்டநெற்றி விழியிறையருளாலென்னும்
வாள்வலங்கொண்டசேனை மறவர்வாரிதியோற்சூழ்ந்தார். (௨௨)

எங்கள்வாழ்வனையநந்தி யெழுந்தருண்மறுகினூடு
மங்குல்வானிரவிப்புத்தேண் மணிநெடுந்தேர்ப்பைங்கிள்ளை
தங்கள்காற்றாட்குடைந்து தரிப்பரிதாகியோட
வங்கண்மாஞாலமெல்லா மகிழ்தரநடந்தவம்மா. (௨௩)

ஆர்வொடுமண்சுமக்கு மடிகளிறெட்டொடும்போர்
மொரவொருகளிகல்யானை யோதுமென்றெண்ணிலாத

வீரரொடுபுணர்கிடந்த விர்ங்கவுட்சிறுகட்டுங்கு
கரவளைவெண்மருப்புக் கடாக்களிறெழுந்தவன்றே. (௨௪)

ஆனைமேற்கொண்டும்வாவு மாடல்வெம்பரியிவர்ந்துங்
கூனல்வேய்தொடுத்துஞான்ற குச்சுடைச்சிவிகையூர்ந்துஞ்
சேனைகாவலரெண்ணிலலார் சிலைமதன்கோலமென்ன
மானவேன்மன்னர்மன்னன் மந்திரிமருங்குசென்றார். (௨௫)

கலங்கிளர்மதன்குடைக்கு நகைமணிக்காம்பிலென்ன
விலங்குறுபசும்பொற்காம்போடெண்ணில்வெண்குடையெழுந்த
புலன்களைவென்றவீரன் போர்கியமறுகிலெங்கும்
விலங்கினையன்றிவந்த விலங்கின்வாலாடிற்றன்றே (௨௬)

மாயைதன்றேல்வியெல்லா மாதர்க்கும்வந்ததின்றே
நாயகன்றன்னைப்பற்றி நாம்வென்றிகொள்வோமென்று
போயுறுதன்மைபோலப் புணர்முலைக்கநுகெடுங்கூட்
டேயுறுண்மருங்குன்மாதர் திரள்பலவெழுந்தவன்றே. (௨௭)

பரிகளின்முழக்குமிக்க பல்லியமுழக்கும்பூட்கைக்
கரிகளின்முழக்கும்வீரக் கழலொடுசெல்லும்வெங்கோ
ளரிகளின்முழக்குமாத ரணிகளின்முழக்குஞ்செங்கைச்
சரிகளின்முழக்கும்விம்மித் தடங்கடலயோன்றவன்றே. (௨௮)

ஆடுவகவரியெங்கு மசைவனசிவிறியெங்கு
மூடுவகுடைகளெங்கு முழங்குவவியங்களெங்கும்
பாடுவவிசைகளெங்கும் பாய்வனகரிகளெங்கு
மோடுவபுரவியெங்கு முயர்வனதுளியெங்கும். (௨௯)

கரிகலமசையாநின்ற கவரிசண்கொகண்மொக்குள்
விரிகுடைமதுகைவீரர் விதிர்க்கும்வாளுகண்மீன்பாயும்
மரிதிரைமுழக்கமார்க்கும் பல்லியமுழக்கமாகப்
பொருகடலெனவெழுந்து போயதுவசவன்சேனை. (௩௰)

வேறு.

இன்னவாறெழுந்திரளொடு நந்தியெம்பெருமான்
றன்னைநேர்குருபரனெதிர் சென்றவன்றாளைச்
சென்னியாலவணங்குவனெனு மோகையாற்சென்றான்
றுன்னும்வானவர்தொகுதியும் வியப்பொடுதுதிப்ப. (௩௧)

அத்திறஞ்செலுஞ்செலவினை யகங்குருட்டமணர்
புத்தர்கண்டிவனென்கொலோ வறிதெதிர்போதல்
பித்தனென்றுதம்மிறைவனைச் சொல்லுமிப்பேய
னெத்திறஞ்செயானெனச்சிவ சரணமாயிகழ்ந்தார். (௩௨)

மன்னன்விச்சலன்ஞாலடைந் தருக்கொம்மன்று
நின்னவர்க்கொருபுதுமையொன் றுற்றதுநீகே
ளன்னிமித்தமொன்றெய்திய தேகொடுகத்தி
தன்னிடத்தொருவன்வரு மென்றெதிர்சாரும். (௩௩)

தண்டநாயகன்றோள்வலர் துடித்ததுதன்னைக்
கொண்டுதான்வருங்குருபர னென்றெதிர்கோடல்
கண்டவோர்களவிற்பெறு மடிசிலைக்கருதி
யுண்டுபோம்விருந்தினர்தமைத் தேடுதலொக்கும். (௩௪)

ஒருவன்வந்திடுமெனவெதிர் கடற்படையொருங்கு
பரவிவந்திடச்செலுமிவன் றன்னைநீயார்த்துப்
பொருவின்மந்திரிக்கிழமைநல் கியவுனைப்போல்வா
ரரவின்வன்றலைப்படிமிசை யிலையெனவறைந்தார். (௩௫)

அருகர்வாசகங்கேட்டது முளம்வியந்தடிகேள்
விரகினன்மிகுதண்டநா யகனுமவ்விளைவு
கருதினன்கொலோவறிகில முடிவுறக்காண்பம்
வருகநீரிருமின்களென் றிருந்தனன்மன்னன். (௩௬)

தண்டநாயகன்றனதுளந் தங்குறத்தானத்
தண்டநாயகனன்மனந் தங்கியதலைவ
றண்டநாயகன்றனையிசழ் சமண்செருக்கழியத்
தண்டநாயகனெதிர்செல நினைந்தனன்றனித்து. (௩௭)

என்னைக்காண்குவனெவ்வகை செல்லினுமென்று
துன்னற்கோவணமொடுகிரி குஞ்சியுந்தோன்ற
தன்னைக்காண்குநர்பித்தனென் றெள்ளவென்றனக்குப்
பொன்னைப்போலுநல்வசவநா யகனெதிர்போனான். (௩௮)

வேறு.

மருவிநின்றவரிவன் மருளனேயென
விளாவிலிங்கக லகலெனவிலக்கினு
ரொருவருங்கண் டிறையுருவுணர்ந்திலு
ருருவுகண்டெள்ளுந ருணரவல்லரோ. (௩௯)

அல்லமனுயிடை யாடலுஞ்சரியே
பல்லெழுவாயுடைப் பாலனொருவன்
கொல்விளவேறெனக் குமரனொருவன்
வில்லெனவுடல்வளை விருத்தனொருவன். (௪௰)

விஞ்சையர்மகிழ்வுற வீணையொன்றுகைக்
கஞ்சமென்மலர்கொடு கானம்பாடுவ

னஞ்சனவிழிமணி யரிச்சிலம்படி
வஞ்சியர்மனமயல் வளரவாடுவன். (சக)

இந்திரனிவனென யானைமேற்கொளா
வந்தொருபுறுடைநரர் மருளத்தோன்றுவன்
[illegible]யெயர்தரு பாணிபோலவே
நந்திமுன்மூட்டங்குளைப் பரிநடத்துவன். (சஉ)

வானிடைக்கண்டனன் மனையிற்கண்டனன்
சேனையுட்கண்டனன் றெருவிற்கண்டனன்
யானெனக்கழகக வெங்குந்தோன்றுவன்
ஞானநற்கண்ணினாற் காணுநமபனே. (சங)

ஆடுநர்தம்முட னாடுநல்லிசை
யாடுநர்தம்முடன் பாடுமென்மலர்
சூடுநர்தம்முடன் சூடும்வாள்விதிர்த்
தோடுநர்தம்முட னோடுமல்லமன். (சச)

பொருவிலாவளநகர்ப் பொருந்துமானிடர்
வரைவிலாவாடலின் வகைசெய்கிற்பவ
ரொருவரோமலர்கொலோ வுணர்கிலோமென
வெருவினாரல்லமன் விநோதநோக்கியே. (சரு)

மண்ணிடைமறையுறு விதியவைப்பினைக்
கண்ணிடுமஞ்சனக் காரன்காண்கைபோ
னெண்ணிடுமுணர்வுடை நந்தியெம்பிரா
னண்ணலையறிந்தன னையமின்றியே. (சகா)

உடம்பெலாமுள்ளமா யுருகிக்கண்கணீ
ரடங்குறுதொழுகமெய் விதிர்ப்பவன்பினாற்
றொடர்ந்தெலாவுயிரையுந் தொண்டுகொண்டரு
ணெடுந்தகாயருளென நிலந்திறைஞ்சினான். (சஎ)

தண்டநாயகனிலந் தண்டிற்றாழ்ந்தெழத்
தொண்டராயவனொடு துன்னினாரெலாங்
கண்ணீர்விழியுகக்க சிந்தவன்பினா
லண்டநாயகன்றிரு வடியிறைஞ்சினார். (சஅ)

நந்திதனன்மையு நந்திபால்வரு
மெந்தைதன்னருளையு மென்சொல்வாமெனச்
சிந்தினர்மலர்மழை தேவர்யாவருந்
துந்துமியதிர்த்தனர்தொண்டரார்ப்பவே. (சகூ)

மயலிலாநல்குரு வசவன்வாழ்தரு
மியலினாலல்லம னெண்ணிவந்தருள்

செபமேறலடியவர் திரள்களித்தலாற்
கயிலையேயவணங் கெழுகலியாணமே. (௫௰)

தெரியலற்றண்டநாயகன்றன்செய்கையும்
மெரியவக்குருபரன் பெருமைதன்னையுங்
கரியமெய்ச்சமணர்தாங் கண்டுமன்பில
ரரியவற்றறிதழுக் காறுவெல்வதே. (௫௧)

தந்திரமுடிவெனுஞ் சைவதேசிகன்
வந்தெதிர்தனதுதாள் வணங்கினோரொடு
செந்திருமகளுலாந் தெருவுட்போகியே
நந்திதன்மந்திர நணுகினனரோ. (௫௨)

தேவருமுனிவருஞ் சூழ்தராகிய
யாவருமிதனிய லின்னதெனறுளத்
தாய்வருநிலையுடை யம்பராதன
மூவருமடிதொழு முதல்வனோக்கினன். (௫௩)

அசைவறுமறிவுரு வாகுமல்லமன்
றிசையுறுமணியணைச் சென்னிமீமிசை
யசையறுவழிநடை வசவதேசிக
னிசையமருலகிடை பேறவேறினன். (௫௪)

கூறருமொளியுடைக் குதிரைத்தேரினன்
வேறொருமணிமய வெற்பிவர்ந்தெனத்
தேறருமணைமிசை தேசிகோத்தம
னேறலுமலர்மழை யிழிந்தவென்பவே. (௫௫)

முரசொடுமெல்லிய முழக்கெழுந்தன
துரிசறுமடியவர் தொகுதிகைகுவித்
தரகரவெனுமொலி யண்டகூடமட்
டொருகணமொடுங்குமுன் றோடிற்றென்பவே. (௫௬)

வேறு.

முதனிலைமுதலா மூவிருநிலைபின் மூலமாமுதலவாதா
ரிதழவிழ்கமலப் பொகுட்டினுணின்ற விலிங்கமோராறெனநின்று
நுதன்மிசைவிலகு நிட்களமபோல நுவன்றவேழாநிலையாகு
மதன்மிசையமல னல்லமதேவ னமர்ந்தனனமாரும்வியப்ப. (௫௭

உடம்பொடுபொறிநாற்கரணமற்றுயிரொன்றுரைத்திடப்படுமுபாதிகளை
க், கடந்துளநிலையிற்சோதியாயிலங்கக்கண்டிடுதுரியனைப்போல[டவ
கெடுக்கவிசமையவமைத்தசெம்மணிப்பொன் னிலைகளோரேழையு
மிடந்தனிவிசும்பென்றல்லமனிருப்பவிருந்தவர்யாவருங்கண்டார்,

ஆடினர்சிலவர்கைகள்கொட்டியல்லமன்பெரியதோர்புகழைப்
பாடினர்சிலவர்விழிபொழிவெள்ளம்பாய்வுறக்குவித்தகைதலைமேற்
சூடினர்சிலவர்நிலமிசைவீழ்ந்துதொழுதனர்சிலவர்மெய்ப்புளக
மூடினர்சிலவர்பரவினர்சிலவர்முக்கணனடியவரன்றே. (௫௯)

இந்தியம்விட்டயங் கரணமெய்யென்னும் யாவையுங்காண்கிலனெங்கு
மந்தரவனையே யிவர்ந்திருந்தருளு மண்ணலைக்கண்டவப்பொழுதே
மூந்தியபரமா னந்தவாரிதியுண் மூழ்கினனமூழ்கினனம்மா
தந்திரமெவற்றுஞ் சிறந்ததுசைவ தந்திரமெனுமருணந்தி. (௬௦)

மண்டலமவத்தை குணமயிமாக மலமிலைவயனைத்தையுங்கடந்துட்
கண்டிடுவண்ணம் புறத்துநீயெம்மைக் காணியவுமைத்தவிச்செய்கை
வேண்டிடைசுருட்டுங் கருங்கடலுலகில் வேறுளர்செய்வதன்றென்று
தொண்டர்கடுதிக்கும் வசவனைத்துதித்தான் சுரரொலாந்துதிக்குமெய்
பெருமான். (௬௧)

உன்னருளுளதேற் கமலன்மாலொருழிலு மொருசிறுதுரும்புசெய்கிற்கு
மென்னகலவசவன் புகன்றுகைகூப்பி யிணைவிழிபுனலுகவுருகித்
தன்னுணர்விலனாய் வசமறநிற்பத் தண்கதிர்ச்செம்மணிகுயின்ற
பொன்னரியணைமேல் விசும்புறவிருந்தான் புலவருமல்லமதேவன். ()

சூனியசிங்காதனத்திலிருந்தகதி - முற்றிற்று.

ஆக-கதி-௨௨-க்கு-திருவிருத்தம்-௬௪௬.

இருபத்துமூன்றாவது

## ஆரோகணகதி.

ஒருவருண்ணு மொருவர்பசிகெடார்
தரையிலென்னுந் தருமொழிபொய்த்திட
வருளினல்லம னரும்பசிகெட
விரவியுண்ட மிகுதிவிளம்புவாம். (௧)

தன்னைத்திங்களிற் றண்ணெனத்தண்கதிர்
வன்னங்குன்றுற ஞாயிறுவார்சிலைப்
பண்ணைக்குன்றுற பாங்மையினுதனைத்
தென்னைத்தேவ னிருந்தருள்காலையின். (௨)

வசவனுள்ளம் வயல்புகுநீரென
விசயனல்லமன் மேனிவடிவமா
முசைவிலன்பிறி தொன்றுமறிந்தில
னிசையுமேவிய மென்னவிருந்தனன். (௩)

கழுமணித்தவி சென்றுங்கலத்திடை
யழிவறத்திக ழல்லமனுகிய

செழியனற்சதை சென்னவசவனும்
விழியினுக்கு விருந்திட்டனனரோ. (௪)

ஞானவினைக்கொளு மோளிகைமாறனும்
வினையினைத்தெறு மெய்ம்மடிவாலனுந்
தனைநிகர்க்குந் தவிசமர்பூவினை
மனமெனப்படும் வண்டுறவிட்டனர். (௫)

முன்னிருந்த முதுக்குறைவாளரும்
பின்னடைந்த பெரியருமாகியே
மன்னிருந்த மணித்தவிசின்புடைத்
துன்னியெங்கணுஞ் சூழ்ந்தனர்தொண்டரே. (௬)

புண்டரந்திரு நெற்றியிற்பூசிமெய்க்
கண்டியென்னுங் கலனணிவார்சிலர்
பண்டைநான்மறை யின்பயனாகவே
கொண்டவஞ்செழுத் துங்குறிப்பார்சிலர். (௭)

நக்கனந்தரு நாண்மலர்மஞ்சனஞ்
சந்தனஞ்சுடர் தண்புகையாதிகொண்
டிந்தியங்க ளெலாமடக்குளமோ
டந்திவண்ணனை யர்ச்சிப்பரோர்சிலர். (௮)

தாவில்பூசனை தாம்புரிதற்பதிற்
மாவெலாஞ்செலப் பட்டிடுமைம்புலக்
காவல்செய்யுங் கருத்துடையார்தமக்
கேவல்செய்தனன் றென்றுசெய்வார்சிலர். (௯)

பூசனைத்தொழில் பூண்பதினென்மடங்
கீசனைத்துதித் தேதுதனன்றென
வூசலொத்த வுளமிலராய்ப்புலந்
தூசிநிற்பத் துதிப்பவரோர்சிலர். (௰)

அங்கலிங்க மயிக்கமிதுவென
மங்கலந்தரு மாமறையின்முடித்
தங்குறுந்தத் துவமசிதன்பொருள்
பங்கமின்றிப் பகர்பவரோர்சிலர். (௰௧)

பாசமேது பசுவெனப்பட்டதே
தீசன்யார்பதி யெவ்வகையொருயிர்க்
காசுதீர வருளுமருளுடைத்
தேசிகாவெனத் தேர்பவரோர்சிலர். (௰௨)

புறந்தினஞ்செயும் பூசையினன்றென
திறந்தகஞ்செய்தி யானமருவிமெய்ம்

மறந்திருக்க மனஞ்சிவலிங்கமுற்
றிறந்திருந்திற மெய்தினரோசிலர். (௯௩)

றுடிமீளு முயிர்வினையிடாதெனி
னிடுமோமன நிற்பதன்றுதலால
வீடுமேவரி தென்றுவிதிமுறை
நாடிவாயு நலிசெய்வரோசிலர். (௯௪)

இனையராகி யிருந்தவக்காலையி
லனையனாகிய வல்லமன்றன்னிடை
நினைவெலாமுற நின்றுதமதிடை
மனமிலாத வசலனைக்கண்டனர். (௯௫)

வேறு.

பெரியவர்சிறியவ ரொன்றும்பெற்றிமை
யரவணிகடவு ளடியார்தம்முளே
தெரியவனெவனவன் சிறியனேயென
விரிவுறுமறையெலாம் விளம்புமென்பவே. (௯௬)

ஆவுரித்திடினுமீ றணியுமன்பனம்
மாவுரித்தவனென வணங்கத்தக்கவன்
பூவுரித்தவன்பதம் புனையப்போற்றுற
நாவுரித்தெனமறை நான்குமோதுமால். (௯௭)

வந்தவர்வருபவர் வருகின்றார்களா
மந்தமிலடியர்மாட் டாற்றுஞ்செய்கையைச்
சிந்தனைசெய்கிலன் றேசிகன்செயு
மிந்திரசாலமுற் றிருந்துநந்தியே. (௯௮)

பத்தியிற்றவறினான் யாவிருந்துகாந்
துய்த்துடக்குமப்பதிற் றுறத்தன்னனென
மெய்த்தவக்குழாமெலாம் வெருண்டுபோயின
வத்தனைறுறண்டநா யகனைவிட்டரோ. (௯௯)

துன்றியசெய்த்தவர் துறந்துபோயபின்
முன்றல்செய்மற்றைநாண் மனையையொத்தொரு
தன்றனிநூபுரந் தனிப்பக்கண்டன
னன்றிற்செய்கைய நந்திதேவனே. (௱)

வழுவினனன்புசெய் வழியையின்றுநான்
குழுவுறுமடியவர்க் குவித்துச்செய்தவில்
வொழிவறமடிசிலுண் டொழிந்திடாதுநீர்ந்
தழிவுறுமேயென வகந்தளர்ந்தனன். (௱௧)

சங்கமபத்திசெய் தண்டநாதனை
சங்கமபத்திசெய் தகைமைபூண்டோன்
சங்கமபத்தியிற் றவறினேனென்றாற்
சங்கமபத்திசெய் தன்மையென்னையே. (௨௨)

இழிப்பினும்வெறுப்பினு மில்லினுள்ளன
வழிபறினுமுடம்பினை யரிந்துகொல்லினும்
பழிப்பறுசங்கம பத்திசெய்பவ
னொழிபபதுபிறவியென் றுலகமோதுமே. (௨௩)

இமமுறைசங்கம பத்திமெய்திய
வெமமுடைநந்தித னெண்ணமுற்றுற
வமையடியிறுத் தலமன்மாதவர்
தமமுறுப்பசியெலாந் தணிப்பவுன்னினன். (௨௪)

ஒருவன்யான்சிறுபசி யுடையன்சிறந்தரு
விழைவுறவிடுதிநீ வேண்டியாதுமென
பரிவுளவடியவர் பாற்செயென்றனன்
பொருவறுவசவனை நோக்கிபோதகன். (௨௫)

ஐயனுமுனிவுறு தருளும்வண்ணமியான்
செய்யும்நலவினையென மகிழ்ந்துதேவனைப்
பையவுண்மனையிடைப் பணிந்துகொண்டுபோய்ப்
பெய்யுமெனமலர்மணி பீடதேற்றினான். (௨௬)

ஏற்றியவருள்வசவேசனெம்பிரான்
காறதுணைமலர்களைக கந்தமஞ்சன
நாற்றமென்மலர்நறும் புகைவிளக்கெனப்
போற்றியவிவைகொடு பூசைசெய்தனன். (௨௭)

பூசனைசெய்தபின் போற்றிநின்றுபொற்
பாசனமமைத்துமென் பதமபடைத்துமேல்
போசனைகைகயழ் கறியுமொள்ளிய
போசனமுறையிடப் புரிந்துநந்தியே, (௨௮)

அருந்துகவெனவடி தொழலுமக்கலந்
திருந்தியவமுதுளோ ரவிழுந்தசேடியார்
கருந்தினனொரிமைப் போதினல்லமண்
பொருந்தியவவரிறும் பூதராகவே, (௨௯)

பின்னருமம்முறை மெய்யவையனவ்
வன்னமுமம்முறை யருந்திப்பின்னரும்
பின்னருமம்முறை பெய்யவுண்டனன்
மன்னுளம்வியந்தனன் றண்டநாயகன். (௩௰)

சிறச்சிறிதனையிடுஞ் செய்கையாலரு
விறைக்கெழிலுதர்வெவ் நெருப்பெழுந்ததால்
பிறற்தனலம்முறை விறகிடக்கனன்
றுழப்பெரிதெனவெழுந் தோங்கலபோலவே, (௯௧)

எண்ணியவெண்ணியாங் கியற்றமேவல
ரெண்ணலும்வருகென வழைத்தருகம்மனைப்
பண்ணியபதமெலாம் படையினென்றலுந்
துண்ணெனவனையிடந் தொழிற்றொடங்கினர். (௯௨)

வேறு.

அளவறுமடியர்க்கெல்லா மாக்கியவடிசிற்குன்றங்
கொளவுறுகூடையோடு கூடைகடாக்கக்கொண்டு
வளமுறுகயிலைக்குன்றம் பெயர்த்திவண்வைத்ததென்னத்
தளவுறமுடிசிலெங்க டம்பிரானெதிர்குவித்தார், (௯௩)

பருப்பொருபொருப்பெனத்தாம் படைத்தனர்சிலரெடுத்து
விரைப்புதுநெய்கவிழ்த்து விடுத்தனர்சிலர்மணக்கும்
பொரிக்கறிபலிதம்யாகு புளிக்கறிபலவுமெல்லா
நிரைத்தொருசிலர்சொரிந்து நின்றனர்முகில்கள்போல, (௯௪)

வடைமுடிகிரியாக மாங்கனிகலங்கலாக
வுடையடுகழைக்கரும்புங் கொண்கதையாகக்கொண்டு
கடைபடுமுலகிற்கெல்லாங் காரியகருத்தன்முன்னர்ப்
படைபடையெனச்சொரிந்தார் படைமுகத்திளைஞர்போல. ()

குளங்கரையாகவத்தக் குளத்தினுட்பசுவின்றீம்பால்
விளங்குறுமமுதவேலை விடுத்தெனவிட்டாசிலரோ
ருளங்கனிமூவாசெய்யு ளொத்தமுக்கனியுமேனோர்
வளங்கெழுதொடர்புபோலு மற்றையபழமுந்தூர்த்தார். ()

எண்ணிலரிடுவவெல்லா மினியனவின்றுவென்றான்
கண்ணிமையொடுங்குழனைங் கடிதாயின்றுதவுறமல்
வண்ணமென்மலர்க்கைவாங்கி வறிதிருந்தனனெங்கோன்றேர்ப்
பண்ணவன்பரிக்குமேடு மள்ளமென்பனவங்குண்டோ. (௯௭)

சற்றினுமுண்கவென்று தமருபசரியாவண்ணஞ்
சற்றினுமிடுகவென்று தம்பிரானுண்ணாநின்றான்
மற்றிதுகண்டுநின்றோர் மட்கலமொழியவேறு
பற்றிலையென்றுநக்கி திருமுகம்பார்த்துச்சொன்னார். (௯௮)

உண்விளையாடல்செய்யு மொருவனைக்கண்டுவேண்மேற்
கண்விளையாடுநெற்றிக் கடவுண்மெய்யடியாரெல்லாம்

விண்விளையாடுஞ்சோலை வியனகரிடத்திற்செல்வப்
பெண்விளையாடுந்தம்மிற் பேரனைக்கிடுதற்கெண்ணி. (௩௯)

மாண்டிடின்மேலேற்றிவந்தும் பானையிற்சுமந்துவந்தும்
வேண்டியபாகமுற்று வேறுவேறுயவன்ன
மாண்டகைக்குரவனுண்ண வளவிலாசொரிந்துயர்ந்தா
ருண்டமூல்வெறுக்கும்வண்ண மூட்டுவென்மார்போல. (௪௰)

மலையெனவமனுஞான வாரிமுன்சொரிந்துயர்ப்பா
ரிலைமலர்பசுங்காய்கந்த மிளஞ்செழுந்தண்டாற்செய்த
வுலையமைபல்காயம்பெ யொண்கறியமுதுவேறு
வ பலமுறைமயங்கப் படைப்பர்வல்விரைந்துவந்து. (௪௧)

குய்தமழ்கறிகளிட்டுக்குவிப்பவர்சிலரொடுத்து
நெய்கவிழ்கையராகி நிற்பவர்சிலர்நிரம்ப
பெய்கவிழ்சொரியென்றுன்யால் பெய்பவர்சிலரளைந்த
கைகமழ்தயிர்க்குடத்தாற் கவிழ்ப்பவர்சிலரங்கம்மா. (௪௨)

இடடவர்மறியவன்ன மிடுதற்குவிரைந்துசெல்வார்
மூட்டுவெதிர்நடந்து மூரல்நைவாங்கிவாங்கிக்,
கொட்டுவரடிசிறந்த கூடைகள்கவிழ்த்தெறிந்து
தட்டுவரனம்படைக்குந் தம்பிரானடியாரன்றே. (௪௩)

இன்னணம்படைத்தவெலலா மிமைப்பினிலயின்றுசைவ
மன்னவன்வயிற்றின்வெந்தீ வளர்த்தினீர்நீயெல்லா
மென்னநல்வசவதேவ னிருந்தபல்பண்டங்கொண்டு
முன்னவன்பசியையாற்ற முன்னிமற்றிதனைச்செய்தான். (௪௪)

அவரையும்பயறுமெள்ளு மரிசியுமுவலுங்கொள்ளுந்
துவரையுங்கடலையுஞ்செஞ் சோளமூமெலலும்புலலுங்
குவரையுங்கயிலையும்பொற் குன்றமும்போலஞாலத்
தெவரையுங்களிப்புச்செய்ய வெங்கணுங்குவிப்பித்தானல்.

குன்றெனக்குவித்தவெல்லாங் கொள்ளெனக்கொண்டுநம்ப
மென்றனைக்கணத்துளின்னு மேலவனகொணர்தியென்ன
வன்றிறற்றண்டநாதன் மனத்திறலையையபற்றி
நின்றிடத்தம்பிரானு நினைவினலைவையயின்றுன். (௪௬

நோக்கினலளித்தவெல்லா நோக்கினற்றுலைத்தானந்தி
வாக்கினலளித்தவெல்லாம் வாக்கினல்வள்ளலுண்டு
போக்கினனிடுதலுண்ணை லென்னுமிப்போரின்கண்ணே
தாக்கினரிருவர்தாமுந் தோல்வியுற்றுடைந்தாரிலலை. (௪௭

படைத்திடுந்தொழின்முயன்ற பத்தனதியல்புமன்ன
துடைத்திடுந்தொழிலினின்ற தூயவனியலுநோக்கி

யடுத்தகற்பத்திலெல்லா மிவையவரிருவர்சீரு
மெடுத்துரைத்துள்ம்வியப்புற் றிறைஞ்சினரொருங்குமாதோ()

இடுதற்குவல்லோனந்தி யிடும்பொருளவற்றையங்கை
தொடுதற்குவல்லானிந்தத் தூயவனென்பரிவ்வா
றிடுதற்குவல்லாரில்லை யென்பரிவ்வாறுநாங்கை
தொடுதற்குவல்லார்தம்மைச் சொலலவுங்கேளோமென்பார்.()

கண்ணப்பனன்பினுனே கறியெனவமைத்தவூனை
யுண்ணப்புனூனின்வேறு றுயிருணின்றமைவனென்று
வண்ணப்பொன்னனையசென்ன வசவதேசிகன்வணங்கி,
விண்ணப்பஞ்செய்தான்றுங்க விடைமுகங்கரந்தானோடு. (௫௰)

வேறு.

சென்னவசவன்சொல்லியவச் செயலேசெய்யுஞ்செயலென்று
மன்னுமருளின்மடிவால மாச்சிதேவன்வந்துரைப்ப
வென்னையுடையானும்மொழியே யெனதுமனத்தைத்தேற்றுவது
பின்னையுளதோஞ்சகமலாற் பெருநீர்தெளித்தற்கென்றுரைத்து. (௫௧)

பொறிகள்கரணம்பூதங்கள் புலன்கண்மற்றும்பலவகைய
கறிகளாகவாருயிரோ கலந்துண்மதமாநீயுண்ணப்
பெறுவதிலையாவனென்றுநின்று பிறவிப்பிணிதீர்மருந்துவன்ற
னறியமலர்மெல்லடியணிந்தா னமையாளுடையவருணந்தி. (௫௨)

வசவனிலைகண்டருண்ஞான வள்ளலல்லமப்பெயரான்
பசியின்வந்தேனலன்பொருட்குப் படர்காமக்குவந்திலன்யான்
கசியுமினதுமனத்தன்பு காணவந்தேனென்றேத்தி
யிசையின்மலியுமரனடியார் யாருமகிழவெடுத்தணைத்தான். (௫௩)

கண்போலுயிர்கள்கண்டறியக் கதிர்போற்காட்டும்பெருமானே
யுண்போனயானுளூட்டுமுனக் கூட்டுவேனென்றெழுந்தமையா
லெண்போதெண்போற்பேதைமையா ரிலையில்லையென்றனன்பின்
பண்போடமலனெதிர்நின்றான் பத்திவடிவமாயினான். (௫௪)

செம்மைநெறியானருணந்தி தேவன்றன்னைப்புகழ்வமோ
பொய்ம்மைதீருமல்லமனைப் புகழ்வமோவிங்கன்றியிவர்
தம்மைவிழியாற்காண்பதற்குத் தவஞ்செய்துடலமிதுபெற்ற
வெம்மையாமேபுகழ்வமோ வெனநின்றனர்தம்பிரானடியார். (௫௫)

பரிந்துநந்திமுகநோக்கிப் பசித்தாரொன்றுநீதளரப்
பிரிந்தவர்தவடியார்தமைப் பிறங்கலனையநின்மாடத்
தருந்தவணங்கிக்கொணர்தியென வறிவானந்தமயன்கூற
விரைந்துவிடைகொண்டெழுந்தன்பு வெள்ளஞ்சென்றதவரிடத்தில்.()

சென்றவசவனருட்குரவன் றிருமேனியிற்றுனகணாத
மன்றன்மலருஞ்சந்தனமும் வடிவிற்றிகழமடியிலூர்ந்து
நின்றன்மூதலகறிமணக்கத் தேக்குவிடுத்து மகமலர்ந்து
கொன்றைகமழ்வேணியனடியார் குழாங்களிருப்பக்கண்டனனால். (௫௭)

கண்டநந்தியடிபணிந்து கடையேன்செய்தபிழையெல்லா
மூண்டுபொறுமின்வருகவென வுள்ளங்களிப்புற்றுங்கிருந்த
தொண்டர்வசவனின்பெருமை சொல்லவெளிதோவயிராப்
பண்டுபோலவாய்க்கதொழிற் படாமலயின்றேமின்றென்று. (௫௮)

தேவருண்ணவியுணவு செந்தீமுகத்திலிடுதல்போ
லோவில்யாங்களெல்லேமு முண்ணவடிசிலல்லமன்ற
னாவின்மருவவிடுமினையோர் நாவோபுகழுங்காத்ததென
வாவியனையநந்திசி ரமலனடியார்புகன்றேத்தி. (௫௯)

உலகிலொருவன்சிவயோகி யுண்டதம்மாசராசரமா
மலகிலுயிர்களெலாமுண்ட தாகுமென்னமறைகூறு
மிலகுமுண்மையைக்காட்சியா னின்றிங்குணரவுணர்த்தினான்
கலகவினைகடீர்க்குமருட் கண்ணன்றிகழல்லமதேவன். ௬௰

ஆகலாலவ்வல்லமனை யருத்தலெம்மையெலாமருத்தல்
யாதமவனைப்பணிதலெம்மைப் பணிதலாகுமெஞ்ஞான்றும்
பேதமில்லைநல்வசவப் பெயரோய்செல்கவென்னமலை
மாதுதழுவக்குழைந்ததோள் வள்ளலடியார்தமைவணங்கி. (௬௧)

மீண்டுநந்தியல்லமனார் மென்பூங்கழலவடியிறைஞ்சி
யாண்டபெருமானடியார்க ளென்னையுண்டவுணவுகரு
வீண்டுமகவுமுண்ணல்யோ லெந்தையுண்டவெலாமுண்டு
பூண்டமகிழ்வோடிருந்தனர்நீ புனைந்தமலரும்புனைந்தென்றான். (௬௨

மாறனடித்தவடிபட்ட மன்னுமுயிரின்றிறமெல்லா
மீறில்புகழ்க்கங்கணவசவ னிட்டவடிசிலுண்டுபசி
யாறியிருந்தவாதலினு லல்லம்ன்பூரணனென்னக
கூறுமொழிமெய்மெய்யென்று கூறியுலகங்களித்ததால். (௬௩)

இவ்வாறருந்தியமைதிபெறு மெங்கள்பரமயோகிதான்
றெவ்வாகியவைம்புலன்வென்ற திறல்கூர்வசவன்றனைமகிழ்ந்து
சைவாகமமுநான்மறையுஞ் சாற்றும்பொருளையுணர்த்துதற்குச்
செவ்வாய்மலரத்திருவுள்ளஞ் செய்துதனிவீற்றிருந்தனனால். (௬௪)

ஆரோகணகதி- முற்றிற்று.

ஆக-கதி-௨௩-க்கு-திருவிருத்தம்-௲௰

———ஃ———

௨

## இருபத்துநான்காவது

# மனோலயகதி.

மயங்குதலின்றி மனோலயமெய்திற்
சயந்தருமுத்தி தலைப்படுமென்று
நயந்தருமல்லம நாதன்விளங்க
வியம்பியவண்ண மியம்புதுமன்றே. (௧)

மத்தர்கடங்கள் பசிக்குணுமையன்
றத்துவநல்கு கருத்தொடுதங்க
வத்தலையன்பொ டகங்குழைகின்ற
வித்தகனந்தி விளம்புவனன்றே. (௨)

விருப்புவெறுப்புரு வாம்விடயத்தோ
டிருக்குமயற்சக மென்பதிலாமற்
பரப்பிரமத்தியல் பார்ப்பதெனக்குத்
தெரித்தருளென்றுனை செய்துதுதித்தான். (௩)

அண்ணலுமார்வ மடைந்தருணந்தி
மண்ணுலகோர்தளை மாறபுஞானக்
கண்ணுறுமாறு கடாவினனென்று
புண்ணியனோடு புகன்றிடுகின்றான். (௪)

யானெனதென்ப திருந்திடுகாறு
ஞானமுறானது நண்ணிலனாகிற்
றானிலையாதச லத்திகழ்கிற்குந்
தீனமிலாத சிவத்திசமாதே. (௫)

கறங்கெனுமாறுழல் கின்றகருத்துப்
பிறந்திறவாத பெரும்பிரமத்தி
லிறந்திடில்யானென தென்னுமகந்தை
மறைந்திடுமன்றி மறைந்திடுமோதான். (௬)

யானிதுசெய்வ லெனக்கிதுசெய்வ
ரேனையரென்ன விருந்தகருத்தான்
மேனிகழ்முத்தி விரும்பலிருட்டாற்
பானுவைமேவுற மற்றைநிகர்க்கும். (௭)

இருவினைதாம்வரும் யானெனலாலவ்
விருவினையாலவரு மின்பொடுதுன்ப
மிருவினையானென வின்றெனிலில்லை
யிருவினையில்லெனி லிலைபிறப்பே. (௮)

மனத்தையடக்க மனந்துணையாகும்
பினைத்துணையின்றது பெற்றனனாயிற்
றனிச்சிவமேயொரு தானெனவாழ்வு
னினைத்துமறந்து நிலத்துழலானே. (௯)

வாரணமாகு மனத்தையடக்கிற்
காரணமாயை களைந்தொழியாத
பூரணமாகிய போதமடைந்திட்
டாரணமோது மரும்பொருளாவன். (௰)

வேறு.

விரிந்தநெஞ்சங்கருவியாம்விடயமுணரவிரிபரம
மொருங்குநெஞ்சங்கருவியாந்தன்னையுணரவொருங்காமல்
விரிந்தநெஞ்சமுடையவனைவிடாதுபிறவியென்றுணாக
வொருங்குநெஞ்சமுடையானையுறாதுபிறப்பென்றுணாகவே. (௰௧)

அந்தக்கரணசுத்தியேயறிவையறிதற்சாதனமவ்
வந்தக்கரணசுத்திதனக்கறையுங்கருமமாரணங்க
ளந்தக்கரணசுத்திதானாவதவாவற்றிடுதலே
யந்தக்கரணசுத்தியினாலடைவன்பிண்டப்பயான்றே. (௰௨)

ஆசையறுதல்வீட்டின்பநேரேயடைதற்காரணமா
மாசையறுதலல்லதில்லைப் பலநூலனைத்துமாய்ந்திடினு
மாசையறுவோனசிவஞானியென்னெனநான்றையுநிறுந்து
மாசையுறுதலென்கொண்டோவந்தோமனிதரறியோமே. (௰௩)

ஆசுதீர்ந்தமனத்தினிடை யன்றியுணர்வுதோன்றாது
மாசுதீர்ந்தவாடியிடை யன்றிவதனந்தோன்றுமோ
பாசநீங்குபரஞ்சுடரா நினைக்குநினைவாற்பற்றுமனங்
காசநீங்குகண்போலத் தன்னைக்காணவிளங்குமால. (௰௪)

வானமல்லேன்வளியல்லே, னழனீரல்லேன்மண்ணல்லேன்
ஞானமல்லேன்வினையல்லே ஞானேசிவமென்றெண்ணினோ
னூனமில்லாவொருசிவமே யாவனிவ்வாறன்றனாதா
னீனமெல்லாமுடையவுடம் பெடுத்துசுழலுமெஞ்ஞான்றும், (௰௫)

தன்னைச்சிவமென்றறிந்தவனே யறிந்தான்றனையுண்மையாத்
தன்னைச்சிவமென்றறியாதா னறியானென்றுந்தன்னுண்மை
தன்னைச்சிவமென்றறிந்தவன்றே தாழ்வாம்பாசந்தனைநீப்பன்
றன்னைச்சிவமெனறியாதான் றனக்குப்பிறப்பேதுணையாகும். (௰௬)

தன்னைப்பேதமாய்க்காண்கை சகத்திற்காணப்பட்டதாந்
தன்னைப்பேதமறச்சிவமென் றறிவோனஞானிநானொருவ,

னென்னக்கருதிமறையதுநீ யானுமென்னவத்துவிதந்
தன்னைப்புகலுவகணைடதனைச் சாற்றன்மறையின்கருத்தன்றே. (யஎ)

தூய்தாகியநெஞ்சுடையார்க்குத் தாமேசிவமாத்தோன்றுமாற்
றீதாகியநெஞ்சுடையார்க்குத் தெளியவபேதமிகவினறி
வேதாகமங்கள்விளம்பிடினும் விளங்காதென்றும்வேறென்னும்
வாதாலழிவரவர்மாயை மயக்கமயங்குமதியினர் (யஅ)

நெஞ்சஞ்சோகம்பாவனையி னிற்கநிறுத்திவிடயங்க
ளஞ்சுந்துறவுதுறந்த யோகியொருவனடியிணையிற்
றுஞ்சுந்திருமான்முதலமரருள்ளமவனைத்துதித்திறைஞ்சா
தெஞ்சுந்தவமாமுனிவரிலை யெனநான்மறையுமியம்புமால். (யக)

என்றகருணைமொழிவிழியெங் கோமானுண்மையினிதியம்பி
நின்றவசவராயனுள மழல்சேர்மெழுகினெக்குருகிச்
சென்றுகுரவனடிபணிந்தான் சென்னபசவன்முதலாகத்
துன்றுசரணருய்ந்தனம்யா மென்றுதுதித்துத்தொழுதனரால். (உ0)

இவ்வாறருளாற்றனையுணர்த்தி யிருந்தஞானவியல்வீர
சைவாசிரியனலல்மனித தனாயிறபருவகதலைசிறப்ப
வுய்வானினைந்துதனைநோக்கி யுற்றவடியார்க்குபதேசஞ்
செய்வானியன்றவடிவொடுசென றருள்செய்செயல்செய்துலாவினன்

மநோலயகதி-முற்றிற்று.

ஆக-கதி-உச-க்கு-திருவிருத்தம்-கூாஅக.



இருபத்தைந்தாவது

## மான்மியகதி.

வியனிலமேவிய விழுமியோர்க்கெலாஞ்
செயிரறுமலலமன் செய்தகன்றியைக்
கயிலையினுதலவிழிக கடவுடனபுடை
மயிலியலொடுசொலு மாறகூறுவாம். (க)

ஆயிடையருணந்தி யாதிமாதவங்
கேயமோடமர்வுற நிறுவியல்லமன்
மாயிருஞாலமேன் மானிடர்க்கெலாம்
போயருள்செயுந்தொழில் பூண்டுளானரோ. (உ)

இன்னணமல்லம னிருநிலத்துறத்
தன்னிகர்கயிலையிற் சிங்கத்தாங்கிய
பொன்னணைமிசையமர் புராரிதன்னொடு
மின்னனுளிழலையுமை விள்ம்பன்மேயினள். (௩)

அல்லமனருள்பெற்ற் கண்டக்தகந்தியூர்
டெல்லையினின்கண மெனாதாகற்கலே
மெலவியனிலமிசை மேவிச்செய்லுதென்
சொல்லுதியெனவுமை யிறைவன்சொல்லுவான். (௭)

ந்திலவசவனு நாமங்கொண்டமர்ந்
தந்தமிலெம்மடி யவனையாமெனப்
புந்திசெய்தவர்விழை பொருளளித்தமண்
சிந்தியவிலமிசை சிறப்புற்றனனோ. (௮)

அறஞ்செயுமின்கலே யாருமங்கைபோய்ச்
சிறகுளவுலகின்மா தேவிப்பேர்பெறீஇ
மறஞ்செயுமதனவலி மாளமாய்த்தெலாந்
துறந்தனள்குரவனைத் தருவிப்போயினள். (௯)

கன்னியங்கண நாதர்தாமுமக்
கன்னகன்ஞாலமுற் றமைக்காணிய
வன்னகல்வினைகள்பல் வகைபுரிந்தவ
ரொன்னியபலகக ...த்துவைகினர். (௧௦)

அளக்கரும்விரதரா யவரிருந்திடத்
துளககமினிலையுடைத் தூயனல்லமன்
கொளகருறையாதபே ரின்பங்கூட்டின
விளக்கினனுலகினில் வீரசைவமே. (௧௧)

வேறு.

எவ்வகைச்சமையத்திற்கு மிறைவனேயெனினு மேயஞ்
சைவநற்சமையத்தற்றன சைவத்தும்வீரசைவத்
தவ்வவர்பிறவிக்கு மல்லமன்விருப்புள்ளான்
மைவரிக்கயனெடுங்கண் மடவராலென்றான்வள்ளல். (௧௨)

சமையமெவ்வகையினுந்தான் சைவமேலாயதென்கொ
லமையுநலவீரசைவ மதனினுஞ்சிறந்ததென்கொ
லிமையவாபரவுமுக்க ணெம்பிரானருள்செயென்ன
வுமையவள்வினவவேழ் முரித்தவன்விளம்புமன்றே. (௧௩).

உரைக்குமெச்சமையத்திற்கு மூத்தரபாகஞ்சைவந்
தரிக்குமச்சைவத்திற்குத் தரமெனவீரசைவந்
தெரிக்குநற்காமிகாதி சிரத்தினிற்றிகழுங்கண்டா
யரிக்குரற்சிலம்பரற்று மடிமலர்த்தடங்கணல்லாய். (௧௪)

புறந்தருசமயம்புக்குப் புறமலாச்சமயத்தெய்தி
யிறந்துசூழ்சைவமுற்றுஞ் சரிற்சரிதாதியாற்றிச்
சிறந்தவீரசைவஞ் சேர்ந்தபின்வீடுகண்ணு
நிறந்தளிரகவற்றுமேனி நன்மலாவலவியன்றாய். (௰௨)

அருமறைமுடியுஞ்சீர்சா லாகமமுடியுமொத்துப்
பொருமற்றிலாமனமுற்றும பொருளினைவிளங்கக்காட்டித்
தருமுறையதனாலவீர சைவமேதலைமைத்தாமில்
விருமறுவிறன்னாலு மிதிற்பிராமாணமாகும். (௰௩)

ஒன்றொருவிடயந்தன்னையிருச்சுவைநிறைவென்றுக்கி
யொன்றுமெம்முகத்தளிதகிட டெம்பிரசாதங்கொண்டு
துன்றுறுகருமமுன்னாத் தூய்மையிவ்வீரசைவத்
தன்றியேவெருமார்க்கத்தி னடுக்குமோவடுக்கண்மாதே. ()

ஆதலால்வீரசைவத் தறிவினையறியச்செய்தான்
மாதர்மாதேவியாமுன் வண்கலைமாதினுக்கும்
மேதையாம்வசவனாதி மெய்யடியவர்க்குஞான
போதகாசிரியனெனனும் மொருவிலுலமனவேற்கண்ணாய்.

பருவபேதத்தாற்பேதப் படும்பொருள்பருவங்கண்டு
திருவின்மாமுனிவர்யோகர் சித்தர்கணமுதலானோர்கும்
பொருவிலாவலமப்பேர் புண்ணியன்புகன்றட்கொண்டான்
குரவவார்குழன்மடந்தா யெனறனகுன்றவிலவி. (௰௬)

அம்மையுண்மகிழ்வுபொங்க வல்லமன்பெருமைகேளா
மம்மர்செய்துளங்கலக்கு மாயையைக்கடந்தானென்றன்
மெய்ம்மையினைபவளவாயால் விளம்பானறிந்தேனென்று
மும்மதில்வலிதொலைத்த முக்கணாயகனைத்தாழ்ந்தாள். (௰௭)

அங்குமைமாதினோடு மல்லமன்பெருமைகூறித்
திங்கள்வெண்முகிழ்புனைந்த செஞ்சடைப்பரமன்மேவ
லிங்கருண்மேகமென்னு மிணையிலெங்குருகுகேசன்
மங்கலமுத்தியின்பம் வழங்குமத்தொழிலினின்றான். (௰௮)

மூத்தவரினோர்நோயர் முகிழ்முலைமாதாகல்ல
தீத்தொழிலாளர்யொல்லாத் தீத்தொழிலாளரொன்றும்
பார்த்திலன்யாவர்மாட்டும் பரிந்தருண்மாரிபெய்து
காத்தனனமலஞான காரணன்குருகுகேசன். (௰௯)

இன்னவாறருளினானேயிவருறவிவர்வேறென்னா
தன்னைபோலுயிர்கட்கெல்லா மாருளொருங்குசெய்தே

குன்றமாமதிற் கோயிலி னண்ணினான். - (உகூ)

(இ-ள்.) என்றுகூறக்குரவன் - என்றுகுருவானவர்சொல்ல — இறைமகன் - மமகாரராஜன் — மன்றல்வாழ்க்கை - மங்கலம்பொருந்திய இல்வாழ்க்கைக்குரிய — மனையொடு - மனைவியர்கியமோகினியோடு — துன்பு - வியசனத்தை — ஒரீஇ - ஒழித்து — சென்று - திரும்பிப்போய் — மாடத்திருநகரில் - மாளிகைகள்நிறைந்துசெல்வமிகுந்ததனதுநகரத்தில் — புகா - புகுந்து — குன்றமாமதில் — மலையைப்போல (அளவிடப்படாமையுந்திண்மைமுதலியவுமுடைய) பெருமைபொருந்திய மதிலாற்சூழப்பட்ட — கோயிலினண்ணினான் - அரண்மனையிலடைந்தனன். எ-று. (உகூ)

(வேறு.)

கயிலையில் விமலை யோடுங் கவிரிதழ் மாயை சென்று *
வியனில மதனிற் றன்னை விடுத்த ஞான்றென்ன வானோர் *
பயிலவை தன்னிற் புக்குப் பரனையு மிமய மீன்ற *
மயிலைய னையும் வாழ்த்தி வணங்கியங் கருகுநின்றாள். (உஎ)

(இ-ள்) கவிரிதழ்மாயை - முருக்கம்பூவையொத்தஅதரத்தையுடையமாயையானவள் — விமலையோடும் — கயிலையில் — சென்று - போய் — வியல் - விசாலமாகிய — நிலமதனில் - பூமியினிடத்தில் — தன்னைவிடுத்தஞான்றென்ன - தன்னைஅனுப்பியநாளிலிருந்ததுபோல — வானோர்பயிலவைதன்னில் - தேவர்கள்நிறைந்திருக்கின்றசபையில் — புக்கு - புகுந்து — பரனையும் - பரமசிவனையும் — இமயமீன்றமயிலையனையும் - மலையரசன்பெற்றமயிலைப்போலுஞ்சாயலையுடையவுமையையும் — வாழ்த்திவணங்கி - துதித்துப்பணிந்து — அங்கருகுநின்றாள் - அங்கு (உமையவள்) சமீபத்தில்நின்றனள். எ-று. (உஎ)

பொலிவழி வதனங்கண்ட போதேயம் மாயை நெஞ்சின் *
மெலிவினை யறிந்துமன்னை வினவலுஞ் சூள்கொண்டேகி *
மலர்தலை யுலகிற் றன்முன் மடங்கிய வாறனைத்து *
நலியுநா ணடைவருந்தி நவின்றனள் குறிப்பிற் றேல்ற. (உஅ)

(இ-ள்.) அன்னை - தாயாகியஉமாதேவி — அம்மாயை - அந்தமாயையினது — பொலிவழிவதனம் - மலர்ச்சிநீங்கியமுகத்தை — கண்டபோதே — நெஞ்சின்மெலிவினையறிந்தும் - மனவாட்டத்தைஅறிந்தும் — வினவலும் - (நீபோனகாரியமென்னவாயிற்றென்று) கேட்

டனும்—(அவள்)—சூள்கொண்டு—சபதம்பண்ணிக்கொண்டு—மலர்தலையுலகில் - பரந்தவிடத்தையுடைய பூலோகத்தில் — எகி. போய்— தான்முன்மயங்கியவாறனைத்தும்— குறிப்பிற்றோன்ற குறிப்பினால்வெளிப்படும்படி—நவியுநாணட - வருத்துகின்ற நாணமானது வருத்த —வருந்தி— நவின்றனள் - சொல்லினாள். எ-று. (௨௮)

நன்னக மகள்கேட் டுள்ள நாணுபு முகங் கவிழ்ந்தாள் ✻
பன்னக சயனனாதி பண்ணவர் நெருங்க வைக்கண் ✻
முன்னகை செய் தாதிய முப்புர மாளச் செய்தான் ✻
புன்னகை புரிந்தான் பங்கிற் புரிகுழல் செருக்குமாள. (௨௯)

(இ-ள்) நன்னகமகள்கேட்டு- நல்லமலையரையனுடைய மகளாகிய உமாதேவிகேட்டு—உள்ளநாணுபு - மனநாணி—முகங்கவிழ்ந்தாள் - முகத்தைக்கவிழ்த்துக்கொண்டாள்—பன்னகசயனனாதி - சர்ப்பசயனனாகியதிருமால்முதலாகிய—பண்ணவர் - தேவர்கள்— நெருங்கு - நெருங்குகின்ற — அவைக்கண் - சபையினிடத்தில்— முன்னகைசெய்து-ஆதியில்நகைத்து—தீயமுப்புரம் - கொடுமையையுடையதிரிபுரங்கள் — மாளச்செய்தான் - மாண்டுபோகச்செய்தபரமசிவன்—பங்கிற்புரிகுழல் - தன்னிடதுபாகத்திலிருக்கின்றகட்டப்பட்டஅளகத்தையுடைய உமாதேவியினது—செருக்குமாள - செருக்கு அழிய — புன்னகைபுரிந்தான் - புன்சிரிப்புச்செய்தனன். எ-று. ✻

அளியனென் றுனக்கு நான்சொ லல்லமனரிய னோமற் ✻
றெளியனோ வுரைத்தி நீயென் றிலங்கயி லெறிதலேபோல் ✻
வெளியபுன் முறுவல்செய்ய விமலன்வெண் மதியங்கண்ட ✻
நளினமென் மலர்போலென் றாய் நகைமுகமொடுங்கினாளால். (௩௰)

(இ-ள்.) விமலன் - நிர்மலனாகியபரமசிவன்— அளியனென்று நான் சொல் - (அன்பருக்கு) அன்பனென்று நான் சொல்லிய— அல்லமன் — உனக்கு — அரியனோ— எளியனோ— உரைத்தி நீயென்று - நீசொல்லென்று— இலங்கயிலெறிதலேபோல் - பிரகாசிக்கின்றவேலினாலெறிந்தாற்போல் — வெளியபுன்முறுவல்செய்ய - வெண்மையாகிய புன்சிரிப்புச்செய்ய—என்றாய் - என்றதாயாகிய உமாதேவி— வெண்மதியங்கண்ட - வெண்மையாகியசந்திரனைக்கண்ட—நளினமென்மலர்போல் - மெல்லியதாமரைமலரைப்போல்—நகைமுகமொடுங்கினாள் - ஒளிபொருந்தியமுகம்வாடினாள். எ-று. மற்று-ஆல்-அசைநிலை.

போக்கரும் வலிபுகன்று போய்வரு மாயை சொன்ன *
வாக்கினில் வருந்துவேனை வள்ளனீ நகைசெய் தெள்ளல் *
மூக்கிலிமுகத்தின்முன்னர்முகுரங்காட்டுதல்போலுமென்ன *
மீக்கிளரிமயமீன்ற மெல்லியல் மெலிந்துசொன்னாள் (௯௧)

(இ-ள்) வள்ளல்- (அடியார்வேண்டியயாவுந் தடையின்றியருளுகின்றஇறைவனே — போக்கரும்வலிபுகன்று- நீக்குதற்கரியசபதஞ்சொல்லி— போய்வருமாயை- போய்வந்தமாயையானவள் — சொன்னவாக்கினில் - சொன்னவசனத்தில் — வருந்துவேனை - வருந்துகின்றஎன்னை — நீநகைசெய்தெள்ளல் - நீநகைத்துப் பரிஹாசஞ்செய்தல் — மூக்கிலி - மூக்கில்லாதவனுடைய — முகத்தின்முன்னர் — முகுரங்காட்டுதலைபோலும் கண்ணாடிகாட்டுதலையொக்கும் — என்ன - என்று — மீக்கிளரிமயமீன்றமெல்லியல் — மேலாக (வுயர்ந்து) பிரகாசிக்கின்ற இமயமலைபெற்றமெல்லிய இயல்பினையுடைய உமாதேவியானவள் — மெலிந்து-வாட்டமுற்று — சொன்னாள். எ-று. (௯௧)

நடம்பயிலெந்தை மங்கை நாணினால் வருந்தினளென் *
றடைந்தருள் சொல்வன்ஞால மலைக்குமம் மாயைசூளா *
னெடுந்தகை முன்னர்சென்ற நிலையேநன் றாடுகொல்வோன்
மடங்கல்முன் வெல்வேனென்று வருதலேயாற்றலன்றே.(௯௨)

(இ-ள்.) நடம்பயிலெந்தை - நடனஞ்செய்கின்றஎமக்குத்தந்தையாகியபரமசிவன் — மங்கை- உமாதேவியானவள் — நாணினால்வருந்தினளென்று — அடைந்தருள்சொல்வன் -கிருபையடைந்துசொல்லுவன் — ஞாலமலைக்குமம்மாயை - உலகின்கண்ணுள்ளோரையலைக்கின்றஅந்தமாயையானவள் — சூளால் -சபதத்தால் — நெடுந்தகைமுன்னஞ்சென்றநிலையேநன்று - நெடியதகைமையையுடையஅல்லமனுக்குமுன்புபோனநிலையேவிசேஷமாகும்(அதெவ்வாறெனின்) — ஆடுகொல்வோன் - ஆடுகளைக்கொலைசெய்பவனொருவன் — மடங்கல்முன் - சிங்கத்தின்முன் — வெல்வேனென்று - அதனைவெல்லுவேனென்று — வருதலே — ஆற்றலன்றே-பெருமையல்லவோ. எ-று (௯௨)

அல்லமன் பெருமையெல்லா மனைவரு மறிந்துகொள்ள *
நல்லெழின் மலைமடந்தாய் நன்குணர்த்தினை நீயென்று - *
சொல்லுந ரன்றிநின்னை நிந்தனை சொல்லவல்லா - *
நிலையென்றியம்பயாவு மீன்றவ ளியம்புகின்றாள். (௯௩)

(இ-ள்.) நல்லெழிற்மலைமடந்தாய் - சிறந்த அழகினையுடையமலையரசன்புத்திரியாகிய உமையவளே — அல்லமன் பெருமையெல்லாம் — அனைவரும் - யாவரும் — அறிந்துகொள்ள — நயருணர்க்கினை நீயென்று - நீநன்றாகஅறிவித்தனையென்று — சொல்லுநராகி - சொல்பவராகமாட்டார் - நின்னை - உன்னை — நிந்தனைசொல்லவல்லார் - நிந்தனைசொல்ல வல்லவர் — (ஒருவரும்) — இல்லையென்று — இயம்ப - சொல்ல — யாவுமீன்றவள் - (சராசரங்களாகிய) எல்லாவற்றையும் பெற்றவளாகிய (உமாதேவி) — இயம்புகின்றாள் - சொல்லுகின்றனள்.

பொறியிலியேன்செய் திமை பொறுத்தருள்புரிந்துமெய்ம்மை *
யறிவருள் குரவனாகு மல்லமன் றன்னைக்காணு *
நெறியருள் புரிதியென்ன நிரைவளை வணங்கிக்கூற *
மறிமழு வமர்ந்திருக்கு மலர்க்கைவா னவனுரைப்பான். (ருச)

(இ-ள்.) பொறியிலியேன் செய் - அறிவில்லாதவளாகிய நான் செய்த — தீமைபொறுத்து - கொடுமையைப்பொறுத்து — அருள்புரிந்து - கிருபைசெய்து — மெய்ம்மையறிவருள் - உண்மையாகிய (ஞானத்தை) அருளிச்செய்கின்ற — குரவனாகும் - ஆசிரியனாகிய — அல்லமன்றன்னைக்காணும் - அல்லமனைக்கண்டறியத்தக்க — நெறியருள்புரிதியென்ன - மார்க்கத்தை (அடியேனுக்கு) அருளிச்செய்யென்று — நிரைவளை - வரிசையாகஅணிந்தவளையலையுடையஉமாதேவி — வணங்கிக்கூற - தொழுதுசொல்ல — மறிமழு - மானும்மழுவும் — அமர்ந்திருக்கும் - பொருந்தியிருக்கும் — மலர்க்கைவானவன் - தாமரைமலரையொத்த திருக்கரங்களையுடையபரமசிவன் — உரைப்பான் - சொல்லுவான். எ-று. (ருச)

மத்தமதாறுகுணத்து மாயையை விடுத்தவாற்று *
னித்திய குரவன்றன்னை நீயறிந் திலையணங்கே *
சத்துவ கலைமடந்தை தனையினி விடுத்தியாயிற் *
கைத்தல நெல்லிபோலக் காண்குவை யவனையென்றான். (ருரு)

(இ-ள்.) அணங்கே - உமாதேவியே — மத்தமதாறுகுணத்து - மயக்கமிகுந்த குணத்தையுடைய — மாயையை — விடுத்தவாற்றால் - அனுப்பியபடியால் — நித்தியகுரவன்றன்னை - எக்காலத்திலுமுள்ள அல்லமனாகியகுருபரனை — நீயறிந்திலை — சத்துவகலைமடந்தைதனை - சத்துவகுணமயமாகியமாதினை — இனி — விடுத்தியாயின் - அனு

யாக அடிமைகொள்ளுகின்ற — வள்ளல் - தாதாவாகிய பரமசிவன் — அடீவருநிதியவைப்பை - அழிவில்லாத நிக்ஷேபத்தை — அஞ்சனங் கொண்டுகாணும் - அஞ்சனத்தைக்கொண்டு அறிகின்ற — விழியுடையவரைப்போல் - நேத்ரத்தையுடையவனைப்போல — ஞானமெய்க்குரவனைத்தான்கண்டு - தான் உண்மையாகிய ஞானாசாரியனை முன்கண்டு — மழிமயலன்பர் - மயக்கநீங்கியசரணர் — காண - காணும்படி — காட்டுவோன் - தெரிவிப்போன் — இவனென்று — நந்தியை - நந்திதேவரை — புகழ்ந்தது - சிலாகித்தது. எ-று. (௯அ)

சத்தியால் யான்பிணித்த தளைதனைத் தனதுதூய ※
பத்தியா லவிழ்க்க வல்லோன் பார்க்கினிந் நந்தியேதா ※
னித்தினால் விலங்குபூட்டு மிறைவனே விடுவிப்பானே ※
மெய்த்தவ ராருளினோன்யார் விளம்புக வென்றுசொல்வான் ※

(இ-ள்.) சத்தியால்யான்பிணித்த - நான் என்னுடையமாயா சத்தியாற்கட்டிய — தளைதனை - பந்தத்தை — தனது — தூய பரிசுத்தமாகிய — பத்தியால் — அவிழ்க்கவல்லோன் - விடுவிக்கவல்லவனை — பார்க்கின் - ஆலோசித்துப்பார்க்கில் — இந்நந்தியேதான் - இந்தநந்திதேவனேயாகும் — இத்தினால் - இந்தக்காரணத்தால் — விலங்குபூட்டும் இறைவனே - (ஒருவற்கு) தளையிடுகின்ற அரசனே — விடுவிப்பானே அதைவிடுவிக்கிறவனே — மெய்த்தவாருளினோன்யார் - உண்மையாகிய நிறைந்த அருளையுடையவன்யார் — விளம்புக - சொல்லுக — என்றுசொல்வான் எ-று இத்திருமெலன்பதுவிரித்தலவிகாரம்.

அல்லமனென்னுஞ்ஞான வானையை யகப்படுத்த ※
வல்லவொண் பார்வைநீயே யாதலான் மண்ணிற்போகி ※
யெல்லையி லன்பர்நெஞ்சத் தின்பருணந்தியென்று ※
சொல்லின னுயிரிற்றோன்றாத் துணையென விருக்கும்பெம்மான். ※

(இ-ள்.) நந்தி - நந்திதேவனே — அல்லமனென்னும் — ஞானவானையை யகப்படுத்தவல்ல - ஞானசொரூபமாகியயானையை அகப்படச்செய்யவல்ல — ஒண்பார்வை - அறிவுடையபார்வைமிருகம் — நீயே யாதலால் — மண்ணிற்போகி - பூமியினிடத்திற்சென்று — எல்லையிலன்பர் நெஞ்சத்து - அளவில்லாதஅடியார்களுடையமனத்தில் — இன்பருளென்று - இன்பத்தைஅருளுகவென்று — உயிரிற்றோன்றாத் துணையென - உயிர்கள்தோறும் வெளிப்படாததுணையாக — இருக்கும்பெம்மான் - இருக்கின்றபரமசிவன் — சொல்லினன். எ-று. (௯௰)

அந்திவண் ணச்செங்கோமா னருளிறை யின்னகூறச் *
சுந்தரி தனக்குமெட்டாத் தூயவன் றனைக்காண *
நந்திவல் லவனேயென்று நகைசெய்து கணங்கடம்முள் *
வந்தொருசிலருரைப்ப மங்கைபங் காளன்சொல்வான். (௬௧)

(இ-ள்) அந்திவண்ணச்செங்கோமான் - சந்தியாகாலச் செவ்வானம்போலும் நிறத்தையுடைய எமதிறைவனாகிய பரமசிவன் — அருளிறையின்னகூற - கிருபையினாலே இத்தன்மையவாகிய வசனங்களைச் சொல்ல — கணங்கடம்முள் - சிவகணங்களுள் — வந்தொருசிலர் - சிலர் வந்து — நகைசெய்து — சுந்தரிதனக்குமெட்டாத்தூயவன்றனை - அழகுபொருந்திய உமையாளுக்குமெட்டாத நிருமலனாகிய அமலனை — காண நந்திவல்லவனேயென்று - நந்திதேவன் அறியவல்லவனேயென்று — உரைப்ப - சொல்ல — மங்கைபங்காளன் - உமைபாகனாகிய பரமசிவன் - சொல்வான் எ-று. (௬௧)

நந்தியென் றனையுணர்ந்தா னானவன் றனையுணர்ந்தேன் *
சிந்தைசெய் தெம்மை நீவிர் தெளிவுற வறிகிலீரென் *
றெந்தையெம் பெருமான்கூற விகழ்ந்துரை செய்தோரெல்லாம்
வெந்துயர் கொண்டுநின்றார் மீளவுமவிமலன் சொல்வான். (௬௨)

(இ-ள்) நந்தியென்றனையுணர்ந்தான் - நந்திதேவன் எனது (நிலை யை) அறிந்திருக்கின்றான் — நானவன்றனையுணர்ந்தேன் - நானவனது (வல்லமையை) அறிந்திருக்கின்றேன் — சிந்தைசெய்தெம்மைநீவிர் - நீங்களெம்மைத் தியானித்து — தெளிவுறவறிகிலீரென்று - தெளிவுபொருந்த அறியீர்களென்று — எந்தையெம்பெருமான்கூற - எம்முடைய தந்தையாகிய இறைவன் சொல்ல — இகழ்ந்துரைசெய்தோரெல்லாம் - நந்திதேவனை யிகழ்ந்து சொல்லிய கணங்களெல்லாம் — வெந்துயர்கொண்டுநின்றார் - கொடிய துயரடைந்து நின்றார்கள் — மீளவுமவிமலன்சொல்வான் - பின்னும் பரமசிவன் சொல்லுவான். எ-று.

மாசறு நந்திபத்தி வார்த்தையா லறியீர் நீவிர் *
காசினி யதனிற்சென்று கண்களா லமையக்கண்டு *
பேசுதிர் பின்னொன்று பெருந்தகை நந்திதன்றே *
டசொண் கணங்கடம்மை யேயின னருளினானே. (௬௩)

(இ-ள்) மாசறுநந்திபத்தி - குற்றமற்ற நந்திதேவனுடைய பக்தியை — வார்த்தையாலறியீர்நீவிர் - (நாம்சொல்லும்) வசனத்தினாலே நீங்களறியமாட்டீர்கள் (ஆகையால்) — காசினியதனிற்சென்று - பூலோகத்திற்போய் (அவதரித்து) — கண்களாலமையக்கண்டு - (உங்கள்) கண்

களால் தெளிவாகக்கண்டு — பேசுதிர்பின்னொன்று - பின்பு(வந்து) சொல்லுங்களென்று — பெருந்தகைநந்திதன்னோடு - பெரிய தகைமையையுடைய நந்திதேவனோடு — ஒண்கணங்கட்கமை - ப்ரசித்தராகிய சிவகணங்களை — ஈசன் - பரமசிவன் — வயினனருளினனே - கிருபையினாலே அனுப்பினான். எ-று. (௪௩)

கண்ணுதலருளாலேவுங் கணங்களுட் டலைமைபெற்றோர் *
மண்ணுலகதனில்வேணிமை வளம்பதிதோறும்வந்து *
நண்ணினா ருலகர்கண்ணி னரர்வடிவாகத்தோன்ற - *
வெண்ணுறி னெழுநூற்றின் மேலெழுபதென் றாறாக்குமெண்ணார்

(இ-ள்.) கண்ணுதலருளாலேவும் - நெற்றிக்கண்ணையுடைய பரமசிவன்கிருபையினாலே அனுப்பப்பட்ட — கணங்களுட்டலைமைபெற்றோர் - சிவகணங்களுள் தலைமைபெற்றவர்கள் — மண்ணுலகதனில் - பூலோகத்தில் — வேணிமைவளம்பதிதோறும் - தங்களுக்குவிருப்பமாகிய வளம்பொருந்திய நகரங்கள்தோறும் — உலகர்கண்ணினரர்வடிவாகத்தோன்ற - உலகத்திலுள்ள மானிடர்களுக்கு மானிடராகத்தோன்றும்படி — வந்துநண்ணினர் வந்து அவதரித்தனர் — எண்ணுறின் - (அவர்களைஎத்துணையென) எண்ணத்தொடங்கில் — எழுநூற்றின்மேலெழுபதென்றாறாக்குமெண்ணார் - எழுநூற்றெழுபதென்றாறாக்குமெண்ணினையுடையார் எ-று. (௪௪)

நந்தியென் கின்றஞான ஞாயிறு நிலத் துதிப்பின் - *
முந்துறு மமணொன்று மூடுவல் லிருள்கெட்டோடுஞ் *
சந்திர மௌலி சீர்வெண் டாமரை மலருமென் - *
றிந்திரன் முதலாயுள்ள விமையவர் மனமகிழ்ந்தார். (௪௫)

(இ-ள்.) நந்தியென்கின்றஞானஞாயிறு - நந்திதேவனென்றுசொல்லப்படுகின்றஞானசூரியன் — நிலத்துதிப்பின் - பூலோகத்தில் உதையமாகில் — முந்துறுமமணொன்றும் - அஞ்ஞானத்தாற்சிறந்த சமணமொன்றுசொல்லப்பட்ட — மூடுவல்லிருள்கெட்டோடும் - மூடிக்கொண்டிருக்கப்பட்ட வலியஇருள் அழிந்துபோய்விடும் — சந்திரமௌலி - பிறையணிந்த சடையையுடைய பரமசிவனது — சீர்வெண்டாமரைமலருமென்று - புகழாகிய வெண்டாமரைமலர் மலருமென்று — இந்திரன்முதலாயுள்ள - தேவேந்திரன் முதலாயுள்ள — இமையவர் - தேவர்கள் — மனமகிழ்ந்தார். எ-று. (௪௫)

ஆக கதி-௮-க்கு, திருவிருத்தங்கள் - ௪௮௧.

வசவண்ணர்வந்தகதி, முற்றிற்று.



ஒன்பதாவது -

# அக்கமாதேவியுற்பத்திகதி.



(வேறு.)

புரஞ்சுடு சிறுநகைப் புனிதன் பாலமர் - *
கருந்தடங் கண்ணனிதன் கலையு நந்தியும் - *
அருங்கண நாதரு மகனிலத்திடை - *
வருந்திற மறிந்தவா வகுத்துக் கூறுவாம். - (௧)

பெடையொடு சுரும்பினம் பெரிதுறைந்திடக் *
கடிசுட மளவுவாய்க் காவி ரோடியே - *
மடையுடை மதுமழை மலர்பெய் சோலைசூழ் *
உடுதடை யெனுநக ரொன்றுண் டாயிடை. - (௨)

நம்மையென் பனவெலா முடைய னான்மறைப் *
புன்மையென் பனவெலாம பொருந்தா னெனுந்
தன்மைதன் பெயரினு லறியத் தககவன் - *
நின்மல னெனவொரு நிகரி லானுளன். - (௩)

அவனெழில் மனையவ ளாட கத்தினைச் - *
சுவணமென் குதலெனச் சுமதி யென்பவள் *
தவநிலை தன்னினுந் தலைமைத் தென்னவே *
யுவமையி லில்லறத் தொழுகு நீர்மையாள். (௪)

தூநிரு மலனுக்கச் சுமதி தன்னிடைத் - *
தாமொரு மகளெனச் சார்ந்து தோன்றினள் *
ஆனுயர் கொடியினோ னங்கை தாங்குறு *
மானுயர் சத்துவ கலை மடந்தையே. - (௫)

மதிபெறு கடலென மகளை யீன்றவர் - *
நதிபெறு சடைமுடி நம்பன் பாலுறு - *
கதிபெறு மதிநுதற் கரும்பைப் பெற்றுநற் *
றுதிபெறு மலையென மகிழ்ச்சி துன்னினார். (௬)

நெறிமுறை நிருமல னீறு சாத்தியே *
யறிவொரு மஞ்செழுத் தறைந்து மெய்யுணர் *

குறியினைத் தரித்தனன் குழவி யாகிய - *
பொறிநிகர் வுறுமொரு புதல்விக் கென்பவே. (எ)

இந்துவார் சடையிறை யிடத்தளே யெனுஞ் *
சிந்தைப்பான் மகளையா தேவி யென்னொரு *
சுந்தர நாமங்கொடு தானழைத் தனன் - *
தந்தையா தற்குநற் றவம் புரிந்தவன். - (அ)

அறிவருளாதரவடக்கம்வாய்மைமெய்த் - *
துறவுநல்லொழுக்கமேதூய்மையென்றிவை *
யுறவொடு குழவியா யுடன் வளர்ந்திட - *
மறுவறு சுமதிதன் மகள் வளர்ந்தனள். (கூ)

வாடிய மருங்குலம் மாயை தோன்றுநாள் *
கோடிய சிலைகொடு தவங் குலைப்பவே - *
போடிய மதனம்மா தேவி யோங்குநாள் *
வீடிய சிலையனாய் வீழ்ந்து மாழ்கினான் (ய)

விழுந்தன கொடியதீ வினைப்பரப்பெலாம் *
எழுந்தன நல்லறம் யாவுந் திங்களங் - *
கொழுந்தென நிருமலன் குமரி யோங்குநாள் *
முழங்கின சிவாகம முற்று மெங்குமே. (யக)

(வேறு)

ஈங்குமா தேவி யின்னண மிருப்ப வெம்பிரா னேவிய கணங்கள், தாங்கள் வேண்டிய வொண் பதிதொறு முன்செய் தவத்தர்பா லன் மகவாகித், திங்கிலாச் சித்த ராமையன் மாச்சி தேவனென் றிடுபெயர் முதலா, ஐந்து நாமங்கள் வேறு வேறுறக் கொண் டுற்றனர் நற்றவ முயன்று. - - - - (யஉ)

பயகுற்றமிலியசங்கரபூசைபல்வகைநெறிப்படவியற்றிச் செய நற்கருஞ் செய்கை செய்தவரிருந்தார் தென்றிசைக் கயிலைபோற் சிறக்க, மயக்குறுமமண வல்லிருண் மெலிய வயிணவ மெனுமுகி மழுங்க, விபக்குறுசைவமலரநன்னந்தி வெய்யவனுதித்தமைவிரிப்பாம்.

வாயின்மண்ணிட்டுக் கொண்டவன் றன்னை மதித்துநன் னுதலின் மண்ணிடாமற், பாயும்வெண் டிரையிற் றுயில்பவன் றனக்குப் பரிந்தியொன் றளித்தருண் முக்க, ணாயகன்றனையே கருதிவெண் ணீற்றுனன் னுதல் வீதியை யணியுந், தூயநன் மறையோர் தமக்கிடமாகுந் துரிசிலா விங்குளா புரியே. - - - (யங)

கதிர்விளைசெந்நெற்காடுசூழ்கரும்புகரும்ப்புசூழ்கதலியங்கதுசூழ்,
புதுநயும்பாளைக்கமுகதுசூழ்முட்புடைப்பசுங்காயதெங்கதுசூழ்,முதி
ர்கனித்தேமாந்தண்பொழிலயார்ப்பார்க்குயர்வுறுதுயர்மிடிபுகாம,
லதிர்முரசியம்பும் வீதியந்நகரிற் கணிகள்வைத் திடுபடைகாட்டும்.

விருந்தினுக்கிடுவா ரன்னமந்நகரின் வேதியர்மடநல்லைய ரெல்லா
ர, யொருந்துமன்னதீதிற்கிடுவனவிருந்து புனல்வயற்செங்கமலங்க
ள், வருந்துநுண்ணிடைநம்மாதர்கைக்கமலர்க்கு வண்டினைக்கொடுப்
பர்பேரின்பந், தருந்தனிநகர்சூழ் தடங்கள்வண்டிற்குத் தாண்மலர்
கொடுத்திடுமன்றே. - - - - (௰எ)

இந்நகர்வாழுமறையவர்செய்யும் யாகதூமம்படிந்தன்றோ, பொ
ன்னகர் வாழ்நர் நிறைந்தவாயுளராய்ப் பொருந்துத லிந்நகர் மறை
யோ, ருன்னருமனுவானெருப்பிளைவளர்த்திட டொழுகுநீர் காட்டுநி
ன்றிப், பின்றொருசெயலாற் கலியுகந்தன்னிற் பெருகுநீர் காணுற
ப்படுமோ. - - - - - (௰அ)

இனையமாநகரினந்தணர்க்கெல்லாமிறைமைபூண் டுளனொருமறை
யோ, னினைவெலாமரன்றுளினுமுணையெல்லாநிருமலன் றுதியினுஞ்
செய்யும், வினையெலாமவன்பூசனையினும்வைத்தோன் வேதமுமொ
ழுக்கமும்வல்லான், மனையுளானெனினுந்துறந்தவர்க்கொப்பான்மற
றவனுமமாதரசன். - - - - (௰௯).

திருந்தியவனையான்றேவிதன்னுமஞ்செப்பின் மாதாம்பிகை யெனு
பா, னருந்ததிமுதலாங்கற்படையார்தமருநிலை யூறின்றிமுற்ற, நிரந்
தரமவளைக்கைகுவித்திறைஞ்சிநினைந்துபின்பாயவிற்படுப்பார் கருந்
தடங்கயற்கட்பூங்கொடியனையார்கற்பினையாவரோபுகல்வார். (௰௯)

பூங்கொடியனமாதாம்பிகைபெருமைபுனைந்துரை யன்றுபட்டா
ங்கே, யோங்கியவபரசிவனென வேதமுரைத்திடு மருணந்திவந்தான்,
றுங்குறவவடன்வயிற்றிடையதனுற் றக்கவர்தகவிலரென்ப, தாங்கவர்
பயந்தபுதல்வனாற்றெளியவறிமினென் றறைகுவர்பெரியோர்.(உ௰)

ஐந்தொழிலொருவன்றிருவுளமகிழ மறுதொழிலாளன்மா தரசன்,
பைந்தொடிகொழுநற்றொழுதெழுதொழிலாள் பரிந்துதீ வளர்ப்ப
வன்மன்றயோன், செந்திருவனையாள்விருந்தினர்வயிற்றிற் றீயவிப்
பவளிவர்பெருமை, நந்தெழின்மலரோன் சொன்மகளிருக்கு நாவி
னும்புகன்றிடப்படாதே. - - - (உ௧)

இன்னமாதரசன்றேவி தன்வயிற்றினிவ்வுலகெலாஞ்செய்புண்ணிய
த்தான், மன்னுமாரளிகள்விருந் துணக்காமர்வல்லியின்மலர்மலர்வது
போ, லென்னையாளுடைய நந்திவானவன்ற னைய்திவந் துதித்தன
னன்று,சென்னியாலமரர்தொழுதுபூமாரிசிந்தினர்துந் துமிமுழங்க.

எங்குருநந்தி தோன்றுநட்புத்துமை யென்சொல்வாங் கண்டுமுட்
டென்னும்,வெங்குணவமணருளத்தெறிமழுவேவான் வேடங்கண் டஞ்
சலிசெய்ய, வங்கொருநேயம்பிறந்த துதிருமாலடியவருளத்தினிலெ
ங்கள்,சங்கரனிறைவனெனவொருஞானஞ்சார்ந்த துதமையறியாமல்

கொலைகளவழுக்காறவாவொடுவெகுளிகொடுஞ்சொல்பொய்யயனி
லகூற, னிலையபூஇயொருவன் செய்நன்றிமறத்தனிந்தனைவஞ்சனைபி
றர்தூஞ், சிலைநுதன்மடவார்க்கருதலென்றினையதீமைகளியாவும்போ
யினவா,னலமலிதருமமூர்த்தியாகியநன்னந்திவானவன்புவிவருநாள்

தாடலைதந்திங் கெம்மையாணந்தி தாயகட் டினுநின்று தனைமே,
லேடவிழ்மலர்வாண்முகமதுதோன்றவெழுந்தரு ளுதன்முனங் குரு
வாய்க், கூடலசங்கமேசன்றுய்க்கொளித்துக்குறுகிநன் னுதலினீற
ணிந்து, வீடருள்பரமசிற்கனலிங்கமெய்யுறத்தரித்தனனம்மா.௨௫

தரித்தபின் றனதுமேனிதோன்றுமற்றுயெதிர்நின்றிட பப்பேர்,
திரித்துநல்வசவனென்றுபேரிட்டுச் சென்றனன்சிவன்றனைக்குருவா,
யொருத்தர்தம்மிடத்திற்பாவனைசெய்கென் றுளைப்பவருலாகெடத்
தானே, யருட்குருவடிவாய் வந்தருள்புரிந்தவாலமார் சூலபாணிய
னே. - - - - - (௨௬)

பிறந்தமெய்ஞ்ஞானப்பிள்ளைநன் னுதலிற் பெருகொளி நீறுமொ
ண்களத்திற்,சிறந்துளவமலலிங்கமுங்கண்டுசெறிந்தவரனைவரும்விய
ந்து, மறைந்தரன்குருவாய் வந்திவைபுனைந்து மகவினைவசவ னென்
றுரைப்ப, ரறைந்தனனென்ன வறிந்தனரமலனறிவுணின் றறிவிக்க
வன்றே - - - - - (௨௭)

குறில்வழிலகரந்தனிநிலையாயுங் கூடியதகரமுன் னெழுத்தென், ற
றிகுறிவடிவந்திரிதல்போனந்தியடல்விடைமெய்திரிந்துறினு, நறு
மலர்விழியிற்கண்டவரொல்லாநந்தியேயென்றுளமகிழ்ந்தார், பெறு
தவமுயன்ற வன்னையும்பிதாவும் பெறுமுவகையினையாருரைப்பார்.

ஈன்றநாடொடங்கிச் செய்கடன்முற்று மியற்றினன் மாதரசன்றான், றோன்றுமோர்குழவிப்பதங்கடந்தெங்கோன்சொல்குருமுன்னுறுங்காலை, யான்றமாமறைகண் முதலவாய்த்தான்முன் னறிந்துளகலையெலாமறிந்தான், சான்றதாமதிய மிரவிவற் றிறப்பத் தன்கதிர்தானடைகுதல்போல். - - - - (௨௯)

பரமனையிகழ்ந்துநெறியலாநெறிபோம்பாமதயானையையடக்க, வரமுறுகூர்மையங்குசமென்ன வானிடியாரொனுமழாவிற், கொருமழவிளங்கன் றெனவருள்வசவ னெழுகுநாள் வளங்கொள்கல்யாண, புரமுறவமணகுழாந்தொடுமிக்க புரவலன்விச்சலனிருந்தான். (௩௰)

படியில்கல்யாண புரமெனுந்தூசு பரசிவபத்தியாய் விளர்ப்பக், கொடியபுன்சமணமாசுவர்பிடித்தாங் குவலயத்திருந்திடுமற்றா, ளடியவர்செல்வ மெனும்வசவேச னங்குடன்வந்தநாகாம்பை, யுடன்வரவந்தவ்விச்சலனைகரினுற்றனனற்றவர்நெருங்க. - - (௩௧)

வந்தனன்வசவதேவனென் றுரைப்பமன்னவன்விச்சலனறிந்து, மந்திரியென் றுமறைந்தவுட்பகையைமலிபொடிமூடியதழலை, வெந்தழலென்ன வறிந்திடாதெடுப்ப மென்கைநீண்டுத லெனவெதிர்போ, யுய்த்திட்டவரிதாய்த்தன்மதமழியவுடன்கொடுகோயி லுட்புகுந்தான்

பொருந்துமத்தாணி யிடைத்தவிசொன்று புறமதகோளரிக்குதவி, யிருந்திறற்சிங்கஞ்சுமந்தபூவணைமேலிருந்தன னரசனப்போதி, லருந்திறற்றானை காவலர்வேந்த ரமைச்சர்வெண் கவரிகொண்மாதர், நெருங்கிநிற்கரியபேரவையிடத்து நிகழ்ந்தமையொன்றெடுத்துரைப்பாம். - - - - - - (௩௩)

(வேறு)

இந்திரனெதிர்நின்றுமேந்திலைழகாதிற்செம்பொற் - *
சுந்தர வோலையொன்று சோர்ந்தெனச் சுருண்முடங்க - *
லந்தர முகட்டினின்று மரசன்பே ரவையிடத்து - *
வந்தெதிர் விழுந்ததொன்று மானிடர் மருண்டு நோக்க.(௩௪)

நின்றவ ரெடுத்துவந்து நெடுங்கையிற் கொடுப்ப வாங்கி - *
வென்றிகொண் மடங்கலன்றான் விரித்ததை யெழுத்துநோக்கித்
தன்றலை யெழுத்தே யென்னத் தானுணர்ந் திலன்மயங்கி *
வன்றிற லமணகாலன் மலர்க்கையிற் கொடுத்தானன்றே.(௩௫)

வாங்கிய ரூடங்களொக்கி வசவநா யகனிவ்வோலை - *
தாங்குநின் றவிசின்கீழோர் தமனிய வைப்புண் டென்ற *
தோங்கிய தூண்செய்தோளா யுனக்குநான் காட்டுவே னென் *
றுங்கதை யகழ்வித்தானவ் வரசர்கோ னதிசயிப்ப. - (௩௬)

அகழ்ந்திட நிதியவைப்பொன் றூடக மலையிலத்திற் - *
புகுந்திவண் வந்துமெல்லப் புறப்படல் போலத்தோன்ற *
மகிழ்ந்தவ்வரசர்கோமான்வசவனைக்கண்டபோதே - *
நிகழ்ந்தவொண்பயனுணர்ந்துநெஞ்சகநனிவியந்தான். (௩௭)

பயிலுநல்வினையெமக்குப்பயந்தவிவ்வசவதேவன் - *
கயிலைநன் மலைக்கிரண்டாங் கடவுளே யென்றுசொல்லி *
யியலுளா மடந்தைபொய்யா ளென்பதைப் புதுக்கினனச் *
செயலினைவிழியிற்கண்டோர்தெளிந்துநெஞ்சகமகிழ்ந்தார் ௩௮

மந்திரிக் கிழமைநல்கி மாபுளி யுரிமையாற்றி - - *
மைந்தனைப் புரக்குந்தாய்போன் மற்றெனைப் புரத்தியென்று
சிந்தனை களிப்பவின்சொற் செப்பியா யிடையிருப்ப *
நந்தியைத் தொடர்புகொண்டா னுந்தகத் தடக்கைவேந்தன். ௩௯

பெருந்தகை வசவதேவன் பெருமைக்குத் தக்கவாறே *
யருங்கடி மணஞ்செய்வித்தா னலங்கல்வேன் முருகனன்னான் *
திருந்திய வம்மணத்தின் சிறப்புநாம் விரிப்பதென்கொல் *
புரந்தனை யன்றுதொட்டுப் புகன்றுகல்யாண மென்றால். (௪௰)

இவ்வகை கல்யாணத்தி னிருப்பநா காம்பையென்னுந் *
தவ்வைநம் வசவதேவன் றன்பிரசாதந் தன்னு - - *
லெவ்வமின் முத்திமெய்யோ டிருக்கையி னளிக்கும்வீர *
சைவநன் னெறிவளர்க்குந் தனயனை யீன்றளம்மா. (௪௧)

மைந்தனை யீன்றுவந்து வசவநா மம்புனைந்தா - *
னிந்தையில்கற்புநங்கைநிகழ்திருமுகங்களாறு - *
* முந்தயிறலங்களாறு மறிவித்தற்குலகில்வந்த - *
கந்தனென்றுவ்வந்நாகாம்பைதன்மகன்வளர்ந்தான். (௪௨)

---

* ஸ்தலங்களாறவன — பக்தஸ்தலம், மாஹேச்வரஸ்தலம், பிரசாதிஸ்தலம், பிராணலிங்கஸ்தலம், சரணஸ்தலம், ஐக்கியஸ்தலம்.

வீரமாகேசனொன்று மென்பயிர்வளர்க்கவந்த *
மாரிபோ னிகரில்சென்ன வசவதேசிகனிருப்ப *
நேரிலா வசவநாம நெடுந்தலை மகவொன் றீன்று *
சீருலாஞ் சங்கமேச தேசிகன் பெயர் புனைந்தான். (௪௩)

மொழியினு னினைவா னுக்கா னூக்கது னடியர்வேண்டிற் *
றொழிவிலா துதவித்தாய்போ லோம்பினன் புறமதத்தோர் *
வழியெலாம் வழக்குமாற மலிபுகழ்ச் சைவமென்னும் *
பழியிலா வழிநடப்பப் பண்ணினன் வசவதேவன். (௪௪)

அரனடி யவர்க்குத்தேனு வாகியவசவன் சீர்த்தி *
விரிநில முழுதும் போர்ப்ப வெள்ளிவெற் பினையகன்று *
தரைமிசை வந்திருந்த தவமொலா முணர்ந்து சென்றார் *
பொருவில்கல்யாணத்திற்குப்போதல்போற்கல்யாணத்திலசாறு

புலமொடு வறிஞுமெள்ளும் படிதனி வறினுமிக்க *
நலமொடு வறிஞுமேனி நலமற வறிஞுஞ்சீர்சான் *
மலைமகள் கணவன்றொண்டர் வரயுகன் னுறினெதிர்ந்து *
நிலமிசை வணங்கியஞ்சி நின்றுநன் றூற்றுநந்தி. (௪௫)

சாதியுங் குறியுநீத்துச் சரணரைச் சிவனே யென்று *
பாதபங் கயமிறைஞ்சிப் பத்திசெய் குவனந்நந்தி *
தீதறு சுவைத்தீங்கண்டாற் செய்தசெங் கரும்பும்வேம்பும் *
பேதமொன் றுறுமற்சாதி பெயர்விடுத் தறிதல்போல. (௪௭)

மாதர்க டமையகன்ற மலிதுறவினரொண் ணில்லார் *
கோதைய ருடனிருந்துங் கொடுமைய விலரொண் ணில்லார் *
மேதைகொ ளருச்சனைக்கு வேண்டிய முழுதுங்கொண்டு *
போதுகள் வழாமலீசன் பூசைசெய் பவரொண் ணில்லார். (௪௮)

விரதங்கள் வேறுவேறு மேவிநிற் பவரொண் ணில்லார் *
பரதஞ்செய் மதரரிக்கட் பரத்தையர் மனைகடோறுஞ் *
சுரதஞ்செய் பவரொண்ணில்லார் தூயநன் னந்திநாம *
வரதன்ற னன்பின்வாழும் வழுவின்மா கேசரம்மா. (௪௯)

தீதுசெய் சமணர்முன்னர்ச் செயற்கருஞ் செய்கைகாட்டி *
வாதுசெய் தவர்செருக்கு மாய்வுசெய் திமையமீன்ற *

குறுசெய் மூலைமடந்தை துணைவனுக் கொண்டர்க்கெல்லாம் ✻
யாதுசெய் குவனென்றேவ வியற்றுவன் வசவதேவன். (ருய)

உளந்தெளி சரணர்தம்மோ டிம்முறை யொழுகுநாளி - ✻
னளந்தறி வரிய்சோதி யல்லமன் வரவுநோக்கி - - ✻
வளங்கெழு திருக்கல்யாண வளநகர் தனிலவாளுக்கு - - ✻
மிளம்பயிர் போலிருந்தா னெம்மையா ளுடையநந்தி. (ருக)

அக்கமாதேவியுற்பத்திகதி முற்றிற்று.

ஆ கதி - சு ௨ - திருவிருத்தங்கள். ருாகூஉ.



பத்தாவது -

# அக்கமாதேவி துறவுகதி.



(வேறு)

தன்னைக் காணாவேள் கணைபாயத் தடுமாறு - - ✻
மன்னைக்காணுஞ் சோறெனவிட் டருண்மா தேவி - - ✻
பின்னைப்போது மல்லமதேவன் விளை யாடுங் - - ✻
கொன்னைக்கானிற் றேடி யடைந்தமை கூறுற்றாம். - (க)

கொங்கைப் பொறையைக் கொண்டுமருங்குற் கொடிவாட ✻
வங்கைக்குடநெய் யெய்தழலென்ன வழுகெய்தி - - ✻
நங்கைக் கிணைகண் டிலமுலமெங்கணு நாமென்ன - - ✻
மங்கைப்பருவ நண்ணினண் முற்றுணர் மாதேவி. - (௨)

வாதித்தொன்றே டொன்றெழல் போன்முலை வந்துற்றும் ✻
பேதைப் பெண்போற் காமமுளத்திற் பிறவாமற் - ✻
பாதிப்பெண்மே னியனெனு மின்பப் பதிதன்னைச் - ✻
சாதித் தெய்துஞ் சாதனமோடு தலைப்பட்டாள். - (௩)

தன்னை யறிந்திடை யிடறழுக்கட் டவைவன்பாற் - ✻
பின்னமறும்படி மேவு பெரும்பரு வப்பெண்ணைக் - ✻

கன்ன னெடுஞ்சிலை மன்மதன் வேரிக் கணைபாயு
மன்னு மிளம்பருவத்தின னென்பர் மறைப்புற்றார். (௪)

வண்டு படாதலர் சண்பக மேயென மாறாகிப்
பண்டர னோடமர் செய்மதன் வண்டு படாமேனி
கண்டிடு மொண்சுட ரோயெனு மாறு கவின்பொங்க
வொண்டவ நின்மலன் மாதமர் நாள்களி னோர்தாளில். (௫)

வீரங்குறைவின் மைமத வேழ மிசைகொண்டு
தாருற்றோரும் பொங்கமதிக்குடை தன்மேலா
மாரன்கரிமேல் வந்தன னென்ன மணிப்பொற்றே
ரூருந் தெருவிற் கௌசிகமன்ன னுலாவந்தான். (௬)

இயங்கட ரங்க நெடுங்கடலென்ன வெழுந்தார்ப்ப
வுயங்கு மருங்குன் மடந்தையர்பாடி யுடன்போத
வயங்க ளிவர்ந்திள மைந்தர்மருங்கி னடுத்தேகப்
புயங்கள லங்கவிலங்கவிசும்பிறை போல்வந்தான். (௭)

மானு நெடுங்கரி மீதுபுரந்தனில் வந்தானைக்
காணு மடந்தைய ரோதுமுணர்ந்திலர் காமத்தா
னூணு மிழந்தனர் தூசுமிழந்தனர் நன்றாகும்
பூணு மிழந்தன ராவியிழந்திலர் போனார்கள் (௮)

நல்லமதந்தா னோண்கவு ளின்பா னன்றுண்ணச்
செல்லுசுரும்பே வெங்கரி யின்றாழ் செவிமூடு
மெல்ல நடந்தே போவென மெல்ல விளம்பென்று
சொல்லி மறங்கூர் வேலன கண்ணார் துயர்கின்றார். (௯)

கோதையர் மாலா லிவ்வகை நோவக் கொடிமாட
வீதியினூடு வருந்திறன் மன்னன் வினையில்லா
மாதவனுக்கு நிர்மல னுக்கோர் மகளாகுங்
காதொடு காதுங் கண்மடமாதைக் கண்டானே. (௰)

கண்டன னோவிலை யோவெனு முன்னங் கழைவாங்கிக்
கொண்டனன் வாளி சொரிந்தன னோடிக் கொடுமார
னுண்டிலை யோவென வாவி தளர்ந்தே யும்பன்மேல்
மண்டலமாளு மன்ன னிருந்தான் வசமற்றே. (௰௧)

கொங்கைப்பாரத்தான்மலர்வாசங்கூடாம - *
லிங்கிப்பாரிநீபோதுமலர்க்கணைழின்மாவோ - *
மங்கைக்கோலங்கொண்டுநிலத்தில்வருமின்றோ - *
வங்கைக்காந்தட்பொற்றொடியாரோவறியேனே. (௰௨)

வஞ்சிநடந்தேயென்னென்றிர்வந்தேமயல்செய்தா - *
ணெஞ்சுதளர்ந்தேன்மாலில்விழுந்தேனிலைகாணே - *
னஞ்சலையென்றேயின்றணையாளேலனல்காணும் - *
பஞ்சுபடும்பாடங்கசனம்பாற்படுவேனே. - (௰௩)

என்ன நினைந்தே மன்னவன்வெந்தீ யிழுதாகி - *
முன்னர் மருங்கே நின்றவொருத்தன் முகநோக்கிப் *
பொன்னென வந்தவ் வாய்தலினின்று புறப்பட்ட *
கன்னி டணங்கார் நீயறிகென்றான் காமுற்றே. - (௰௪)

ஓடியறிந்தே யன்னவன் வந்தங் குரைசெய்ய - *
வாடு மருங்குன் மங்கையையின்றான் மகளென்று. - *
நீடிய வெந்துயர் மன்ன னறிந்தென் னெறியாலுங் - *
கூடுவனிந்த வணங்கினை யென்று குறித்தேகி - (௰௫)

கோயிலின் மேவி யிருந்துயர் ஞானக் குறிகூறுந் - *
தூயவராகிய வாரியர்தாமுஞ் சுடர் செம்பொற் - *
சேயிழை யாரும் வலிந்துறி லின்பு செயாதொன்று - *
வாயிலிருலணை வேனென மன்னன் மனத்தெண்ணி. (௰௬)

(வேறு)

தூதுவல்லநன் முதுக்குறை மாதரைத் துணிந்து - *
நீதிவல்லவ னிருமலன் மகடனை நீவிர் - - *
ஓதி லெம்மனைக் கிழத்தியாம் படிபுரை செய்து - *
போது மின்கவென் றேவினன் வியனிலம் புரப்பான். (௰௭)

ஐயமுன்னதே செய்குவ மெனப்புகன் றகத்திற் - *
பையவந்துநன் னிருமலன் றிருமுகம் பார்த்து - *
வையமன்னவன் கருத்தினை வகுத்தனர் மறுத்துத் - *
தூய்ய மங்கைமீ ரொமக்கடா திதுவெனச் சொன்னான். (௰௮)

வேந்தன் மாமனை யும்மகளாயினவ் வேந்தன் - *
சார்ந்த வாழ்வெலா நுமவென வறிகிலீர்தானே - *

போந்தவோர் திருமகள் வரவினைப் புறம்போக்கு
மாந்தர் யாருள ரொன்று மங்கையர்சொல வகுப்பான். (௰௯)

இம்மைசேர்பயன் கருதியே தகாதவ ரிடத்திற்
கொம்மைவார்முலை மாட்கொடை நேர்ந்தவக் கொடியா
ரம்மையாழ்நிரை யத்திடை வீழ்ந்தன ரழுந்தித்
தம்மைநோக்கின ரொருவரு மின்றியே தளர்வார். (உ௰)

தமக்கடா ததுசெய் துயிர்வாழ்வது தன்னிற்
சுமைக்கடாதமெய் விடுத்தலே நன்றெனச் சொல்வ
ரெமக்கடாதது புகன்றனிர் மங்கைமீரிச்சொ
லுமக்கடாததென் றியம்பலு மங்கையர் நுவல்வார். (உக)

உறையில் வாளொடு மாவழங்குறு வனத்தோடி
மறவனோர் பொருட்டுறுமென வீரத்தலைமாறு
மிறைவலவாழ் குடிதன்னி லொன்றொரு பொருளிரத்த
லறவனாகிய நீபிதை யறிந்திலை யந்தோ. (உஉ)

என்றுமாதரார் கூறலு நிருமல னெங்கன்
மன்றலவார்குழற் பேதையோ வல்லனும் மனக்கதைச்
சென்றுகூறுமி னவண்மனை மிசைந்துணா செய்யி
னென்றுபோமி னென்றியம்பின னவர்மன நயந்து. (உ௩)

மங்கைபாலடைந் தறைகுவர் மதன்வலி மாயக்
கொங்கைமா முகிழ்ப் பூங்கொடி நீயருள்கூர்ந்தே
யெங்கள்கோமக னுருயிர் நிறுத்தினை யெண்ணி
லங்கண்மாநிலத் துயிர்க்கெலா மன்னையா குவையால். (உச)

என்னவோதலு நிருமல னீன்றரு ளென்றாய்
மன்னனும்மனை துறக்குமோர் சூட்சியை மதித்துப்
பொன்னனீ ரரசெனக் கொரு சூளினைப் பொருந்திப்
பன்னுமாயினீர் பணித்தது நன்றெனப் பகர்ந்தாள். (உரு)

தூதுசென்றவர் பொற்கொடி சொல்லிய சொல்லாற்
காதல்கொண்டன னென்றுளந் திரிந்துதாங் கருதி
மாதுநின்பெருங் கருணைசெய் வதற்கெங்கண் மன்னன்
யாதறைந்தனை யதுசெயத் தக்கவ னென்று. (உ௬)

உள்ளமார்வமோ டேகியம் மடந்தைய ருரைப்ப
வள்ளலாகிய மன்னவன் மனநனி மகிழ்ந்து
தெள்ளுமா ரமுதனை யவளிருந்துழிச்சென்று
னெள்ளுகாம நோய்கொண் டவனெனச்செய விசையான். (உஎ)

வல்லிகொங்கையைப் பொன்மலை யென்னவே மதியா
னில்லுறுங் குடமாகவே யெண்ணினா னுதலை
வில்லெனும் படிநினைத்தனன் வெண்பிறை யென்றான்
சொல்லுவன் றனக்ககப்படு மடந்தையாய்த் துணிந்து. (உஅ)

அருள்செய் தென்னை நீ யளித்திடுமதற்கு நான்செய்வ
துரைசெய் நானதுசெய்வனென் றரசர்கோ னுரைப்ப
வரைசெய் தோளினுயென்னை நீ வலிந்துபுல் லாமைக்
கொருசொ லுண்மைசொல் லென்றனளொரு புடையொதுங்கி

நின்கருத்திசை வாலன்றி நின்னையான் வலிபே
னென்பதற் கொருகு றுரைக்குவன் புகிலெழுந்த
மின்கொடிச் சிறுமருங்குலாய் கேளென வெள்வேற்
புன்புகர்க் கருங்கடாக களிற்றரசர் கோன்புகல்வான். (ருய)

(வேறு)

வந்தநல் விருந்திருப்ப மனையினுற் றருந்துவானும்
பந்தியினுணவு வேறுபண் ணுபாதகனுந் தாயுந்
தந்தையு முணவுண் ணுதசழக்கனு முச்சிட்போதி
னுந்தவர்தமைநோக்காம னுகர்ந்திடு கொடியன்றானும். (ருக)

நிந்தைசெய் யுணவினுனு நிருமலன் பூசையின்றி
வந்துண வருந்து வானுமறுத்த வூனுகர்விப்பானுந்
தந்தநல் வினையாற்செல்வஞ் சார்ந்தவர் தம்மைநகண்டு
சிந்தனை பொருதழுங்கித் தீர்வினுண் மகிழ்வான்றானும் (ருஉ)

கன்றுண விடாமலான்பால் கறந்துகொள் பவனுஞ்செய்த
நன்றிகொல் பவனுங்கோடி நடுநிலை தவறுவானுங்
கொன்றுயிர்பதைப்பநோக்குங் கொடியனும்போர்க்களத்திற்
றன்றலை வனைவிடுத்துச் சாய்ந்துபோ மடமையானும். (ருரு)

அடைக்கல மெனவுந்தானை யளித்திடா தகற்றுவானுங்
கொடுக்குதுமெனவுரைத்துக் கொடானுமொண் கொடைவிலக்கி

விடுக்குறு மவனும்பாவ வினையிடத் துதவியாகி - *
நடக்குறு மவனுந்தேர்ந்து நட்டபின்வஞ் சிப்பானும். (௫௪)

குரவர்தம் மனைகடக்குங் கொடியனுந் துறந்துளார்தம் *
வரவெதிர் கண்டெழாத மறவனு மறிந்தான்போன்று - *
கரவினி லருநூல்கற்குங் கயவனும் புதியராகி - *
யிரவினில் வந்தநல்லோர்க் கிடங்கொடா தகற்றுவானும். (௫௫)

முன்புகழ்ந் துரைத்துப்பின்னர் முறுவல்செய் திகழ்வான்றானுந்
தம்பெருங் கிளைநல்கூர்ந்து தளர்வுற வாழ்கின்றானு - *
மன்புகொண் டொருவன்வைத்த வரும்பொருள் கவர்கின்றானுந் *
துன்புறுந் தொழில்செய்வித்துச் சொல்பொருளிலையென்பானும்.

கற்பழி மனைவியோடு கலந்திருப்பவனு மற்றோர் - *
பொற்புடை மனைவிதன்னைப் புணர்வதற் கெண்ணுவானுஞ் *
சொற்பொரு ளுணர்த்தினானைத் தொழவுள நாணுவானும் *
விற்பன வலாதவிற்று மெய்வளர்த் தழிகுவானும். (௫௭)

நலமலி வயலிலாற்றி னந்தனத் தாலயத்திற் - - *
சலமலமொழிப் போன்றானுந் தனிவழி விலக்குவானும் - *
விலைமொழி பொய்த்துவிற்கும் வெய்யவா ணிகனுந் தாழ்ந்த
குலமிலி தன்குற்றேவல் கூலிகொண் டியற்றுவானும். (௫௮)

உறவுசெய் தறிந்தசொல்லை யுவர்த்துழிக் கூறுவானும் - *
பிறர்பிழை தனையேநாடிப் பிறரொடு பேசுவானு - *
முறைவழு வுறுகொடுஞ்சொன் முனிவிடை மொழிகுவானு *
மறிவழி மனைவிசொல்லின் வழிநிற்கு மறிவிலானும். (௫௯)

கலந்தவர் தமைப்பிரித்துக் கலகங்கண் டிடவல்லானும் - *
புலந்தரு நூலினில்லாப் பொருளினைக் கூறுவானு - *
நலந்தனை யழுக்காறெய்தி நகைத்திகழ் கிற்போன்றானு *
மெலிந்தவரிடத்துமிக்க வெகுளியைப் பெருக்குவானும். (௬௰)

புண்ணியம் பிறர்பொருட்குப் புரிபவன் றானுமிந்த - *
மண்ணிடை யின்பத்திற்கா மறுமைசெய் தொழிலவிடுக்குந் *
தண்ணிய வறிவிலானுந் தவத்தனை யிகழ்கிற்பானும் - *
பண்ணிய வினையிலென்றும் பாவமே பயில்கின்றானும். (௬௧)

ஆவனு னுண்மைநீயா தறைந்தனை யதுசெய்தன்றி - *
மேவுவே னுயினென்று வேள்விரும் பழகன்கூறக் - *
காவிநேர் விழிமாதேவி கருத்திசைந் தற்றேயாயிற் - *
போவம்வா வென்றுசொன்றாள் புரவலனுவகைபூத்தான். (சஉ)

கோயிலின் முன்னர்ச்சென்றான் கொற்றவன் சிவிகையேற்றி *
யாயிழை மடந்தைநல்லா ரருகுசூழ் வுற்றுச்செல்லப் *
போயின னரசர்கோமான் புகுதுழிப் புக்காளொள்வேற் *
சேயரி நெடுங்கட்செவ்வாய்த் திலகவா ணுதன்மாதேவி (சங)

மடந்தையைத் தனிக்கண்டங்கி மருவிய வரக்கேபோல *
வுடைந்துநெக் குருகியாற்று வுள்ளமோ டிளம்பூங்கொம்பே *
கடந்திடற் கரியகாமக் கடல்கடந் தேறக்கொங்கைக் - *
குடந்தரத் திருவுளத்திற் கோடியென் றரசிறைஞ்சு. (சச)

காவலன் காமமிக்க கழிபடர் கிளவிகண்டு - - *
பாவைபுன் முறுவல்செய்து பண்பெனுந் தொடரால்யாப்புண்
டோவல்செய் யாதுநிற்கு மொருகளி றனையாயான்சொ - *
லேவல்செய் திட்டபின்ன ரொன்றொடு பேசுகென்றாள். (சரு)

ஏதுநான் செய்வதன்ன தியற்றுவ னறைதியென்ன - *
வோதினு னரசனேத வொண்டொடி யயன்மாறேடுஞ் *
சோதிமா சிவலிங்கத்தைத் தூயையாய்க் காமூடத்திற் *
போதினுலருச்சித்தென்னைப் பொருந்துதிபின்னரொன்றாள். சசு

எல்லையில் காமம்பொங்க விளம்பிலை யெழுங்கத்தோளாற் *
புல்லுவ னென்றெழுந்த புரவலன்றனைத் தடுத்துச் - *
சொல்லிய தன்னமன்னாள் சுரத்துணீர் முகந்துவாயிற் *
செல்லுமொண்கரத்தையோடிச் சென்றுபற்றுதலையொக்கும்.

முகையிடை முருகுண்டாயின் முளையிடை விளைவுண்டாயின்
மகவிடை மதனவின்பம் வருவதுண் டாயிற்சைவப் - *
பகையொடு மருவிநின்ற பார்த்திபன் றனதுளத்தி - *
னுகைவிடையமலற்போற்றுமொழுக்கமும்வந்துநண்ணும். சஅ

செப்புறுஞ் சூணினைந்து தீண்டில னரசனின்று - *
முப்புரஞ் சீறுமுங்கண் முதல்வன்பூ சனைதான்யாங்க - *

## அக்கமாதேவி துறவுகதி.

ளெப்பொழுதுஞ் செய் தக்கதன் றெனவிணையிலாநின் *
றப்புறந்தோளுநம்யாங்க டொடுவதன் றெனப்புகன்றாள்.(௪௯)

மட்டவிழ் குழன்மடந்தை வாயுரை கையும்வாயுங் - *
கட்டிய தெனவடங்கிக் காமமிந் தன மிதீப்போற் - *
கெட்டிட்ட வறிதிருந்தான் கிளர்மணித் தூண்செய் தோளா *
னெட்டிலையயில்வேற்கண்ணு ணீத்தனள்போகவெண்ணி (௫௰)

துறவெனு மாகநெஞ்சத் தொன்னகர் கொளவவாவா *
யிறைவன தானையெல்லா மிரிதல்போற் பூண்கள்யாவு *
மறவையு மகற்றியோதி யவிழ்த்துவார் மைக்குழம்பின் - *
மறைவுறு மணிப்பொற் பாவை போலுடன் மறையவிட்டாள்.

மருளடைந் தனள்கொலென்று மருண்டுமன் னவனிருப்பத் *
தெருளடைந் தங்கைகொண்ட சிவலிங்கத் தொடுநினைந்த *
பொருளடைந் தெனமகிழ்ச்சி பொங்கமன் னவனை நீங்கி *
யருளடைந் தொழுகு கண்ணா ளணிமறு கூடுசென்றாள் (௫௨)

அன்னையும் பிதாவுங்கேளா வருமகட் கடுத்த தென்னென் *
றுன்னிவந் தழுங்கநீவி ருமமகளென்று மாழ்கி - *
யின்னல்கொண் டிரங்கன்மின் போமெய்ம்மை நானறியத் தேடித்
தன்னிருங் கருணைசெய்யுஞ் சற்குரவனைச்சார் கிற்பேன். (௫௩)

என்றவ ளவனைநோக்கா தேகிலர் போலகன்று - *
சென்றன ளிருமலப்பேர்ச் செல்வனுஞ் சுமதிதானு - *
நன்றிவ ளினைந்த தென்று நம்முடை மாபிற்கெல்லா - *
நின்றிடும்புக ழென்றெண்ணி நிறுவினர் தங்கணுமம். (௫௪)

கண்டவ ரொல்லாநெஞ்சங் கரைந்துகக் கண்ணீர்மல்கத் *
திண்டிற லரசன்பின்னர்ச் சிவிகையூர்ந் தலர்பூங்கோயி *
லொண்டிருமகள்போற்சென் றவொண்டொடியிப்பேய்க்கோலங்
கொண்டிவண் போகாநின்ற கொள்கையே தகியேமென்பார்.

மங்கையை யிவணங்கண்டேம் வயிறெரி தவழ நின்றே . *
யிங்கிவ டன்னையீன்றா ரென்படு வாரோ வென்பார் - *
மங்கல வடிவங்கண்டு மகிழ்ந்தகண் ணிதுவுங்கண்டு - *
பொங்குறு துயரங்கூரப் புரிந்ததெப் பாவ மென்பார். (௫௬)

இன்னண் நகரமெல்லா மிரங்கமா தேவியம்மை - - *
கன்னலு மமுதுந் தேனுங் கைப்பப்பே ரின்பநல்குந் *
தன்னிகர் குருகுகேசன் றன்னையே தேடிச்சென்றாள் *
மென்னிழல் விரும்பிமிக்க வெயில்கடச் செல்வார்போல. (௫௭)

அடவிகடொறு மடைந்து மடுக்கல்கடொறு மிவர்ந்துங் *
கடிநக தொறும் புகுந்துங் காமனை வென்ற வல்லி - *
மடிவறு மனத்திலன்பு வளர்தரக் கருணை யாலெங் - *
குடிமுழு தடிமை கொள்ளுங் குரவனைத் தேடுகின்றாள். (௫௮)

அக்கமாதேவி துறவுகதி முற்றிற்று.

ஆ. கதி. ம இ - திருவிருத்தங்கள். ருாகூம.

## பதினொன்றாவது

# கொக்கிதேவர்கதி.

(வேறு)

அருள்செயு மல்லம னநி மிடப்பெயர்
குரவனை மெய்யொடு கலந்து கொண்டு தான் *
பரவுறு மடியர்தம் பவந்துறந்து போய்த் *
திரிதரு நிலையினைத் தெரிந்து செப்புவாம். (௧)

சீர்நிலை யல்லம தேவன் ருல் கொளுங் - *
கார்நினை மயிலெனக் கருதித் தன்னையே - *
பார்நிலை மிசையமர் பத்தர் தம்மையா - *
ளோர்நினை வொடுநடந் துலாவு நாள்களுள். (௨)
ஒன்றொரு நாளொரு திசையி னேகருட் *
குன்றனை யாளொரு கோலங் கொண்டுதான் *
சென்றன னவனெதிர் சிறந்து தோன்றிற்று *
மன்றன்மென் மலரிள வனமொன் றாயிடை. (௩)
சிறுபொழு தைத்திலுந் திரிவிலாத பே - *
ரறுபொழு திலைமிக மலிந்து தேன்சொரி - *

நறுமலர் நிறையுமந நந்தனத் துணைப்.
பெறின்மக பதிவளம் பெறவு வந்திடார் (௪)

படிமிசை தவம்பல பயின்று நொந்தவர்
வடதிசைக் கைலையின் மருவ வேண்டலிக்
கடிமலர்ப் பொழின்மணங் கலந்த தென்றல்வந்
துடன்மிசை தவழ்தர லொன்று முன்னியே. (௫)

கண்ணிறை மலர்பல கண்டு கண்டுபோ
யுண்ணாறு நறுமது கொள வுழன்றிடு
மெண்ணறு மளியின மிரையுந் தன்மையாற்
றண்ணாறு நந்தனம் வண்டின் சந்தையே. (௬)

குறைவற வளிப்பவன் கொக்கி தேவனென்
றறைதரு பெயரினா னனைய னாயிடைத்
திறமுறு செயலினைச் செய்து நின்றனன். (௭)

நின்றவன் றனையரு ணினைந்த நெஞ்சொடு
சென்றன னல்லமதேவன் கண்டிவன்
புன்றொழில் விடவரும் பொருளுணர்த்துவ
வென்றரு ளடைந்தைய சரண மென்றனன். (௮)

தானெதிர் நிமலனைச் சரணெனத் தொழாத்
தேனலர் வனத்தனின் செயலி யாதுநின்
மேனியின் பெயரொது விளம்பு கென்றனு
ஞானநல் விளக்கனா னவிறன் மேயினான். (௯)

பத்தர்தம் மனைதொறும் பத்திப் பிச்சைகொண்
டெத்திற வினையுமின் றிருப்ப னல்லம
னுத்தம வென்பெயர் பெயருனக் கெனென்
றத்தனும் விளவத்தன் பெய ரறைந்தவன். (௰)

அருங்குரு லிங்கசங் கமத்திற் காகமெய்
வருந்துறு தொழிலற வறி திருப்பவ
னருந்துறு பிணமென வுறையு மாற்றநீ
தெரிந்திலை யோவெனச் செப்பன் மேயினான். (௰௧)

(வேறு.)

எய்தற்கரிய யாக்கைதனக் கெய்திற் மறன்றா லதுகொண்டு, செய்தற்கரிய வறங்கள்பல செய்து துயர்கூர் பிறவியினின், றுய்தற்கொருமைபெறவெண்ணு துழல்வோனுடம்பு பொற்கலத்திற், பெய்தற்குரிய பால்கமரிற் பெய்தகொக்கு மென்பரால். - (யஉ)

பின்போலழியு முடல்கொடுநல் வினைசெய் தழியா வுடம்பெய்தி, யின்போடமர்த லாயிருப்ப யாக்கை வருந்து மென்றெண்ணி, யன்போ டறஞ்செய் திளையாம லருந்திவாளா விருக்குமவன், றன்போன் மருளரிலை யென்றான் றண்பூம்பொழில்வைத் தளிக்கின்றான். (யங)

உரைத்தமொழியையல்லமப்பேருடையான் கேட்டுக்கைகுலைத்துச்சிரித்துவினை நல்லனசெய்து சிதையா வின்பம் பெறுவானேல், வருத்தலுறுமும் மலங்களிலொர் மலமாகிய வாணவத்தாலும், பொருத்தமுறுபே ரின்பநாம் புணரலாமென் றியம்பியே. - (யச)

தான்செய்வினையா லோருடம்பிற் சாருமின்ப மென்றனையவ், வூன்செயுடல மொழியவுட னொழியு மம்மெய் யழியாமல், வான்செய்பதத்தி லிருக்குமெனின் மாயைதந்த தன்றாகும், கான்செய்மலர்நந்தனஞ்செய்து கருவைத்தடைப்ப வெண்ணுவோய். - (யரு)

இன்பநனிசெய் நல்வினையி னிறப்பினிறப்ப வுடம்பினிடைத், துன்பமதுசெய் தீயவினை தோன்றுமத் தீவினைமாய்வின், முன்புசெயுநல் வினைவருமிம் முறையாலிரண்டுமாறிவரு, மென்பவுலகிலொண்பகலு மிரவுமாறி வருதல்போல். - - (யசா)

பறத்துக்கருமம்பலசெய்துபொருப்பையகழ்ந்திட் டெலிபிடித்தாங், கிறப்பச்சிறிய வின்னின்ப மெய்துமவனே நோவுமன், மறுத்துச்செயல்க ளனைத்தினையும் வாளாவிருந்து பேரின்பம், வெறுத்தக்கவனே மருளன்யார் பேசுகென்றானெம்பெருமான். (யஎ)

பொறியிற்புறத்து மனஞ்செல்வித் புலனேதோன்றியிடுமகத்திற், செறியக்கரணம் பாரநந்த சிவமேதோன்றுஞ் சிவந்தோன்ற, வறிவிற்பாரந்த விடயமய மாகுமுலகந்தோன்றாமற், பிறவித்துயரக்கடல் கடந்து பேரின்பஞ் சார்குவரொன்று. (யஅ)

கன்றாற்காணக் காட்டியிவன் கருத்தைத் திருத்துவே னென்ன *
வென்றாக்கருணைக் கடலனையா னிவனை யகற்றியென் றுலாய்ப *
நன்றாம்பெருமை நன்றென்று நவின்ற நிலத்தை யகற்றிற்றான் *
பன்றாற்சிறந்த பொறிவண்டு பாடிமலர்ப்பூம் பொழிலுடையான்.

தொடலுஞ்செம்பொற் சிகரமொன்று தோன்றச்செய்யுட் பொருள்போலக், கடிதினகழ்ந்து புகுந்ததனுட் கண்டார்நிலத்தை யகழ்நதிட்டு, மிடியன்கண்ட பொருள்போல விடையம்புறத்துக்காணாமல், வடிவுஞ்சிறிது மசையாமல் வசம்நீறிருக்கும் யோகியையே. உ௰

கையிற்சிவ லிங்கத்தின்மேற் கண்கள்வைத்திட் டெலும்பலான் *
மெய்யிற்றசையொன் றின்றியே மேவும்புனிதன் றனைநோக்கிச் *
செய்யசெய லிலாதசெயற் சிவயோகியைக் கண்டனையோவென் *
றையத்தடைந்த வவனறிய வறிவித்துயரல் லமதேவன். (உ௧)

கடலின்விழுந்து துயர்பவர்க்குக்கலமொன்றருகு வந்ததெனக் *
கெடலில்பரம குருவெனக்குக் கிடைத்ததாவா வற்புதமென் *
றுடலம்விதிர்ப்பக் கண்கணீரொழுக வுருகித்தொழு தனனால் *
விடலின்மரபிற் குருசீடவிதியை விளக்கவுளங் கொண்டு (உ௨)

காத்தங் கண்ட விரும்புபோற் கண்ட பொழுதே யறிமிடன்ற *
மேனந்தனுஞ் செங்கைச் சிவலிங்கமெங்கள் பெருமானங்கைமலர் *
போந்தங் கிருந்த ததுபொழுதிற் புனிதன்சிவகலைதானுஞ் *
சார்ந்தங் கிருந்த சிவலிங்கந் தன்னோடவன்பாற் சார்ந்ததால். (உ௩)

வந்து பரம சிவலிங்க மருவப் பெறுமல் லமன்றனையு *
மந்த விமலலிங்கமுட னடைந்தஞான குரவனையுங் *
கந்த மலர்நல் வனமுடையான் கண்டுமகிழ்வுற் றிவர்பெருமை *
சந்த மறைதேர் நான்முகனுஞ் சாற்றற் கரிதென் றறைகுவான். உ௪

நின்றாற் கண்டேன் சிவலிங்கநிஷ்டை ஞானயோகிதனை *
முன்னாட் கருமமனைத்து மினிமுடித்தேன் ஞானநிலைநின்றே *
னுன்னாற் செய்யப்படுமுதவிககுதவி வேறுநெடுந்தகா *
யென்றாற்செய்வதொன் றுளதோவெழிலிக்குதவியார்செய்வார். உ௫

ஐய நினையு நின்காத்தி னடைந்த சிவலிங் கத்தினையும் *
பொய்யில் குரவன்றனையுமொருபொருளென் றறித்தேனின்றென்று

செய்யகமலத் திருவடியிற் சென்று தொழுதல்லமநாம - *
மெய்யமெனதிர் நின்றனபிறுஞ்விளம்பும் வணங்காவல னன்றே (உ௬)

என்னை யறிவித்ததுபோ லிவ்விஷ்டலிங்க மகம்புறமு - *
முன்னி யிருக்குநெறி யினைநின்மலர்த்தாள் பரவுமடியார்க்குப் *
பன்னியுணர்த்திச் சரமாகிப் பாரிற்சரிப்பா யெனத்தொழுதான் *
றன்னினிலத்தினைரொல்லாத் தரும்பேரின்பம்பெறநினைந்தான். உ௭

கொக்கிதேவ னிரந்தமொழி யொண்டுகிள ரல்லமதேவன் - *
றக்கபெரியோர் தமக்கியல்பு தாம்பெற்றுள்ள பேறெல்லா *
மிக்கவுலகம் பெறுகவென வேண்டிக்கோட லெனப்புகழ்ந்து *
செக்கர் மலர்ப்பூங் கைகளாற் றீண்டித்தழுவி யருள்செய்தான். உ௮

ஆங்கைச்சிவலிங் கத்தினிடை யமைத்த நோக்கு நெஞ்சகமுந் *
தங்கச்சிவயோ கத்தினையே சார்ந்தங்கிருந்தா னேவியப்போன் *
மங்கைகிடந்தந் தருளினோன் மலர்த்தாடகிடு வணங்கிப் *
பொங்கப்புரந்த தவத்தால்மெய்ப் பொருளாசிரியற்கண் ணுற்றான்.

அடியர் வேண்டிற்றேபுரியு மல்லமப்பே ரெய்பெருமா - *
னடியவிழிக ளருள்சுரப்ப நிமலலிங்கங் கரத்தேந்திப் - *
படியிலரிய தவஞ்செய்யும் பதிதருள்ளங் களிகூர - - *
வடியவிளமாத் தழைப்பவரு மந்தாநிலப் போற் சரிக்கின்றான்.(௩௰)

கொக்கிதேவர்கதி முற்றிற்று.

ஆ கதி-௰௧ இ-திருவிருத்தங்கள். ௬௱௨௰.

* * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * *

## பன்னிரண்டாவது-

# முத்தாயியம்மைகதி.

(வேறு)

கண்டிலே னச கண்ணனை யென்றனுர் - *
கொண்டு வாடுங் கொடியிடை யாடியர் - *
விண்டு போக வினாந்துவந் தல்லமன் - *
பண்டு கூறும் பரிசு விளம்புவாம். - (௧)

பொடி யணிந்தெழில் பொங்குறு மல்லம - *
ணடியர் தங்க ளகத்திற் றுயரினை - - *
யுடை யிழந்த வொருவன் கரமெனக் - *
கடி தடைந்து களைந்தருள் செய்யுநாள். (௨)

மறைத் திருந்த மலிசிவ பத்திமைப் - *
புறத் தறிந்த பொழுதே யுடம்பினை - *
வெறுத் தகன்று வெளியுற வாயினு - - *
ணறுத்த பந்த வசகண மென்னவே. - (௩)

அறைந்த தூயவ ணங்கவு பாதிபோய் - *
நிறைந்த நீர்மை நினைந்திலள் போயுபி - *
ரிறந்து போயின வென்னைத் தளர்ந்துடன் *
பிறந்த மாது பெரிதுள மாழ்கியே. - (௪)

புலம்பி னைந்திருக் கின்றவப் போதினி - *
லிலிங்க ரூங்கர முந்திகழ் வெய்துற - *
நலங்கொ ளல்லம னன்னணின னன்னணுங் - *
கலங்கி நின்றவக் காரிகை கண்டனள். - (௫)

கண்ட போதச கன்னனைக் காண்கிலாள் - *
கொண்ட பீழை குறைய வழுதடிப் - *
புண்டரீகப் புதுமலர் வீழ்ந்து கண் - *
மண்டு நீருக வாய்விட் டரற்றினாள். - (௬)

பாவியேன் முகம் பார்க்க வொண்ணுதென *
வாவியாமச கன்னண னகன்று செய் - *
நோவெலாமிவ ணுறாக்க வருளினான் - *
மேவினா யென மீண்டும் வணங்கினாள். - (௭)

வணங்கு மாதின் மலர்முக நோக்கியே - *
யணங்க னாய்நல் லசகணன் றன்மையை - *
யுணர்ந்திடாம லுளைத லுணர் வுளார்க் - *
கிணங்கு றாதெதன் றெந்தை யியம்புவான். (௮)

அழிவிலானை யழித்தன னென்று நீ - *
விழியி னூண்மிகு வெள்ளம் பெருக்கினை - *

கழிவி லாதவர காயங் கழிந்தபின்
றொழிவி லாம லுளமெனி வார்கள்போல் (௯)

சச்சிதா நந்த சங்கர னாகவே
யச்ச நீங்குபு தன்னை யறிந்தவன்
றுச்ச மாந்துயர் தோய்மலி யாக்கையி
யிச்சி யானதை யானென வெண்ணியே (௰)

ஒண்ட லாக்க ளொழிவி லுருளுருக்
கொண்டடுத்த குரு வருளாற்றனைக்
கண்ட மெய்த் தவன் காயந் தனையன
மூண்ட நெட்டிலை யொப்ப விடுப்பனால். (௰௧)

படியில் வந்த பரம குரவனாற்
றடை யறும்படி தன்னை யறிந்தவ
னுடல் விரும்பொழு தொங்கொரு மண்மயக்
கட முடைந்தவா காய நிகர்ப்பனால். (௰௨)

பந்த பாச முழுதும் பரிந்திட
நந்து மோர்சிவ ஞானி நரர்வினை
சிந்து மாறு செறிந்த வுடம்பு தான்
வெந்த தூசின் விழியெதிர் தோன்றுமே. (௰௩)

யாவுமாகி யிருக்குஞ் சிவத்தொடு
மேவுஞான விழியுடை யான்றனக்
கோவுமாறி லுறவு பகை யெனும்
பாவமோ விலை யென்றறி பாலையே. (௰௪)

யாக்கை தாமென் றிருந்தழி கின்றவ
ருக்கிலாவறி வாகியுடம் பொடு
தாக்கிலா தவர் தம்மையுந் தாமென
நோக்குவாரவ ருண்மையை நோக்குறார். (௰௫)

கந்த னாடகக் கோல நடிப்பினைப்
பார்த்து வாய்மையென் றெண்ணிலர் யாருளா
ரேத்து ஞானிதன் யாக்கை நடிப்பினை
யோர்த்து மாயவ ருண்மையென் றுன்னுறார். ௰௬

அறிந் திடாம லசகணன் றன்மையை - *
யிறந்து ளானென் றிரங்கினை யன்னைநீ - *
மறந் திடாயிம் மதியென் றணல்சொல - *
நிறைந்தஞான முத்தாயி நிகழ்த்துவாள். (௰௭)

அரவின் காலர வன்றி யறிப்வர், - - *
தரையினில்லை யசகணன் றன்னைநீ - - *
தெரியி னன்றிச் சிறிய னறிவலோ - *
பெருமை யான்செய் பிழைபொறுப் பாயென்று.

(வேறு)

பங்க லிருந்த பதிக் கருள்செய்து - - *
கங்கை யடைந்த கணக்கென வென்பா - *
லிங்குற வந்தனை யெங்குடி யுள்ளார் - *
தங்கட் வந்தரு தன்மையி னென்று - (௰௯)

வந்தனை செய்து வழுத்தி முனின்று - *
பந்த மகன்ற பதம்பெறும் வண்ண - *
மெந்தை யியம்பி யெனக்கருள் செய்யென் - *
றந்த மடந்தை யறைந்தன ளன்றே. - (௨௰)

தேசிக னல்லம தேவன் மகிழ்ந்து - *
பாச மகன்று பரம்பொருள் காணு - - *
நேச மடைந்தனை நின்னை நிகர்ப்பார் - *
காசினி யிம்மிசை கண்டில மென்று. - (௨௧)

பிறப்பொரு கோடி பிறந்து பிறந்து - *
புறக்கரு மங்கள் புரிந்திடி னும்பொய் - *
மறப்புறு மாணவ வல்லிரு ளின்றிச் - *
சிறப்புறு முத்தி செறிந்திடு வாரோ. (௨௨)

மரிட் பொடு திப்பு மறிக்குது மென்று *
கருத்லை வெளிக்கரு மத்தின் விடுத்து - *
விரிக்குத னெய்யை விடுத்தெரி கின்ற - *
நெருப்பையவிப்ப நினைப்பதை யொக்கும் (௨௩)

மட்டற வோடு மனத்தை நிறுத்திக் - *
கட்டுதல் வீடு விடுத்திடல் கட்டென் - *

றெட்டிய பண்பி னுளைத் தலமப்பேர் - ✻
சிட்டன வட்கருள் செய்தன னன்றே. (உச)

தத்துவ முற்று மயக்குவ தள்ளி - - ✻
மெய்த்த தனைப்பெற வேறு கொடுத்தான் ✻
பொய்த்துறு குப்பை கிளைத்தொளி போங்கு ✻
முத்தை யளித்தென முத்தை தனக்கு. (உரு)

வீடு விரும்பி வெறுந்தில ன் மெய்யைத் - ✻
தாடரு மொண்குரு வன்றனை யெங்கு - ✻
நாடி யுழன்றில னுறுய வெல்லைத் - ✻
தேடி யடைந்தருள் செய்தனை யென்று. (உசா)

அல்லம னென்னு மருட் குரவன்றாள் - ✻
புல்லி வணங்குபு பொற்கொடி யன்னாள் - ✻
செல்ல லகன்று சிதம்பர மெய்தி - - ✻
யெல்லையி லின்பொ டிருந்தன ளம்மா. (உஎ)

முத்தாயியம்மைகதி முற்றிற்று.

ஆக கதி- ௰உ இ - திருவிருத்தங்கள். சாசஎ.



## பதின்மூன்றாவது-

# சித்தராமையர்கதி.



(வேறு.)

காமரு சித்த - ✻
ராம னிடத்திற் ✻
போமனல் சொற்ற ✻
சீர்மை யுளாப்பாம். (க)

கரும யோகமுங் ✻
கிரியை யாவையும் ✻
மருவி ராமன்வாழ் ✻
புரியை மேவினன். (ங)

செல்லல் களைந்து ✻
நல்லறி வின்பந் ✻
சொல்லுவ னென்று ✻
மல்லம னென்பான். உ

வானி யாலயங் ✻
கானி ராமனை ✻
ரேவ லாளர்செய் ✻
தேவி லாமையை. (ச)

பார்த்தரு ளண்ணன் * இல்ல மக்னறிவ் *
மேக்தவ ராமன் * வல்ல லடைந்தா - *
வார்த்தை யறிந்த * னல்ல பசும்பொனி *
கூத்தின னென்றே. ௫ வல்லியு வந்தான். (எ)

பேரறி வன்றுன் * என்று நினைந்து - *
சார விருந்த - * நன்றுற வாவி - *
ஊரினு மில்லென் * பொன்றகும் வார்பாற் *
றுச விகழ்ந்தே. (அ) செய்றிது சொல்வான்.

(வேறு.)

ஒட்ட ராமனு ளத்தினி - - *
விட்டம் யாதுகொ வித்தொழின் - *
மூட்டி லாமன்மு யன்றனன் - - *
கொட்டி வீழுயி குத்தலபோல் - (௯)

விழற்கிறைப்பவி டுத்தல்போற் - - *
ஒருழிற்கு ளெய்த்துறு தொழினுடைம - *
யிமைமக்க விட்டதெ னென்றிட - - *
மொழிகக வுற்றவ னேறினான். - - (௰)

சாந்த னேறிய தாழ்மொழி - - *
காய்ந்த வேலிரு காதினும - - *
போந்த போன்று புகுந்தன - - *
மாந்த ராகுல மன்னினார். - - (௰௧)

அறமழித்தனை யன்றியு - - - *
நெறிய றக்குரு நிந்தனை - - - *
பெறவு ளாத்தனை பித்தவென் - - *
றுறவு ருத்தன ரொட்டலர். - - (௰௨)

- - *
சுட்ட னென்றுகொள் சித்தனைத் - - *
துட்ட வென்று சுளித்தனர் - - - *
வெட்டிருந்தட மேவினோர். - (௰௩)

(வேறு.)

மெய்த்தட மகழ்பவர் வினையை யன்றியே *
சித்தர்தஞ் செயலொரு சிறிது மின்மையான் *
மத்தர்நுங் குரவனே மன்னணி னும்மினு - *
முத்தமவொட்டனென் றுரைத்துமெய்ம்றனன். ௰சு

நிகழ்ந்தல இடைநிலை நிற்கு நல்லற - *
முகந்துசெய் பவன்நினை யும்ப னேயெனப் *
புகழ்ந்தவர் புண்ணியர் பொருமை யானிழித் *
திகழ்ந்தவர் நரகரொன் றிசைப்பர் நல்லவர். (௰ரு)

மறவினை யுடையனை மாற்றித் தூயநல் - *
லறவினை யுடையனை யறிந் திட்டன்னரோ - *
டுறவினை யடைந்திலை யொப்பக் கண்டறத் *
துறவினை யுளேயென வொட்டர் சொல்லினார். (௰சா)

ஓங்கிரு வினைகளு மொப்பக் கண்டவர் - *
தாங்களென் றனையொரு தமரிற் பேணுவ *
ராங்கவை யிரண்டையு மடைந்து போயுழ *
னீங்களென் றனையுணர் நெறியி லீரென்றான். (௰எ)

எனக்கற வினையுமி லென்று கூறினு - *
யுனக்கொரு கதியிலென் றுண்மை கூறியே *
னைத்தனர் நிலனசழ் கிறியர் யாவருந் - *
தனக்கிணை தானெனுந் தம்பிரானையே (௰அ)

முற்றிய கல்வியின் மூடர் நீவிர்நுங் - *
கற்றறி மூடனைக் கரைமி னென்னவ - *
னுற்றன னெனிலவ னுணர்வுஞ் சொல்லினு - *
விற்றென வுணர்வமென் றெந்தை கூறினான். (௰௯)

சேடனும் புகழ்வுறுஞ் சித்த ராமனை - *
மூடனென் றுரைத்தவம் மொழிக யற்தொடத் *
தோடருங் கொட்டினோர் சிற்றத் தாய்பெனு *
நீடுவெந் தழல்சொரி தெயற் றிகர்த்ததால். (உ௰)

இறக்கின ரழுக்குடை யெயிறு மென்றன *
ருறுக்கின ரதிர்த்தன ருயிர்த்து மீசையை *

றன்-மெய்த்தெரியினெனக்குநீயினியனெனப்பெருங்கருணைவெள்ளங்
கூற-வுய்தலிலெலம்பிழைபொறுத்திட்டடித்தரியவானமுதமூட்டுகின்
றாய்-கைதருசெம்மணியனையாயாள்செய்வதே துள துகைம்மா
றென்று. - - - - - - - (௫௭)

முற்றுமருள்செய்துநீயானறியவேண்டுபொருண்மொழிதியென்று *
பற்றுடலநசைதீர்ந்துகோரக்கனிற்பவகுன்பருவங்கண்டு - *
கற்றறியுமறிவிலுலநிவரியபாஞ்சோதிகருணைகொள்ளப் - *
பெற்றதிருவுளமகிழ்வுற்றன்பொடுகேண்மதியென்றுப்பேசலுற்றான்

இருந்தபடிகுகேசனைநீயறிவையெனினின்பிறவியெனுநோய்தீர்ந்து
பொருந்துறுவைபேரின்பமென்றமலன்கூறவவன்போற்றியெந்தா
ய்-பரிந்தருள்செய்குகேசனெனுமொழிப்பொருளேதுகூறப்படு
வான்யாவன்-றெரிந்துணரவருள்செய்வாயென்றுதொழவெம்பெரு
மான்செப்புகின்றான். - - - - - (௫௮)

குகையிதயமதன்கணமரிறைபீசனென்றுபொருள்குறித்துக்கொண்
மோ-நிகழனையகுகேசமொழியுடையன்யான்றனெனவே நிமலன்கூ
ற-வகம்மிழமுகமலர்ந்துசித்தனறைகுவனீயேயாகிலுன்றன் - *
முகையவிழ்மென்மலர்க்காத்திற்சிவலிங்கங்கொண்டதென் கொன்
மொழிதியென்றான் - - - - - - - (௫௯)

பிறந்தபயன்பெறவுலகோனைக்கண்டுகொண்டுமனம்பிறழ்தலின்றிச்
சிறந்தசிவலிங்கமலர்க்கரங்கொண்டுபூசனைதாஞ்செய்யவேண்டி *
நிறைந்தவெனதுருவாகுமிக்குறிகைக்கொண்டனன்யானீங்காதென்
று-மறிந்துதெளிகுதிமனமென்றருள்செய்தெங்குருதேவனறைய
லுற்றான் - - - - - (௬௰)

போதகனாகியகுரவனெஞ்ஞான்றுநற்கருமம்புரிகவென்று - *
வேதமுதலாகியநூன்முழுதுமொருங்கொருவந்தம்விதித்தலாலே *
சாதகனாகியபருவமாணுக்கன்பாசவலிதணிக்கவல்லான் - மேதினிமே
லுடலொடுநற்செயல்விடுவதன்றியிடைவிடலாகாதால். - (௬௧)

என்றுதனதியலுணர்த்தியுடம்புநானென்றிருந்தவியல்புபோல-நின்
றலெனையுணர்ந்துநீசோகம்பாவனைகொண்டுநிற்பையாயிற்-பொன்
றலுறுவிடங்கலுழன்றனைநினைப்பப்போதல்போற்போமவிச்சை *

நன்றறிதியெனவறிவித்தனனெங்கோன்கோரக்கநாதன்றன்னை. (கூஉ)

ஞானகுருபரனருளாற்றனக்குரைத்த மொழிப் பொருளை நன்றறிந்தி-ட்டேனவடிவெஃபதாவிட்டுண்மையலாவனைத்தையு நீத்துண்மை கண்டு - தானதனையடைந்துதானதுவென்றுமொளகனறு தானேயாகி வானவருமறிவரியபெரும்புகழ்க்கோரக்கனவண்மன்னினனால். (கூரு)

கோரக்கர்கதிமுற்றிற்று.

ஆ - கதி - யகூ க்கு திருவிருத்தங்கள் • கூ௱௪௪ •

❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖

# இருபதாவது - முனிவர்கதி.



(வேறு.)

பனிவரைமகளொடுபவளவார்சடைத் *
தனிவரையமர்திருச்சயிலநீங்கியே - - *
துனிவரையல்லமன்சுருதிமெய்ப்பொருண் - *
முனிவரையுணர்த்தியமுறைமைகூறுவாம். (க)

அருந்தவமுயன்றகோரக்கற்கம்முறை - *
விரிந்தறிவுருவமாமெய்ம்மைத்தன்மையைப் *
பரிந்தருளமலனப்பாலுமுத்தரம் - - *
பொருந்துநர்தமக்கருள்புரியப்போயினான். (உ)

நல்லனதீயனநாடொறுந்துகொள் - - *
வல்லழலெனவருண்மழையெனப்படு - *
மல்லமனெதிர்ந்தவாறமுளாரற - - *
மில்லவொருதறிவியற்றினனோ. - (௩)

யாவருந்தனதருட்கேற்றவாறெனப் - *
பாவவன்றளையறப்பரிந்துநன்னெறி *
மேவவந்தருள்புரிவிமலனுயிடை - - *
மாவழங்குறுமொருவனத்திற்போயினான். (௪)

அக்கொடுவனத்தெதிரங்பெங்கின்றதுட் - *
புக்கறிகிலாவொருபுளினன்கூன்புறக் - *
கொக்கெனநாடொறுங்கொலைகுறித்தவன் - *
கைக்கொடுமரமொடுகடிதுதோன்றினன், (ரு)

அன்பனுக்கண்ணிடந்தப்பும்வேடனுக் - *
கின்பமீகுதல்புகழ்க்கேற்றதன்றுநான் - *
வன்பனைத்திரியுமிம்மறவற்காப்பலென் - *
றென்பொலாமணிமனமிரங்கிற்றென்பவே. (சா)

நல்லறிவவனுளநடுதற்கொப்பிலா - *
வல்லமன்வினையறவருட்கண்வைத்தனன் - *
கொல்லையின்விதையிடக்கொழுப்புகாமுனி - *
புல்லெரிவுறவழற்போகட்டென்னவே. - (எ)

மேவுதீவினையெலாம்விளிந்துதூயனாய்ப் - *
பாவியேனுய்வகைபகர்தியென்றனன் - *
மாவலால்வழங்குறுவனத்தில்வேட்டுவன் - *
யாவர்தாமிறையருளெய்தினுய்ந்திடார். - (அ)

அறிவெனும்வேலினாலைம்புலன்களா - *
மறியினமருளெனும்வலையைத்தப்புறு - *
தெறிகுவையெனினினைக்கில்லைத்துன்பெனு - *
நெறியினைவழுவற்நிமலன்கூறினான். - (கூ)

அறிவொடுமனஞ்சிலையம்பதாகநான் - *
குறியெனவெய்வையேற்குமரநின்றனைப் - *
பொறிமதிலிலங்கைமுன்புரந்துளான்றலை - *
பறிபடவெய்தவன்பணியுமென்றுமே. - (ய)

இப்பரிசெறுழ்வலியெயினனுய்வகை - *
செப்பிநன்னிலையருள்செய்திருத்தியே - *
யப்புறமருளுடையமலன்போம்பொழு - *
தொப்பறுதவவனமொன்றுதோன்றிற்றே. (யக)

கோடமைகரிகளுங்கொடுமடங்கலும் - *
பாடமைபகைதவிர்பரிசினைதற் - *

மறையினுள்ளகருமமனைவினை - - *
வறியர்கொள்ளுதல்போலமதியறுஞ் - - *
சிறியர்கொள்வர்தெளிதத்துவமணி - - *
யறிஞர்கொள்வரணிகொளுஞ்செல்வர்போல். (௨௰)

என்றுகூறவிருந்தவரன்பொடு - - *
நின்றஞானநெடுந்தகைதாண்மிசை - *
யின்றுநீவரவெத்தவஞ்செய்தனை - - *
மன்றயாமெனவாழ்த்திவணங்கினார். - (௨௧)

மாயைதோன்றியஞான்றுமனத்தினை - *
மூயமோகமுடிந்திடச்செம்மலர் - - *
வாயினூற்றுருவாசஞ்சொலப்படுந் - . *
தூயனுமிவனென்றுதுதித்தனர். - (௨௨)

இன்னவாறிங்கிருந்தவரின்புற - - *
மன்னுஞானமறைமொழிகூறியே - *
தன்னைமேவுந்தலைமைபுரிந்தன - - *
னன்னைபோலுநம்மல்லமதேவனே. - (௨௩)

முனிவரர்கதிமுற்றிற்று.

ஆ-கதி-௨௰௫-திருவிருத்தங்கள்-௬௱௬௬.



# இருபத்தொன்றாவது-

# சூனியசிங்காதனகதி.

(வேறு.)

அல்லமனையறிதற்கோரறிகருவியாகவுஞ்னிச் - - *
சொல்லரியவெழுநிலைப்பொற்சூனியசிங்காதனமொன் *
றில்லையெனவில்லையெனுமெங்கள்குருவசவேசன். - *
மல்லலுறவினிதமர்ந்திவ்வுறுமொன்றவகுத்துரைப்பாம். - (௧)

ஒடுக்குமனம்வீட்டின்னெறிக்கொருதுணையாகும்புறத்து *
நடக்குமனநிரயவழிநடப்பதற்குத்துணையாமென் *
றிடக்கர்மனமடக்கும்வகையெமபிரானியம்பியவா *
றடக்கமனமூழுநெறியினருணந்திதலைப்பட்டான். (௨)

நில்லாதுபோமனத்தைக்கால்பிடித்துநிறுத்தியே *
யில்லாருமதிடமுதம்விருந்திடுநட்பதிஇப் *
பொல்லாதபுலனுகரப்புறத்துநிலைதடுமாறிச் *
செல்லாமலுடன்கொண்டுசித்திரமொத்திருந்தனனால் (௩)

நின்றமனங்கொண்டுதானித்தமாந்தனையுணர்த்த *
வென்றுவருஞானகுருவெனவெழுந்துவளர்காத *
லொன்றுமொழிவறநிற்பவுவப்பனலகிற்பொருள்வே *
றின்றியருணந்திபிரானெந்தைவடிவினைநோக்கி. (௪)

எவ்வுருவினொடுவருமோவெம்பிரான்றெளியகிலேன் *
செவ்விடவோர்தவிசமைத்துச்சேர்ந்ததன்மேலிருட்பவனை *
யவ்வியமில்லமனென்றறிவன்யானென்றுதுணிந் *
திவ்வுலகமுளமவியப்பவிதுசெய்தானருணந்தி. (௫)

(வேறு.)

ஆதியாதாரமாதியபதிக்கெண்பன்னிறந்த *
சோதியேழ்நிலைகளோங்கச்சூனியபீடமொன்று *
யோதுஞானுளம்வியப்பப்பொன்மணிபளிங்குகொண்டு *
சாதிநான்மறைகள்போற்றுஞ்சைவநாயகன்செய்வித்தான் (௬)

காரணவுபாதியேழ்மேற்கண்டிடுஞானிபோலச் *
சீரணிறுதயின்மீதுசென்றுகாண்யோகிபோலப் *
பூரணஞானநந்தப்போதகனிருப்புக்காண்பா *
னேரணிநிலைகளேழ்மேனிகழ்வெளித்தவிசமைத்தான். (௭)

களங்கமின்மதியம்போலக்கண்டவர்மனமலர்த்தும் *
பளிங்குசெய்நிலையுள்வந்துபார்ப்பவர்மெய்நிழற்போய் *
விளங்குதறன்மேற்றோன்றவெற்றெரிபகும்பொனாற்செய் *
துளங்கொளிநிலையைச்சென்னிசுமத்தல்போற்செய்தவொக்கும்

திருந்தியபளிங்குகொண்டுசெய்தவற்றிலையின்வாய்நல் - ✻
பொருந்துதனெறிகிலாராய்ப்புகுந்துகாண்மனிதரெல்லாங் ✻
காங்கொடுதடவிக்கண்டுகண்டெரியார்கள்போல - ✻
வருந்தியமனமகிழ்ந்தூவசவனைவியப்பரன்றே. - (௯)

நினைவினுலொருவன்செய்தநெடுஞ்சுளாலயமேயன்றி - ✻
வினையினுலுலகர்செய்துவிளங்கியமணிகட்பூ - - ✻
ளினையதோர்வமையாதலில்லையென்றும்பரெல்லாந் - ✻
தனையலானிகரிலாததவிசினைவியந்துநின்றார். - (௰)

அம்பராசனமியன்றவதிசயங்கோளாமுச்சுட் - - ✻
டம்பிரானடியராகத்தமையுளாரெல்லாஞ்சென்று - ✻
செம்பொனலியன்றவந்தச்சீர்கெழுபீடநோக்கி - ✻
யெம்பிரான்வசவதேவனிணையடிதொழுதிருந்தார் - (௰௧)

கணையிதுகல்விக்கென்னக்கற்றவர்பலருமேத்தத் - ✻
தணைமிசையமர்ந்திருந்தசாரதாபீடமேபோ - ✻
லுணைமனமிறந்ததாமிவ்வொருதனிஞானபீட - - ✻
மருடருகுருகேசனன்றியேறிடற்காமோ. - (௰௨)

இப்பெரும்பீடமேறியிருந்திடவல்லோனென்றும் - ✻
வைப்பெனும்படிமறைந்தெம்மனத்திருப்பதற்குவல்ல ✻
வப்பெருங்கருணைக்குன்றமாகுமல்லமனேயென்று - ✻
செப்புறுபரிசிலானுய்ச்சிந்தைசெய்திருந்தானந்தி. - (௰௩)

கணைபொருகங்கையாற்றிற்கண்ணிவைத்தரசவன்னம் - ✻
வருதலைநோக்கிநிற்கும்வாறுபோலிருள்விழுங்கிப் - ✻
பெருகொளிவிரிக்குஞானபீடமொன்றமையவாக்கிக் - ✻
குருபரன்வரவுநோக்கிக்கொண்டிருந்தனனெங்கோமான். ௰௪

வட்டினைப்புதுநீராற்றிலெதிர்கிழித்தேறவிட்டோன் - ✻
பாட்டுடைத்தலைவனன்பர்பலருநம்வசவன்றன்னை - ✻
நாட்டமுற்றடையுமாசானமக்குமாமென்றிருந்தார் - ✻
வீட்டினுக்கேற்றுஞ்சோதிவிருந்திற்குமுதவுறுதோ. (௰௫)

சூனியசிங்காதனகதி முற்றிற்று.

ஆக கதி-௨௧௫. திருவிருத்தங்கள்-௯௱௮௪.



# இருபத்திரண்டாவது-

# சூனியசிங்காதனத்திருவிருந்தகதி.



(வேறு.)

பள்ளம்புகுபுனல்போனெறிபடருஞ்சிவனடியா - *
ருள்ளம்புகுமருணந்தியிவ்வுலகோரறியாமற் - - *
கள்ளங்கொளுமனமோடுசெய்யணைமேலொருகருணை - *
வெள்ளங்கடிதேறுஞ்செயல்விருப்பாலெடுத்துரைப்பாம். (௧)

சிரளூடுறுகடலாடல்செய்செய்ந்நாடுடையுழவ - *
ராளூடுறுமொருகாவிரியறளூடுறுமுறைபோற் - - *
பரநாடுறுமடியார்வினைபுரியத்திரிகுரவன் - - *
வராளூடுறுபுருகும்பரவசவன்புறுவசவன் - - (௨)

பொன்னுணமைகதிர்வீசணைபுரிந்தீரறுபருவம் - *
பின்னுபினையான்செய்தொழில்பிள்ளைத்தொழிலாயிற் - *
றெற்நாள்வருமெனையாளுடையெம்மானறியேனென் - *
றுமன்னுவருதுயரோடுளமுளைந்தான்வினைகளைந்தான். (௩)

இவ்வாறமர்நாளோர்பகலெல்லையாளுடைவசவன் - *
செவ்வாறுசென்மனத்தல்லமதேவன்வரமேருன்றிற் - *
றவ்வாறதுநிகழ்வுற்றவனூர்வந்தனையொருநா - - *
ளெவ்வாறுணசெய்வம்பணியிறையுஞ்சொலவரிதால். (௪)

வலமாடினவிழிதோளருள்வசவற்கதிதூரஞ் - - *
செலுமாடவன்வருநாள்விழியிடமாடியசெயல்வாய் - *
குலமாதுளமெனவேமகிழ்கொண்டன்புநிறைந்து - *
மலமாயைகடரக்குஞ்சென்னவசவற்கிதுபுகல்வான். - (௫)

(வேறு.)

நற்குறிபலவுமிற்றைநாணிகழ்கின்றவென்பால் - *
வற்கலைமுனிவர்போற்றும்வசவநிகழ்ச்சியாளும் - *

பிற்பெறுபயன்யாதென்றுபெருந்தகைவினவநின்று, - *
சிற்பரமுணர்ந்தசென்னவசவதேசிகனுரைப்பான். - (௯)

ஐயவிந்நிமித்தந்தன்னாலல்லமற்காண்டையின்று - *
மெய்யுரையிதுகாணென்றுவிடுத்தனன்மருகனெங்கள் - *
கையுறமழுதனன்றான்கருதியபடிவிண்ணப்பஞ் - *
செய்யவுண்மகிழ்வுபூத்துச்செயல்செய்வார்க்குரைக்கலுற்றான்

உடம்பெனும்வனத்திநின்றவுயிரெனுங்கன்னிதன்னைத் - *
தொடர்ந்திசைமணத்தாற்சேர்ந்ததுணைவனல்லமனின்றெய்தா
மடைந்தருள்கல்யாணத்தையணியினென்றெற்றைகூற *
நடந்தனர்நன்றென்றன்னூர்நகரியோர்க்குணர்த்தினரால். (௮)

அலர்கதிர்ஞாயிறாருமணிநெடுந்தேர்க்கொடிஞ்சி - *
விலகுறவுற்றுக்காமன்மேலுறவொருகாணிற்பப் - *
பலர்புகழ்மணிமாடத்துப்பறக்குமொண்கிளியொழுங்கி *
லிலைநெருங்கியபசும்பூந்தோரணமிசையவார்த்தார். - (௧௦)

போதகக்குருநம்முருட்புகக்கொடிகட்டனன்றென் - *
றாதரவொடுமசைத்தாரவிர்கொடிமாடத்தும்பர் - *
சோதிதன்னிரதமென்றுஞ்சுழன்மெனநகுதல்போல - *
வீதியுளாடியோடுவிளங்குறுநிலைத்தேர்செய்தார். - (௧௧)

குங்குமநறியசந்தங்குழைத்ததண்பனிநீர்சிந்திப் - *
பொங்கெழின்மறுகனைத்தும்புதைசெழுஞ்சேறுசெய்தார். *
மங்கலமனைமுன்பந்தர்மணப்பந்தருண்மையாகக் - *
கொங்கவிழ்தழ்நறும்பூங்கோதைகடூக்கினரால், - (௧௨)

வயலிடஞ்சேர்ந்துநின்றவாழையுங்கரும்பும்பாளை - *
யுயரிளங்கமுகுமொன்றோடொன்றுநின்றுசாவித்தாமெல் *
லியருந்தொடைதோள்கண்டமெனுமுறுப்பழகிரக்குஞ் *
செயலில்வந்தடைந்தவென்னச்செழுங்கடைத்தலைமுனார்த்தார்

இலையினாற்பொலிந்தவாழைதொடையினாலெய்தும்பேறு *
முலையினாற்பெறுவமென்றுமுன்னிவந்திருத்தல்போலக் *
கலையினாற்சிறந்தவல்குற்கயற்கணார்நிறைகுடங்கள் - *
விலையினாற்சிறந்தசெம்பொன்வேதிகைமீதுவைத்தார். (௧௩)

மனத்திருளகற்றுநின்றமணிச்சுடர்வரவுபார்ப்ப - *
நினைத்தாவந்திருத்தல்போலநெடுமணிக்கதவவாய்தன் - *
முனைத்திருவிளக்குவைத்தார்முகிழ்முலைக்கருநெடுங்கட் *
டணிச்சிலைநுதற்பூங்கோதைச்சரிகுழற்றளிர்க்கைநல்லார். (௰௪)

அல்லமகுரவன்றன்னைப்பருணந்தியோடுகாணச் *
செல்லுவமென்றுசெம்பொற்சீர்கெழுவிமானத்தோடு *
மொல்லையினிலத்திழிந்தவும்பர்வாழ்மகளிர்போல - *
வில்லெலுமருங்குன்மாதரிருந்தனர்நிலத்தேறி. (௰௫)

திருநகரிதனையின்றுதிருந்தவேறலங்கரிப்ப - - *
நெருநனுள்ளனசழித்துநீத்தவையமரர்கோமா - *
னொருநகரலங்கரித்தற்குரியனவென்னினந்தி - *
பெருநகரணியின்மிக்கபெருமையார்கூறவல்லார். - (௰௬)

இன்னணமலங்கரித்தவெழின்மணிமறுகினூடு - - *
மன்னவர்மன்னனுய்யமந்திரிக்கிழமைபூண்டோன் - *
றன்னொருகுரவன்றன்னைத்தானெதிர்கொள்ளவேண்டிப் *
பொன்னவிர்கோயிலின்றும்புறப்படப்போதலுற்றான். (௰௭)

பதியுமப்பதியாற்காணும்பசுவுமப்பசுவிஞ்ஞானம் - *
பொதியுமைம்பாசந்தானும்பொருளெனவழக்கிற்கூறும் *
விதியுமப்பாசம்பொய்யாய்வேறறும்வீடுமோதி - *
மதிமயக்கறுத்தசென்னவசவனுமருங்குசென்றான். (௰௮)

எம்மடிமாகமுக்கணிறையவனடிமைபூண்டோர் - *
தம்மடிமாசுநீக்குந்தன்னொழிநெறிவழாத - - *
செம்மடிவாலமாச்சதேவனுமன்புதாயின் - - *
மும்மடியாகுநந்திமுதல்வனோடருகுசென்றான். - (௰௯)

சங்கரன்சடையிற்பாம்புந்தவழ்ந்தெதிர்கிடந்தபிள்ளைத் *
திங்களுஞ்செய்தவொப்புச்செங்கைமானவசமாகக் - *
கங்கையுந்திரையடங்கக்கானமுன்பாடியிசை - - *
கிங்கரன்றனதுபாங்கர்கின்னரப்பிரமன்சென்றான். (௨௰)

தண்டினர்கரகக்கையர்சடையருத்தூளனத்தர் - *
புண்டரநுதலர்கற்றோய்பூந்துகிலுடையர்நீல - - *

கண்டனைய கம்புறத் தாங்கண்டவர் வினையினீங்கித் *
தொண்டுறு நெறியினின்றோர் சூழ்ந்தன ரெண்ணிலாரே. (௨௧)

தோள்வலந் துடித்தகின்றுகுடரிலைவேற்புனைன்று - [பேம்
கோள்வலங்கொள்ளுஞ் செப்பொற் குன்றென மார்பி…ன்ன
வேள்வலங்கொண்ட நெற்றிவிட்டிறையருளாலென்றும் - *
வாள்வலங்கொண்ட சேனைமறவர் வாரிதிபோற் சூழ்ந்தார். (௨௨)

எங்கள் வாழ்வனைய நந்தி யெழுந்தருண் மறுகினூடு - *
மங்குல்வானிரவிப்புத்தேண் மணிநெடுந்தேர்ப் பைங்கிளிளை *
தங்கள் காற்றாட் குடைந்தாரிப்பரிதாகியோட. - - *
வங்கண் மாஞாலமெல்லாமதிர் தரநடந்தவம்மா - (௨௩)

ஆரவொடுமெண் சுமக்குமடுகளிறெட்டொடும்போர் - *
பொரவொருகளிறல்யானை போதுமென்றெண்ணிலாத - *
வீரவொடு புனைநிறத்தவீர்ங்கவுட் சிறுகட்டுங்கு - *
கரவளைவெண் மருப்புக் கடாக்களிறெழுந்தவன்றே. - (௨௪)

ஆனைமேற்கொண்டும் வாவுமாடல் வெம்பரியிவர்ந்துங் - *
கூனல்வேய் தொடுத்துஞான்றகுச்சுடைச் சிவிகையூர்ந்துஞ் *
சேனைகாவலரெண்ணிலார் சிலைமதம் கோலமென்ன - *
மானவேன்மன்னர் மன்னன் மந்திரி மருங்குசென்றார். (௨௫)

நலங்கிளர் மதன்குடைக்குநகைமணிக்காம்பிலென்ன [ந்த
விலங்குறு பசும்பொற்காம்போடெண்ணில் வெண்குடையெழு
புலன்களை வென்றவீரன் போகிய மறுகிலெங்கு - - *
விலங்கினையன்றிவந்த விலங்கின் வாலாடிற்றன்றே. - (௨௬)

மாயைதன் றோல்வியெல்லாமாதர்க்கும் வந்ததன்றே - *
நாயகன் றன்னைப்பற்றிநாம் வென்றிகொள்வமென்று - *
போயுறு தன்மைபோலப்புணர்முலைக் கருநெடுங்கட் - *
டேயுநுண் மருங்குன்மாதர் திரள்பலவெழுந்தவன்றே (௨௭)

பரிகளின் முழக்குமிக்கபல்லியமுழக்கும் பூட்கைக் - *
கரிகளின் முழக்கும்வீரக்கழலொடு செல்லும் வெங்கோ - *
ளரிகளின் முழக்குமாதரணிகளின் முழக்குஞ் செங்கைச் - *
சரிகளின் முழக்கும்விம்மித் தடங்கடல் போன்றவன்றே. (௨௮)

ஆடுவகவரியெங்குமசைவனசிவிறியெங்கு
மூடுவகுடைகளெங்குமுழங்குவவியங்களெங்கும்
பாடுவவிசைகளெங்கும்பாய்வனகரிகளெங்கு
மோடுவபுரவியெங்குமுயர்வனதூளியெங்கும். (௨௯)

கரிகன்மலையாதின்றகவரிகணுரைகண்மொக்குள்
விரிகுடைமகரமைகளிரர்விரூர்க்கும்வாளுகண்மீன்பாயும்
பரிதிரைமுழக்கமார்க்கும்பல்லியமுழக்கமாகப்
பொருகடலெனவெழுந்துபோயதுவசவன்சேனை. (௩௰)

(வேறு.)

இன்னவாறெழுந்திரளொடுநந்தியெம்பெருமான்
றன்னைநேர்குருபரனெதிர்சென்றவன்றனைச்
சென்னியால்வணங்குவனெனுமோகையாற்சென்றான்
றுன்னும்வானவர்தொகுதியும்வியப்பொடுதுதிப்ப. (௩௧)

அத்திறஞ்செலுஞ்செலவினையகங்குருட்டமணர்
புத்தர்கண்டிவனெங்கொலோவறிதெதிர்போதல்
பித்தனென்றுதம்மிறைவனைச்சொல்லுமிப்பேய
வெத்திறஞ்செயாவெனச்சிவசரணரையிகழ்ந்தார். (௩௨)

மன்னன்விச்சலன்பாலடைந்தருகரொம்மன்று
நின்னகர்க்கொருபுதுமையொன்றுற்றதுநீகே
ளென்னிமித்தமொன்றெய்தியதேகொடுநந்தி
தன்னிடத்தொருவனேவருமென்றெதிர்சாரும். (௩௩)

தண்டநாயகன்றோள்வலந்துடித்ததுதன்னைக்
கொண்டுதான்வருங்குருபரனென்றெதிர்கோடல்
கண்டவோர்களவிற்பெறுமடிசிலைக்கருதி
யுண்டுபோம்விருந்தினர்தமைத்தேடுதலொக்கும். (௩௪)

ஒருவன்வந்திடுமெனவெதிர்கடற்படையொருங்கு
பரவிவந்திடச்செலுமிவன்றன்னைநீபார்த்துப்
பொருவின்மந்திரக்கிழமைநல்கியவுனைப்போல்வா
ரரவின்வன்றலைப்படிமிசையிலையெனவறைந்தார். (௩௫)

அருகர்வாசகங்கேட்டலுமுளம்வியந்தடிகேள்
விழுகினுன்மிகுதண்டநாயகனுமெவ்விளைவு

கருதினன்கொலோவறிகிலமுடிவுறக்காண்பம்
வருகநீரிருமின்களென்றிருந்தனன்மன்னன். (௩௬)

தண்டநாயகன்றனதுளந்தங்குறத்தானத்
தண்டநாயகன்றம்மனந்தங்கியத்தலைவன்
றண்டநாயகன்றனயர்கட்குசமண்செருக்கழியத்
தண்டநாயகனெதிர்செலநினைந்தனன்பணிந்து. (௩௭)

என்னைக்காண்குவனெவ்வகைசெல்வீனுமென்று
முன்னற்கோவணமொடுவிரிகுஞ்சியுந்தோன்ற
நம்மைக்காண்குநர்பித்தனென்றெள்ளவென்றனக்குப்
பொம்மைப்போதுநல்வசவநாயகனெதிர்போனான். (௩௮)

(வேறு)

மருவிநின்றவரிவன்மருளனேயென
வொருவியிங்ககலகலெனவிலக்கினு
மொருவநன்கண்டிறையுருவுணர்ந்திலா
ருருவுகண்டெள்ளுநருணரவல்லரோ. (௩௯)

அல்லமனுயிடையாடலுஞ்ஞனியே
பல்லெழுவாயுடைப்பாலனுகுவன்
கொல்லிளவேறெனக்குமரனுகுவன்
வில்லெனவுடல்வளைவிருத்தனுகுவன். (௪௰)

விஞ்சையர்மகிழ்வுறவீணையொன்றுகைக்
கஞ்சமென்மலர்கொடுகானம்பாடுவ
னஞ்சனவிழிமணியரிச்சிலம்படி
வஞ்சியர்மனமயல்வளரவாடுவன். (௪௧)

இந்திரனிவனெனயானைமேற்கொளா
வந்தொருபுடைநரர்மருளத்தோன்றுவன்
பைந்தொடிபெயர்தருபாணிபோலவே
பந்திமுன்முடங்குளைப்பரிநடத்துவன். (௪௨)

வானிடைக்கண்டனன்மனையிற்கண்டனன்
சேனையுட்கண்டனன்றெருவிற்கண்டனன்
யானெனக்கடிநகரொங்குந்தோன்றுவன்
ஞானநற்கண்ணினுற்காணுநம்பனே. (௪௩)

ஆடுநர்தம்முடனாடுநல்விசை - *
பாடுநர்தம்முடன்பாடுமென்மலர் - - *
சூடுநர்தம்முடன்சூடும்வாள்விதிர்த் - *
தேடுநர்தம்முடனேடும்மல்லமன். (௪௪)

பொருவிலாவளநகர்பொருந்துமானிடர் - *
வரைவிலாவாடலிவ்வகைசெய்கிற்பவ - *
ரொருவரோவலர்கொலோவுணர்கிலோமென *
வெருவிறரல்லமவ்விநோதநோக்கியே. (௪௫)

மண்ணிடைமறைவுறாநிதியவைப்பினைக் - *
கண்ணிடுமஞ்சனக்காரன்காண்கைபோ *
னண்ணிடுமுணர்வுடைநந்தியெம்பிரா - *
னண்ணலையறிந்தனனையமின்றியே. - (௪௬)

உடம்பெலாமுள்ளமாயுருகிக்கண்கணீ - *
ரடங்குறுதொழுகமெய்விதிர்ப்பவன்பினாற் *
றொடர்ந்தெலாவுயிரையுந்தொண்டுகொண்டரு *
ணெடுந்தகாயருளெனநிலத்திறைஞ்சினான். (௪௭)

தண்டநாயகனிலந்தண்டிற்றாழ்ந்தெழத் - *
தொண்டராயவனெதிரூஉனிருதொலாங் - *
கண்டுநீர்விழியுகக்கசிந்தவன்பினு - *
லண்டநாயகன்றிருவடியிறைஞ்சினார். - (௪௮)

நந்திதனன்பையுநந்திபால்வரு - - *
மெந்தைதன்னருளையுமெஞ்சொல்வாமெனச் *
சிந்தினர்மலர்மழைதேவர்யாவருந் - *
துந்துமியதிர்த்தனர்தொண்டரார்ப்பவே. (௪௯)

மயலிலாநங்குருவசவன்வாழ்தரு - *
மியலினாலல்லமனெண்ணிவந்தருள் - *
செயலினாலடியவர்திரள்களித்தலாற் - *
கயிலையேவளங்கெழுகல்லியாணமே. - (௫௰)

தெரியநற்றண்டநாயகன்றன்செய்கையும் - *
பெரியவக்குருபரன்பெருமைதன்னையும் - *

கரியமெய்ச்சமணர்தாங்கண்டுமன்பில - *
ரரியவற்றரிதழுக்காறுவெல்வமே. - (௫௧)

தந்திரமுடிவெனுஞ்சைவதேசிகன் - *
வந்தெதிர்தனதுதாள்வணங்கினனொடு - *
செந்திருமகளுலாந்தெருவுட்போகியே - *
நந்திதன்மந்திரநணுகினனரோ. - (௫௨)

தேவருமுனிவருஞ்சித்தராதிய - - *
யாவருமிதனியலின்னதென்றுளத் - *
தாய்வருநிலையுடையம்பராதன - - *
மூவருமடிதொழுமுதல்வனோக்கினான். - (௫௩)

அசைவறுமறிவுருவாகுமல்லமன் - - *
றிசையுறுமணியணைச்சென்னிமீமிசை - *
வசையறுவழிநடைவசவதேசிக - - *
னிசையமருலகிடையேறவேறினான். - (௫௪)

கூறருமொளியுடைக்குதிரைத்தேரினான் - *
வேறொருமணிமயவெற்பிவர்ந்தெனத் - *
தேறருமணைமிசைதேசிகோத்தம - - *
னேறலுமலர்மழையிழிந்தவென்பவே. (௫௫)

முரசொடுபல்லியமுழக்கெழுந்தன - *
துரிசறுமடியவர்தொகுதிகைகுவித் - *
தரகரவெனுமொலியண்டகூடமட் - *
டொருகணமொடுங்குமுன்னோடிற்றென்பவே. ௫௬

(வேறு.)

முந்தனிலைமுதலாமூவிருநிலையின்மூலமாமுதலவாதார - - *
விதழவிழ்கமலப்பொகுட்டினுணின்றவிலிங்கமோராறெனநின்று *
றாதன்மிசையிலகுநிட்களம்போலநுவன்றவேழாநிலையாகு - *
மந்தன்மிசையமலனல்லமதேவனமர்ந்தனனமரரும்வியப்ப. (௫௭)

உடம்பொடுபொறிநாற்கரணமற்றுயிரொன்றுறைத்திடப்படுமூபாதிக
ளைக்-கடந்துளநிலையிற்சோதியாயிலங்கக்கண்டிடுதுரியனைப்போல *
நெடுந்துவிசமையவமைத்தசெம்மணிப்பொன்னிலைகளோரேழையுங்

கடவா - விடந்தனிவிசும்பென்றல்லமனிருப்பவிருந்தவர் யாவருங்
கண்டார். - - - - - - - - (௫௮)

ஆடினர்சிலவரங்கைகள்கொட்டியல்லமன்பெரியதோர்புகழைப் *
பாடினர்சிலவர்விழிபொழிவெள்ளம்பாய்வுறக்குவித்தகைதலைமேற்
சூடினர்சிலவர்நிலமிசைவீழ்ந்துதொழுதனர்சிலவர்மெய்ப்புளக *
மூடினர்சிலவர்பரவினர்சிலவர்முக்கணனடியவரன்றே. - (௫௯)

இந்தியம்விடயங்கரணமெய்யென்னும்யாவையுங்காண்கிலேனெங்கு *
மந்தரவணைமேலிவர்ந்திருந்தருளுமண்ணலைக்கண்டவப்பொழுதே
முந்தியபரமாநந்தவாரிதியுண்மூழ்கினனழுந்தினனம்மா - *
தந்திரமெவற்றுஞ்சிறந்ததுசைவதந்திரமெனுமருணந்தி. (௬௰)

மண்டலமவத்தைகுணமபிமானமலமிவையனைத்தையுங்கடந்துட் *
கண்டிடும்வண்ணம்புறத்துநீயெம்மைக்காணியவமைத்தவிச்செய்
கை - வெண்டிரைசுருட்டுங்கருங்கடலுலகில்வேறுளர்செய்வதன்றெ
ன்று - தொண்டர்கடுதிக்கும்வசவனைத்துதித்தான்சுரரொலாந்துதிக்
குமெம்பெருமான். - - - - - (௬௧)

உன்னருளுளதேற்கமலன்மாலெழிலுமொருசிறுதுரும்பு செய்கிற்கு
மென்னநல்வசவன்புகன்றுகைகூப்பியிணைவிழிபுனலுகவுருகித் *
தன்னுணர்விலனாய்வசமறநிற்பத்தண்கதிர்ச்செம்மணிகுயின்ற - பொ
ன்னரியணைமேல்விசும்புறவிருந்தான்புல்லருமல்லமதேவன். (௬௨)

சூனியசிங்காதனத்திலிருந்தகதிமுற்றிற்று.

ஆக கதி. ௨௫. திருவிருத்தங்கள் ௲௬௰௬.

*○*○*○*○*○*○* ——— ○*○*○*○*○*○*







# இருபத்துமூன்றாவது - ஆரோகணகதி.

(வேறு.)

ஒருவருண்ணவொருவர்பசிகெடார் *
றனாயிலென்னுந்தகுமொழிபொய்த்திட *
வருளினல்லமனுரும்பசிகெட *
விரவியுண்டமிகுதிவிளம்புவாம். (௧)

தண்ணந்திங்களிற்றண்ணெனத்தன்கதிர் *
வண்ணங்குன்றாருஞாயிறுவார்சிலைப் *
பண்ணங்குன்றுறுபாலைமயிருகனத் *
தெண்ணந்தேவனிருந்தருள்காலையில். (௨)

வசவனுள்ளம்வயல்புகுநீரென *
விசயனல்லமன்மேனிவடிவமா *
யசைவிலன்பிறிதொன்றுமறிந்தில *
விசையுமோவியமென்னவிருந்தனன். (௩)

கழுமணித்தவிசென்றுங்கலத்திடை *
யழிவறத்திகழ்நல்லமனாகிய *
செழிபநற்சுவைசென்னவசவனும் *
விழியினுக்குவிருந்திட்டனனரோ. (௪)

முனிவினைக்கொளுமோளிகைமாரனும் *
வினையினைத்தெறுமெய்ம்மடிவாலனுந் *
துணைநிகர்க்குந்தவிசமர்பூவினை *
மனமெனப்படும்வண்டுறவிட்டனர். (௫)

முன்னிருந்தமுதுக்குறைவாளரும் *
பின்னடைந்தபெரியருமாகிய *

மன்னிருந்தமணித்தவிசின்புடைத் - - *
துன்னியெங்கணுஞ்சூழ்ந்தனர்தொண்டரோ. (௬)

புண்டரந்திருநெற்றியிற்பூசிமெய்க் - *
கண்டியென்றுங்கலனணிவார்சிலர் - *
பண்டைநான்மறையின்பயனாகவே - *
கொண்டவஞ்செழுத்துங்குறிப்பார்சிலர். - (௭)

நந்தனந்தருநாண்மலர்மஞ்சனஞ் - *
சந்தனஞ்சுடர்தண்புகையாதிகொண் - *
டிந்தியங்களெலாமடங்குள்ளமோ - *
டந்திவண்ணனையர்ச்சிப்போர்சிலர். - (௮)

தாவில்பூசனைதாம்புரிகிற்பதித் - - *
பாவெலாஞ்சொலப்பட்டிமைம்புலக் - *
காவல்செய்யுங்கருத்துடையார்தமக் - *
கேவல்செய்தனன்றென்றுசெய்வார்சிலர். (௯)

பூசனைத்தொழில்பூண்பதினெண்மடங் - *
கீசனைத்துதித்தேத்துதனன்றென - - *
ஆசறாத்தவுளமிலராய்ப்புலத் - - *
தூசிநீற்பத்துதிப்பவரோர்சிலர். - (௰)

அங்கலிங்கமயிக்கமிதுவென - - *
மங்கலந்தருமாமறையின்முடித் - *
தங்குறுந்தத்துவமசிதன்பொருள் - - *
பங்கமின்றிப்பகர்பவரோர்சிலர். - (௰௧)

பாசமேதுபசுவெனப்பட்டதே - - *
யீசன்யார்பதியெவ்வகையாருயிர்க் - *
காசதீரவருளுமருளுடைத் - - *
தேசிகாவெனத்தேர்பவரோர்சிலர். - (௰௨)

புறந்தினஞ்செயும்பூசையினன்றெனச் - *
சிறந்தகஞ்செய்தியானமருவிமெய் - *
மறந்திருந்தமனஞ்சிவலிங்கமுற் - - *
றிறந்திடுந்திறமெய்தினரோர்சிலர். - (௰௩)

ஓடிமீளுமுயிர்நின்றிடாதெனி
னீடுமாமனநிற்பதன்றாதலால்
வீடுமேவரிதென்றுவிதிமுறை
நாடிவாயுநிலைபவரோர்சிலர். (௰௪)

இனையராகியிருந்தவக்காலையி
லனையணுகியவல்லமன்றன்னிடை
நினைவெலாமுறநின்றுதமதிடை
மனமிலாதவசவனைக்கண்டனர். (௰௫)

(வேறு)

பெரியவர்சிறியவரொன்றும்பெற்றிமை
யரவணிகடவுடனடியர்தம்முளே
தெரியவனெவனவன்சிறியனேயென
விரிவுறுமறையெலாம்விளம்புமெய்யவே. (௰௬)

ஆவுரித்திடினுநீறணியுமன்பனம்
மாவுரித்தவனெனவணங்கத்தக்கவன்
பூவுரித்தவன்பதம்புனையப்போற்றுற
நாவுரித்தெனமறைநான்குமோதுமால். (௰௭)

வந்தவர்வருபவர்வருகின்றார்களா
மந்தமிலடியர்மாட்டாற்றுஞ்செய்கையைச்
சிந்தனைசெய்கிலன்றேசிகன்செயு
மிந்திரசாலமுற்றிருந்துநந்தியே. (௰௮)

பத்தியிற்றவறினேன்பாலிருந்துநாந்
துய்த்துடற்சுமப்பதிற்றுறத்தனன்றென
மெய்த்தவக்குழாமெலாம்வெருண்டுபோயின
வத்தனற்றண்டநாயகனைவிட்டரோ. (௰௯)

துன்றியமெய்த்தவர்துறந்துபோயபின்
மன்றல்செய்மற்றைநாண்மனையையொத்தொரு
தன்றனிநற்புரந்தனிப்பக்கண்டன
னன்றறிநற்செயனந்திதேவனே. (௨௰)

வழுவினனன்புசெய்வழியையின்றுநான்
குழுவுறுமடியவர்க்குறித்துச்செய்தவிவ்

வொழிவறுமடியினுண்டொழிந்திடாதுதீர்ந்
தழிவுறுமேயெனவகந்தளர்ந்தனன். (உக)

சங்கமபத்திசெய்தண்டநாதனே
அங்கமபத்தஞ்செய்தகைமைபூண்டுநான்
சங்கமபத்தியிற்றவறினேனென்றாற்
சங்கமபத்திசெய்தன்மையெண்மையேயோ. (உஉ)

இழிப்பினும்வெறுப்பினுமில்லினுள்ளன
வழிப்பினுமுடம்பினையரிந்துகொல்லினும்
பழிப்பறுசங்கமபத்திசெய்பவ
ரொழிப்பதுபிறவியென்றுலகமோதுமே. (உ௩)

இம்முறைசங்கமபத்தியெய்திய
வெம்முடைநந்திதனெண்ணமுற்றுற
வம்மடையடிசிலுண்டலமன்மாதவர்
தம்முறுபசியெலாந்தணிப்பவுன்னினான். (உ௪)

ஒருவன்யான்சிறுபசியுடையன்சிற்றுணா
விரைவுறவிடுதிநீவேண்டுமாறுபின்
பரிவுறவடியவர்பாற்செயென்றனன்
பொருவறுவசவனைநோக்கிப்போதகன். (உ௫)

ஐயனுமுனிவுறாதருளும்வண்ணம்யான்
செய்யுநல்வினையெனமகிழ்ந்துதேவனைப்
பையவுண்மனையிடைப்பணிந்துகொண்டுபோய்ப்
பெய்யுமென்மலர்மணிப்பீடத்தேற்றினான். (உ௬)

ஏற்றியவருள்வசவேசனெம்பிரான்
காற்றுணைமலர்களைக்கந்தமஞ்சன
நாற்றமென்மலர்நறும்புகைவிளக்கெனப்
போற்றியவிவைகொடுபூசைசெய்தனன். (உ௭)

பூசனைசெய்தபின்போற்றிநின்றுபொற்
பாசனமமைத்துமென்பதம்படைத்துமேல்
யோசனைகமழ்கறியுமொள்ளிய
போசனமுறையிடப்புரிந்துநந்தியே. (உ௮)

அருந்துகவெனவடிதொழுதுமக்கலந் - *
திருந்தியவமுதுளோரவிழுஞ்சேடியா - *
சருந்தினரேறிமைப்போதினல்லமன் - *
பொருந்தியவவரிறும்பூதராகவே. - (௨௯)

பின்னருமம்முறைபெய்யவையுனவ் - *
வன்னமுமம்முறையருந்திப்பின்னரும் - *
பின்னருமம்முறைபெய்யவுண்டனன் - *
றன்னுலம்வியந்தனன்றண்டநாயகன். (௩௰)

சிறுச்சிறிதனமிடுஞ்செய்கையாலரு - *
ளிறைக்கெழிலுதரவெந்நெருப்பெழுந்ததால் *
விறற்கனலம்முறைவிறகிடக்கனன் - *
றுறப்பெரிதெனவெழுந்தோங்கல்போலவே (௩௧)

னண்ணியவெண்ணியாங்கியற்றுமேவல - *
ரண்ணலும்வருகெனவழைத்துநம்மனைப் - *
பண்ணியபதமெலாம்படையிமென்றலுந் - *
துண்ணெனவனமிடுந்தொழிறொடங்கினர். (௩௨)

(வேறு.)

அளவறுமடியர்க்கெல்லாமாக்கியவடிசிற்குன்றங்
கொளவுறுகூடையோடுகூடைகடாக்கக்கொண்டு - *
வளமுறுகயிலைக்குன்றம்பெயர்த்திவண்வைத்ததென்னத். - *
தளவுறமடிசிலெங்கடம்பிரானெதிர்குவித்தார். - (௩௩)

பருப்பொருபொருப்பெனத்தாம்படைத்தனர்சிலரொடுத்து *
விளைப்புறுநெய்கவிழ்த்துவிடுத்தனர்சிலர்மணக்கும் - *
பொரிக்கறிபளிதம்பாகுபுளிங்கறிபலவுமெல்லா - *
நிரைத்தொருசிலர்சொரிந்துநின்றனர்முகில்கள்போல. (௩௪)

வடைபடுதிகிரியாகமாங்கனிகவண்கல்லாக - - *
வுடைபடுகலைக்கரும்பங்கொண்கதையாகக்கொண்டு - *
கடைப்படுமுலகிற்கெல்லாங்காரியகருத்தன்முன்னர்ப் - *
படைபடையெனச்சொரிந்தார்படைமுகத்திளைஞர்போல ௩௫

குளங்கரையாகவந்தக்குளத்திலுட்பசுவின்றீம்பால் - *
விளங்குறுமமுதவேலைவிடுத்தெனவிட்டார்சிலோ - *

ருளங்கனிமூவர்செய்யுளொத்தமுக்கனியுமேனோர் - *
வளங்கெழுதொடர்புபோதுமற்றையபழமுந்தூர்த்தார். (௩௬)

எண்ணிலடிடுவவெல்லாயினியுணவின்றேவென்றான் - *
கண்ணிமையொடுங்குமுன்னங்கடிதயின்றாதவுருமல் - *
வண்ணமென்மலர்க்கைவாங்கிவறிதிருந்தனனெங்கோன்றேர்ப்
பண்ணவல்பரிக்குமேபசிவுமென்பனவங்குண்டோ. (௩௭)

சற்றினுமுண்கவென்றதமருபசரியாவண்ணஞ் - *
சற்றினுமிடுகவென்றதம்பிரானுண்ணாநின்றான் - *
மற்றதுகண்டுநின்றோர்மட்கலமொழியவேறு - - *
பற்றிலையென்றுநந்திதிருமுகம்பார்த்துச்சொன்னார். (௩௮)

உண்விளையாடல்செய்யுமொருவனைக்கண்டுவெண்மேற் *
கண்விளையாடுநெற்றிக்கடவுண்மெய்யடியாரெல்லாம் - *
விண்விளையாடுஞ்சோலைவியனகரிடத்திற்செல்வப் - *
பெண்விளையாடுந்தம்பிற்பேரணையிடுதற்கெண்ணி - (௩௯)

பாண்டின்மேலேற்றிவந்தும்பானையிற்சுமந்துவந்தும் - *
வேண்டியபாகமுற்றுவேறுவேறுபயன்ன - - *
மாண்டகைக்குரவனுண்ணவளவிலர்சொரிந்துயர்த்தா - *
ருண்டழல்வெறுக்கும்வண்ணமூட்டுவமென்பார்போல (௪௰)

மலைவியனவமலைஞானவாரிமுன்சொரிந்துயர்ப்பா - *
ரிலைமலர்பசுங்காய்கந்தமிளஞ்செழுந்தண்டாற்செய்த *
வுலையமைபல்காயம்பெயொண்கறியமுதுவேறு - *
பலபலமுறைமயங்கப்படைப்பர்வல்விரைந்துவந்து. (௪௧)

குய்கமழ்கறிகளிட்டுக்குவிப்பவர்சிலரெடுத்து - *
நெய்கவிழ்கையராகிநிற்பவர்சிலர்நிரம்பப் - - *
பெய்கவிழ்சொரியென்றுன்பால்பெய்பவர்சிலரளைந்த *
கைகமழ்தயிர்குடத்தாற்கவிழ்ப்பவர்சிலரங்கம்மா. - (௪௨)

இட்டவர்மறியவன்னமிடுதற்குவிரைந்துசெல்வார் - *
மூட்டுவவெதிர்நடந்துமூரல்கைவாங்கிவாங்கிக் *
கொட்டுவரடிசிறந்தகூடைகள்கவிழ்த்தெறிந்து - *
தட்டுவரனம்படைக்குந்தம்பிரானடியாரன்றே. (௪௩)

வென்னையுடையானும்மொழியேயெனத்தமனத்தைத்தேற்றமது *
பின்னையுளதோகதகமலாற்பெருநீர்தெளித்தற்கென்றுரைத்து.(௫௧)

பொறிகள்கரணம்பூதங்கள்புலன்கண்மற்றும்பல்வகைய - *
கறிகளாகவாருயிரோகலந்துண்பதமாநீயுன்னைப் - - *
பெறுகதிலன்யானென்னறின்றுபிறவிப்பிணிதீர்மருத்துவன்ற - *
னறியமலர்மெல்லடிபணிந்தானுமையாளுடையவருணந்தி. (௫௨)

வசவனிலைகண்டருண்ஞானவள்ளலல்லமப்பெயரான் - - *
டசிவபின்வந்தேனலன்பொருட்டுப்பட்டர்காமக்குவந்திலன்யான் *
கசியுநினதுமனத்தன்புகாணவந்தேனென்றேத்தி - - *
யிசையின்மலியுமரனடியார்யாருமகிழவெடுத்தணைத்தான். (௫௩)

கண்போலுயிர்கள்கண்டறியக்கதிர்போற்காட்டும்பெருமானே *
யுண்போன்யாவுமூட்டுமுனக்கூட்டுவேனென்றெழுந்தமையா *
லெண்போதென்போற்பேதையாரில்லையிவலையென்றன்பின் *
பண்போடமலனெதிர்நின்றன்பத்திவடிவமாயினான். - (௫௪)

செம்மைநெறியானருணந்திதேவன்றன்னைப்புகழ்வமோ - *
பொய்ம்மைதிருமல்லமனைப்புகழ்வமோவிங்கவற்றியிவர் - *
தம்மைவிழியாற்காண்பதற்குத்தவஞ்செய்துடலமிதாபெற்ற *
வெம்மையாமேபுகழ்வமோவெனநின்றனர்தம்பிரானடியார். (௫௫)

பரிந்தநந்திமுகநோக்கிப்பசித்தாயொன்றுநீதளரப் - *
பிரிந்தவந்தவடியர்தமைப்பிறங்கலனையநின்மாடத் - *
திருந்தவணங்கிக்கொணர்தியெனவறிவானந்தமயன்கூற - *
விரைந்துவிடைகொண்டெழுந்தன்புவெள்ளஞ்சென்றதவரிடத்தில்.

சென்றவசவனருட்குரவன்றிருமேனியிற்றுலங்கணிந்த - *
மன்றன்மலருஞ்சந்தனமும்வடிவிற்றிகழமடிநிமிர்ந்து - *
நின்றன்முதலகறிமணகத்தேக்குவிடுத்துமுகமலர்ந்து - *
கொன்றைகமழ்வேணியனடியார்குழாங்களிருப்பக்கண்டனனால்.௫௭

கண்டநந்தியடிபணிந்துகடையேன்செய்தபிழையெல்லா - *
முண்டுபொறுமின்வருகவெனவுள்ளங்களிப்புற்றுங்கிருந்த - *
தொண்டர்வசவநின்பெருமைசொல்லவெளிதோவயிறாப் - *
பண்டுபோலவாய்கைதொழிற்படாமையின்றேயின்றென்று. (௫௮)

தேவருண்ணவவியுணவுசெந்தீமுகத்திலிடுதல்போ - ✻
லாலயங்களெலாமேலமுமுணவடிசிலலமன்ற - ✻
னுபமருவவிடுநினையோர்நாவோபுகழுந்தரத்தவதன - ✻
வாயியலை. நந்துஞ்சீரமலனடியார்புகன்றேத்தி. - (௫௯)

உலகிலெலாருவஞ்சிவயோகியுண்டதம்மச்சராசரமா - - ✻
மலிலுயிர்களெலாமுண்டதாகுமெனமறைகூறு. - - ✻
மிகுமுணாவைக்காட்சிபானின்றிக்குணரவணர்த்திறன் - ✻
கலகவினைகடோக்குமருட்கண்ணனின்றிகழமலதேவன். - (௬௰)

ஆதலாலவ்வமலனையருத்தலெம்மையெலாமருத்தல் - ✻
பாதமவனைப்பணிதலெமைப்பணிதலாகுமெஞ்ஞான்றும் - ✻
பேதமில்லைநல்வசவப்பெயரோய்செல்கவென்னமலை - ✻
மாதுடனுழுவகுழைந்துதோள்வள்ளலடியார்தமைவணங்கி. (௬௧)

மீண்டுநந்தியல்லமனூர்மென்பூக்கமலவடியிறைஞ்சி - - ✻
யாண்டபெருமானடியார்களென்னையுண்டவுணவுகரு - - ✻
வீணடமகவுமுன்னைபோலெந்தையுண்டவெலாமுண்டு - ✻
பூண்டமகிழ்வோடிருந்தனர்நீபுனைந்தமரும்புனைந்தென்றான் (௬௨)

மாறனடித்தவடிபட்டமன்றாமுயிரின்றிறமெல்லா - - ✻
மீறிப்புகழ்ச்சங்கணவசவனிட்டவடிசிலுண்டுபசி - - ✻
யாறியிருந்தவாதலினாலல்லமன்பூரணனெனக் - - ✻
கூறுமொழிமெய்மெய்யென்றுகூறியுலகங்களித்ததால். - (௬௩)

இவ்வாறருந்தியமைதிபெறுமெங்கள்பரமயோகிதான் - ✻
றெவ்வாகிபவைம்புலம்வென்றதிறல்கூர்வசவன்றனைமகிழ்ந்து ✻
சைவாகமமுநான்மறையுஞ்சாற்றும்பொருளையுணர்த்துதற்குச் ✻
செவ்வாய்மலரத்திருவுள்ளஞ்செய்துதவிவீற்றிருந்தனனால். (௬௪)

ஆரோகணகதிமுற்றிற்று.

ஆ. கதி · உ௱இ திருவிருத்தங்கள் · ஆ௱௰.



# இருபத்துநான்காவது —

# மனோலயகதி.

(வேறு.)

மயக்குதலின்றிடமனோலயமெய்திற் - *
சயந்தருமுத்திதலைப்படுமென்று - - *
நயந்தருமல்லமநாதன்விளங்க - - *
வியம்பியவண்ணமியம்புதுமன்றே. - (௧)

பத்தர்கடங்கள்பசிக்குணவாமையன் - *
றத்துவநல்குகருத்தொடுதங்க - - *
வத்தலையன்பொடகங்குழைகின்ற - - *
வித்தகநந்திவிளம்புவனன்றே. - - (௨)

விருப்புவெறுப்புருவாம்விடயத்தோ - *
டிருக்குமயற்சகமென்பதிலாமற் - - *
பரப்பிரமத்தியல்பார்ப்பதெனக்குத் - *
தெரித்தருளென்றுரைசெய்துதுதித்தான். (௩)

அன்னனுமார்வமடைந்தருணந்தி - *
மன்னுலகோர்தமைமாறுபுஞானக் - *
கண்ணுறுமாறுகடாவினனென்று - - *
புண்ணியனோடுபுகன்றிடுகின்றான். - (௪)

யானெனதென்பதிருந்திடுகாறு - - *
ஞானமுறாதுநண்ணியதாகிற் - - *
றுணிவிலாதசுகந்திகழ்கிற்குந் - - *
தீனமிலாதசிவந்திகழாதே. - - (௫)

கறங்கெனுமாறுழல்கின்றகருத்துப் - *
பிறந்திறவாதபெரும்பிரமத்து - - *
விறந்திடியானெனதென்றுமகந்தை - *
மறைந்திடுமன்றிமறைந்திடுமோதான். - (௬)

யானிதுசெய்வலெனக்கிதுசெய்வ
ரோனையொன்னவிருந்தகருத்தான்
மேனிகழ்முத்திவிரும்பவிருட்டாற்
பானுவைமேவுறுபற்றைநிகர்க்கும். (௭)

இருவினைதாம்வரும்யானெனலாலவ்
விருவினையால்வருமிம்பொறிதன்ப
மிருவினையானெனவின்றெனிலில்லை
யிருவினையில்லெனிலில்லைபிறப்பே. (௮)

மனத்தையடக்கமனந்துணையாகும்
பினைத்துணைபின்றதுபெற்றனனாயிற்
றனிச்சிவமேயொருதானெனவாழ்வ
னினைத்துமறந்துநிலத்துழலானே. (௯)

வாரணமாகுமனத்தையடக்கிற்
காரணமாயைகளைந்தொழியாத
பூரணமாகியபோதமடைந்திட்
டாரணமோதுமரும்பொருளாவான். (௰)

(வேறு.)

விரிந்தநெஞ்சங்கருவியாம்விடயமுணரவிரியாம
லொருங்குநெஞ்சங்கருவியாந்தன்னையுணரவொருங்காமல்
விரிந்தநெஞ்சமுடையவனைவிடாதுபிறவியென்றுணர்க
வொருங்குநெஞ்சமுடையானையுறாதுபிறப்பென்றுணர்கவே. (௰௧)

அந்தக்கரணசுத்தியேயறிவையறிதற்சாதனமவ்
வந்தக்கரணசுத்திதனக்கறையுங்கருமமாரணங்க
ளந்தக்கரணசுத்திதானாவதவாவற்றிடுதலே
யந்தக்கரணசுத்தியினாலடைவன்பின்னட்பெயரன்றே. (௰௨)

ஆசையறுதல்வீட்டின்பநேரேயடைதற்காரணமா
மாசையறுதலலதில்லைப்பலநூலனைத்துமாய்ந்திடினு
மாசையறுவோர்சிவனாதற்றிண்ணமெனநன்றறிந்திருந்து
மாசையுறுதலெல்கொண்டோவந்தோமனிதரறியேமே. (௰௩)

ஆசுதீர்ந்தமனத்தினிடையன்றியுணர்வுதோன்றாது
மாசுதீர்ந்தவாடியிடையன்றிவதனந்தோன்றுமோ

பாசநீங்குபரஞ்சுடரோ நினைக்குறினைவா றபற்றுமனங்
காசநீங்குகண்போலத் தன்னைக்காணவிளங்குமால் - (௰௪)

வானமல்லேன் வளியல்லேனழனீரல்லேன் மண்ணல்லேன் - *
ஞானமல்லேன் வினையல்லேனானேசிவமென்றெண்ணினோ - *
னூனையல்லாவொருசிவமேயாவனிவ்வாறுன்னுதா - - *
னீனமெல்லாமுடையவுடம்பெடுத்துச்சுழலுமென்றுஞான்றும். (௰௫)

தன்னைச்சிவமென்றறிந்தவனையறிந்தான்றன்னையுண்மையாத் *
தன்னைச்சிவமென்றறியாதானறியானென்றுந்தன்னுண்மை - *
தன்னைச்சிவமென்றென்றறிவனன்றேபாசந்தனைநீப்பன் - *
றன்னைச்சிவமென்றறியாதான்றனக்குப்பிறப்பேதுணையாகும்.(௰௬)

தன்னைப்பேதமாய்க்காண்கைசகத்திற்காணப்பட்டதாந் - *
தன்னைப்பேதமறச்சிவமென்றறிவோன்ஞானிசீரொருவ -, *
னொன்னக்கருதிமறையதுநீயாகுமென்னவத்துவிதந் - *
தன்னைப்புகலுங்கண்டதனைச்சாற்றன்மறையின்கருத்தன்றே. (௰௭)

தூய்தாகியநெஞ்சுடையார்க்குத்தாமேசிவமாத்தோன்றுமாந் *
றீதாகியநெஞ்சுடையார்க்குத்தெளியவபேதமிகலின்றி - *
வேதாகமங்கள்விளம்பிடினும்விளங்காதென்றும்வேறென்றும் *
வாதாவழிவரவர்மாயைமயக்கமயங்குமதியினார். - (௰அ)

நெஞ்சஞ்சோகம்பாவனையினித்தநிறுத்திவிடயங்க - - *
ளஞ்சுநீத்துவரத்துறந்தசிவயோகியொருவனடியினையிற் - *
றுஞ்சுந்திருமான்முதலமரருள்ளமவனைத்துதித்திறைஞ்சா - *
நெஞ்சுந்தவமாமுனிவரிலையெனநான்மறையுமியம்புமால். (௰௯)

ஒன்றுகருணைபொழிவிழியெங்கோமானுண்மையினிதியம்ப - *
நின்றவசவராயனுளமழல்சேர்மெழுகினெக்குருகிச் - *
சென்றுகுரவனடிபணிந்தான்சென்னவசவன்முதலாகத் - *
துன்றுசரணருய்ந்தனம்யாமென்றுதுதித்துத்தொழுதனரால் (உ௰)

இவ்வாறருவாற்றனையுணர்த்தியிருந்தஞானவியல்வீர - *
சைவாசிரியனல்லமணித்தனையிற்பருவந்தலைசிறப்ப - - *
வுய்வானினைந்துதனைநோக்கியுற்றவடியார்க்குபதேசஞ் - *
செய்வானியன்றவடிவொடுசென்றருள்செய்செயல்செய்துலாவினான்

மனோலயகதிமுற்றிற்று. ஆக - கதி - உசஇ. திருவிருத்தங்கள் - தூாகூ.

# இருபத்தைந்தாவது -
# மான்மியகதி.

(வேறு)

வியனில்மேவியவிழுமியோர்க்கெலாஞ்
செயிரறுமல்லமன்செய்தநன்றியைக்
கயிலையினுதல்விழிக்கடவுடன்புடை
மயிலியலொடுசொலுமாறுகூறுவாம். (௧)

ஆயிடையருணந்தியாதிமாதவர்
நேயமோடமர்வுறநிறுவியல்லமன்
மாயிருஞாலமேன்மானிடர்க்கெலாம்
போயருள்செயுந்தொழிலபூண்டனனரோ. (௨)

இன்னணமல்லமனிருநிலத்துறத்
தன்னிகர்கயிலையிற்சிங்கந்தாங்கிய
பொன்னணைமிசையமர்புராரிதன்னொடு
பின்னணிமுலையுமைவிளம்பன்மேயினாள். (௩)

அல்லமனருள்பெறற்கடைந்தநந்தியோ
டெல்லையினிக்கணமெனத்தநற்கலை
மெல்லியனிலமிசைமேவிச்செய்ததென்
சொல்லுதியெனவுமையிறைவன்சொல்லினான். (௪)

நந்திநல்வசவனுநாமங்கொண்டமர்ந்
தந்தமிலெம்மடியவனையாமெனப்
புந்திசெய்தவர்விழைபொருளளித்தமண்
சிந்தியநிலமிசைச்சிறப்புற்றனரோ. (௫)

அறஞ்செயுநின்கலையாகுமங்கைபோய்ச்
சிறந்துளவுலகின்மாதேவிப்பேர்பெறீஇ
மறஞ்செயுமதன்வலிமாளமாய்த்தெலாந்
துறந்தனள்குரவனைத்தருவிப்போயினாள். (௬)

நன்றுணிய நங்கணநாதர்தாமுமக் - - *
கண்ணைகன் ஞானமுற்றெமைமக்காணிய - *
வண்ணநல்வினைகள் பல்வகைபுரிந்தவ - *
ரெண்ணிய பலநகரிடத்துவைகினர். - (எ)

அளக்கருர் விரதராயவரிருந்திடத் - - *
துளக்கமின்னிலையுடைத்தூயவலமன் - *
கொளக்குறைபடாதபேரின்பங்கூட்டுண - *
விளக்கினனுலகினில்வீரசைவமே. - (அ)

(வேறு.)

எவ்வகைச்சமயத்திற்குமிறைவனேயெனினுநேயஞ் - *
செய்நற்சமயத்தாற்றாஞ்சைவத்தும்வீரசைவத் - *
தவயாற்பிறவிநீக்குமாலமன்விருப்பமுள்ளான் - *
மெய்யர்க்குயமெனுங்கண்மடவராலென்றான்வள்ளல். - (கூ)

சமயமெவ்வகையினுந்தான்சைவமேலாயதெல்கொ - *
லமைபுநல்வீரசைவமன்னினுஞ்சிறந்ததெல்கொ - *
லிமைபடவர்பரவுமுக்கணெம்பிரானருள்செய்யென்ன - *
வுமைபவள்விலவவேழமுரித்தவன்விளம்புமன்றே. - (௰)

உரைக்குமெச்சமயத்திற்குமுத்தரபாகஞ்சைவந் - *
தரிக்குமச்சைவத்திற்குத்தமமெனவீரசைவந் - - *
தெரிக்குநற்காமிகாதிசிரத்தினிற்றிகழுங்கண்டா - *
யரிக்குநர்சிலம்பரற்றுமடிமலர்த்தடங்கணல்லாய். - (௰க)

புறந்தருசமயம்புக்குப்புறமலாச்சமயத்தெய்தி - *
யறந்தருசைவமுற்றுங்கதிர்சரிதாதியாற்றிச் - - *
சிறந்தவவ்வீரசைவஞ்சேர்ந்தபின்வீடுநண்ணு - *
நயுநருளிர்கவற்றுமேனிநனைமலர்வலவியன்றாய். - (௰உ)

அருமறைமுடியுஞ்சீர்சாலாகமமுடியுமோதத் - *
பொருமறமிலாமன்முற்றும்பொருளினைவிளங்கக்காட்டித் *
தருபுறையகற்றல்வீரசைவமேதலைமைத்தாமிவ் - *
விருமறுவறுநன்னூலுமிதிற்பிரமாணமாகும். - (௰௩)

ஒன்றொருவிடயந்தன்னையுருசுவைநிறைவென்றாக்கி *
யென்றுமெய்ம்முகத்தளித்திட்டெம்பிரசாதங்கொண்டு *
நின்றாறாகருமமுன்றாத்தூய்மையிவ்வீரசைவத் *
தன்றிவேறொருமார்க்கத்தினடுக்குமோவடுக்குமாதே. (௰௪)

ஆதலால்வீரசைவத்தறிவினையறியச்செய்தான் *
மாதர்மாதேவியாமுன்வண்கலைமாதினுக்கு *
மேதையாம்வசவனாதிமெய்யடியவர்க்குஞான *
போதகாசிரியனென்னும்பொருவிலல்லமன்வேற்கண்ணாய் (௰௫)

பருவபேதத்தாற்பேதப்படும்பொருள்பருவங்கண்டு *
திரிவின்மாமுனிவர்யோகர்சித்தர்கண்முதலானோர்க்குப் *
பொருவிலாவல்லமப்பேர்புண்ணியனாபுகன்று கொண்டான் *
குரவவார்குழலடைந்தாயுன்றனக்குன்றவில்லி. (௰௬)

அம்மையுமகிழ்வுபொங்கவல்லமன்பெருமைகேளா *
மம்மர்செய்துளங்கலக்குமாயையைக்கடந்தனென்றன் *
மெய்ம்மைநின்பவளவாயால்விளம்பநானறிந்தேனென்று *
மும்மதில்வலிதொலைத்தமுக்கணாயனைத்தாழ்ந்தாள். (௰௭)

அங்குமைமாதினோடுமல்லமன்பெருமைகூறித் *
திங்கள்வெண்முகிழ்புனைந்தசெஞ்சடைப்பரமன்மேவ *
விங்கருண்மேகமென்னுமிணையிலெங்குருகுகேசன் *
மங்கலமுத்தியின்பம்வழங்குமத்தொழிலினின்றான். (௰௮)

மூத்தவரிளைஞர்நோயர்முகிழ்முலைமாதர்நல்ல *
தீத்தொழிலாளர்பொல்லாத்தீத்தொழிலாளரொன்றும் *
பார்த்திலன்யாவர்மாட்டும்பரிந்தருண்மாரிபெய்து *
காத்தனனமலஞானகாரணன்குருகுகேசன். (௰௯)

இன்னவாறருளினானேயிவருறவிவர்வேறென்னா *
தன்னைபோலுயிர்கட்கெல்லாமாரருளொருங்குசெய்தே *
யென்னையாளெனக்கொண்டானுமிணையடிக்குருகுகேசன் *
மன்னுமாதவர்கணெஞ்சமலர்தொறும்வாழாநின்றான். (௨௰)

எல்லொளியிரவிபோலவிருண்மலமிரித்திலங்கு *
மல்லமன்சரிதமோதிலறம்பொருளின்பம்வீடாம் *

நல்லனபயனோர்நான்குநண்ணுவனிதனைக்கேட்க - *
வல்லநல்வினையினானுமற்றவைமருவிவாழ்வன். - (௨௧)

மதியிலார்மதிஞராவர்மகவிலார்மகவுயிர்ப்பர் - - *
நிதியிலார்நிதியடைப்பர்நிலையிலார்நிலைத்துவாழ்வர் - *
பதியிலார்பதிகிடைப்பர்பழுதிலிவ்விருபத்தைந்து - *
கதியினானிரம்புகாதைகற்றவர்கூறக்கேட்பின். - (௨௨)

பார்கெழுசகாத்தமூவைஞ்ஞூற்றெழுபானான்காவ - *
தாகியகரநாமங்கொளாண்டுறுவிடைஞாயிற்றிற் - *
சீர்கெழுமல்லமன்றன்றிருவிளையாடற்காதை - - *
கார்கெழுமிடற்றெங்கோமான்கருணைகொண்டியம்பினேனே.

புண்ணியருலகில்வாழ்கபுலஞ்செறுநோன்புவாழ்க - *
பெண்ணொருபாகன்பூசைபேணிவாழடியர்வாழ்க - *
கண்ணுதலொருவற்சார்ந்தகற்புடைச்சைவம்வாழ்க - *
வண்ணலல்லமன்சீர்கேட்குமாதரவாளர்வாழ்க. - (௨௪)

மான்மியகதிமுற்றிற்று.

ஆக-கதி-௨௫௰-திருவிருத்தங்கள்-௲௫௫.

# பிரபுலிங்கலீலை




துறைசை-சிவப்பிரகாசதேசிகர்திருவடிவாழ்க.

# பிழை திருத்தல்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தல். |
|---|---|---|---|
| ௭ | ௰௬ | சித்தர்க்குழாத்தை | சித்தர்குழாத்தை |
| ௰௧ | ௰௮ | மாணிக்கவாசர் | மாணிக்கவாசகர் |
| ௰௫ | ௯ | தன்மையினில்லாமை | தன்மையில்லாமை |
| ௨௪ | ௰௨ | குழவியாகி | குழவியாய் |
| ௸ | ௨௨ | பிரந்தமை | பிறந்தமை |
| ௩௫ | ௧ | புகன்று - சென்று | புகன்று - துதித்து |
| ௪௰ | ௨௫ | விரகாளியும் | வீரகாளியும் |
| ௪௩ | ௫ | மத்திரம் | மாத்திரம் |
| ௪௬ | ௨ | சொல்லுதற்கு காரணம் | சொல்லுதற்குக்காரணம் |
| ௫௧ | ௰௯ | விளவதெய்தி | வீளவலத்தெய்தி |
| ௫௭ | ௨ | உடைத்து | உளது |
| ௸ | ௩ | யொன்றுடைத்தென்ற | யொன்றுளதென்ற |
| ௬௮ | ௩ | விரித்துரைத்தமை | விரித்துரையென்றமை |
| ௮௪ | ௨௩ | மிஞ்றிரைந்தெழ | மிஞ்றிறைந்தெழ |
| ௮௫ | ௧ | பலவகைய | பலவகையமாந்தியும் |
| ௮௭ | ௩௰ | யனைபவர் | யனைபவர் |
| ௯௰ | ௨௪ | இரத்னகோவை | அரதனக்கோவை |
| ௯௮ | ௰௯ | மயிலெழுந்தன | மயிலெழுந்தென |
| ௸ | ௨௩ | துயிலெழுந்தன | துயிலெழுந்தென |
| ௸ | ௨௫ | வெயிலெழுந்துண | வெயிலெழுந்தென |
| ௱௭ | ௰௯ | கலசநீரும் | கலசநீருமாகிய |
| ௱௰ | ௨௰ | கையாலலங்கரிக்க [யை | அலங்கரிக்க [த்தை |
| ௱௰௯ | ௰ | அழகியகுண்டலமணி | அழகியமணிக்குண்டல |
| ௸ | ௰௯ | மோதிரமும் | மோதிரமுமாகிய |
| ௸ | ௨௫ | அவையவ | அவயவ |
| ௱௨௰ | ௩௰ | மகளிர் | மாதர் |
| ௱௨௧ | ௪ | ஞானந்தச்சூரியன் | ஞானந்தசூரியன் |
| ௸ | ௮ | ஞானந்தச்சூரியன் | ஞானந்தசூரியன் |
| ௱௨௩ | ௰௭ | தேசம்யெது | தேசமேது |
| ௱௩௰ | ௨௬ | கரியகண்களையுமட | கரியகண்களையும்மட |
| ௱௪௩ | ௫ | பிறையோசன | பிரயோசன |
| ௸ | ௰௨ | தாணியோயிங்கே | தாணியோவிங்கே |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ஷெ | ௰௯ | தன்னிற் | தன்னில் |
| ஷெ | ௨௪ | நன்றரோ | நன்று |
| ௱௪௫ | ௩௨ | பெற்ற- | |
| ௱௪௭ | ௨௩ | கண்ணகநிலத்தில் | கண்ணகனிலத்தில் |
| ௱௪௮ | ௨௫ | பேசத்துடங்கினாள் | பேசத்தொடங்கினாள் |
| ௱௪௯ | ௨ | பிறையோசனத்தை | பிரயோசனத்தை |
| ௱௫௰ | ௰௪ | யிரண்டுமாதரு | இரண்டுமாதரு |
| ௱௫௪ | ௰௩ | மெய்மைச்சிவமே | மெய்மைசிவமே |
| ஷெ | ௰௫ | பொருளாய்த்துணிந்து | பொருளாத்துணிந்து |
| ௱௫௬ | ௰௭ | மெய்மைச்சிவமே | மெய்மைசிவமே |
| ௱௫௭ | ௰௧ | போய்திரும்பும் | போய்த்திரும்பும் |
| ஷெ | ௨௨ | நின்றும் | நின்று |
| ௱௫௮ | ௭ | திரண்ட | திரண்டு |
| ஷெ | ௰ | திருந்தயிருவர் | திருந்தவிருவர் |
| ௱௫௯ | ௰௪ | பெற்றவவற்க்கு | பெற்றவவர்க்கு |
| ௱௭௩ | ௰௪ | சொல்லி | சொல்லியழைக்க |
| ௱௭௭ | ௨௰ | எள்ளினெண்ணெ | எள்ளிலெண்ணெ |
| ௱௭௮ | ௰ | அல்லமனீங்கி | அல்லமனீங்கி |
| ௱௮௰ | ௫ | சதாசிவஞாதன் | சதாசிவநாதன் |
| ௱௯௧ | ௰௫ | மாயயையை | மாயையை |
| ௱௯௪ | ௧ | பற்களையுடைய | பற்களையுடைய |
| ஷெ | ௨௭ | மயினமர்த்து | மயிலமர்த்து |
| ௱௯௫ | ௫ | நெருங்கயோகி | நெருங்கியோகி |
| ௱௯௮ | ௨௪ | மென்று | மென்றுரேதல்போல |
| ௨௱௨ | ௨௪ | சொல்லிவிக்குந்தகுதி | சொல்விக்குந்தகுதி |
| ஷெ | ௩௰ | வரினைக்கும் | வரிநினைக்கும் |
| ௨௱௫ | ௰௧ | முயர்ச்சி | முயற்சி |
| ௨௱௭ | ௩௰ | பேதமை | பேதைமை |
| ௨௨௮ | ௨௫ | தெல்றிசைக்கயிலை | தென்றிசைகயிலை |
| ௨௱௭ | ௫ | நம்மைநோக்கினர் | தம்மைநோக்குநர் |
| ஷெ | ௯ | புகன்றனிர் | புகன்றநிர் |
| ஷெ | ௰௫ | வார்குழற்பேதை | வார்குழல்பேதை |
| ௨௪௫ | ௨௨ | ஞானகுரவனை | ஞானக்குரவனை |